## 1. எண்

[எழுத்து இன்னதென்பதும் அதன் வகையும்.]

**58. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி**
**எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.**

**இ - ள்.** மொழி முதற்காரணம் அணுத்திரள் ஆம் ஒலி எழுத்து-மொழிக்கு முதற்காரணமும் அணுத்திரளின் காரியமுமாகிய ஒலியாவது எழுத்து—அது முதல் சார்பு என இருவகைத்து - அது முதலெழுத்துஞ் சார்பெழுத்து மென இருவகையினையுடைத்து. எ - று.

அணுத்திரள் - அணுக்கூட்டம். இங்கே அணுவென்றது செவிப்புலனுமணுவை; அதுஒலி நுட்பம். மொழிக்கு முதற் காரணம் எழுத்தானாற்போல, எழுத்திற்கு முதற்காரணம் அணுக்கூட்டமாம் அணுக்கூட்டத்தின் காரியம் எழுத்தானாற் போல எழுத்தின் காரியம் மொழியாம்.

காரியமாவது ஆக்கப்பட்டது. காரணமாவது காரியத்திற்கு இன்றியமையாததாய் அதற்கு முற்காலத்திருப்பது. முதற் காரணமுந் துணைக்காரணமுமெனக் காரணம் இருவகைப்படும். முதற்காரணமாவது காரியத்தோடொற்றுமையுடையது. துணைக் காரணமாவது முதற்காரணத்திற்குத் துணையாய் அதுகாரியப் படுமளவும் உடனிகழ்வது. குடங் காரியம்; அதற்கு முதற்கா ரணம் மண்; துணைக்காரணந் திரிகை. மொழி காரியம்; அதனின் வேறாகாது அதனோடு ஒற்றுமையுடையது எழுத்தாதலால், அதற்கு எழுத்து முதற்காரணம். எழுத்துக்காரியம்; அதனின் வேறாகாது அதனோடு ஒற்றுமையுடையது செவிப்புலனுமணுவாத லால், அதற்கு அவ்வணு முதற்காரணம். (3)

[முதலெழுத்தின் விரி.]

**59. உயிரு முடம்புமா முப்பது முதலே.**

இ - ள். உயிரும் - உயிரெழுத்துப் பன்னிரண்டும்— உடம்பும் - மெய்யெழுத்துப் பதினெட்டும்—ஆம் முப்பதும் முதல் - ஆகிய முப்பதெழுத்தும் முதலெழுத்தாம். எ - று.

[சார்பெழுத்தின் வகை.]

**60.** உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.

இ - ள். உயிர்மெய் - உயிர்மெய்யும் — ஆய்தம் - ஆய்தமும்—உயிரளபு - உயிரளபெடையும் — ஒற்றளபு - ஒற்றளபெடையும் — அஃகிய இ - குற்றியலிகரமும்— (அஃகிய) உ - குற்றியலுகரமும்—(அஃகிய) ஐ - ஐகாரக் குறுக்கமும்—(அஃகிய) ஔ - ஔகாரக் குறுக்கமும்— (அஃகிய) மஃகான் - மகரக்குறுக்கமும்—(அஃகிய) தனிநிலை ஆய்தக் குறுக்கமும்—பத்துஞ் சார்பெழுத்து ஆகும் - ஆகிய பத்துஞ் சார்பெழுத்தாகும். எ - று.

அஃகுதல் - சுருங்குதல். தனிநிலை - ஆய்தம். (5)

[சார்பெழுத்தின் விரி.]

**61.** உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறு றைகான் மூன்றே
ஔகா னொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப.

**இ - ள்.** உயிர் மெய் இரட்டு நூற்றெட்டு - **உயிர்மெய்** இருநூற்றுப்பதினாறு—உயர் ஆய்தம் எட்டு - முற்றாய்தம் எட்டு—உயிரளபு எழுமூன்று - உயிரளபெடை இருபத்தொன்று—ஒற்றளபெடை ஆறேழ் - ஒற்றளபெடை நாற்பத்திரண்டு—அஃகும் இ முப்பானேழ் - குற்றியலிகரம் முப்பத்தேழு—(அஃகும்) உகரம் ஆறாறு - குற்றியலுகரம் முப்பத்தாறு — (அஃகும்) ஐகான் மூன்று - ஐகாரக் குறுக்கம் மூன்று—(அஃகும்) ஔகான் ஒன்று - ஔகாரக் குறுக்கம் ஒன்று—(அஃகும்) மஃகான் மூன்று - மகரக் குறுக்கம் மூன்று—(அஃகும்) ஆய்தம் இரண்டொடு - ஆய்தக் குறுக்கம் இரண்டுடனே — சார்பெழுத்து உறு விரி ஒன்று ஒழி முந்நூற்றெழுபான் என்ப - சார்பெழுத்தினது மிகுந்த விரி முந்நூற்றறுபத்தொன்பதாம் என்று சொல்லுவர் புலவர். எ - று.

இவை இத்தனையவாதல் அவ்வவற்றின் பிறப்பிலக்கணத்திற் காண்க. (6)

**பரீக்ஷை வினாக்கள்:**—3. எழுத்தாவது யாது? இங்கே அணுவென்றது எவ்வணுவை? செவிப்புலனுமணுவென்றது என்னை? காரியமாவது யாது? காரணமாவது யாது? முதற்காரணமாவதியாது? துணைக்காரணமாவது யாது? எதனாலே குடங்காரியமெனப்படும்? எதனாலே குடத்திற்கு மண்ணுந் திரிகையுங் காரணமெனப்படும்? எதனாலே குடத்திற்கு மண் முதற்காரணம்? எதனாலே குடத்திற்குத் திரிகை துணைக்காரணம்? எழுத்திற்கு முதற்காரணம் யாது? எதனாலே? எழுத்தின் காரியம் யாது? எழுத்தெத்தனை வகைப்படும்? 4. முதலெழுத்து எத்தனை வகைப்படும்? முதலெழுத்தெத்தனை? 5. சார்பெழுத்து எத்தனை வகைப்படும்? 6. உயிர்மெய்யெழுத்து எத்தனை? முற்றாய்தமெத்தனை? உயிரளபெடையெத்தனை? ஒற்றளபெடையெத்தனை? குற்றியலிகரமெத்தனை? குற்றிய

லுகரமெத்தனை? ஐகாரக் குறுக்கமெத்தனை? ஔகாரக் குறுக்கமெத்தனை? மகரக்குறுக்கமெத்தனை? ஆய்தக்குறுக்கமெத்தனை? ஆகச்சார்பெழுத்தெத்தனை?

---

## 2. பெயர்

[பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணம்.]

**62. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.**

**இ - ள்.** இடுகுறி காரணப்பெயர் - இடுகுறிப் பெயருங் காரணப்பெயருமாகிய இரண்டும்—பொதுச் சிறப்பின - பல பொருளுக்குப் பொதுப்பெயராயும் ஒவ்வொரு பொருளுக்கே சிறப்புப் பெயராயும் வருவனவாம். எ - று.

இடுகுறிப்பெயராவது ஒருகாரணமும் பற்றாது வழங்கி வரும் பெயர். காரணப்பெயராவது யாதேனுமொரு காரணம் பற்றி வழங்கிவரும் பெயர்.

**உதாரணம்.** மரமென்பது, ஒருகாரணமும் பற்றாது வழங்கும் பெயராய், மா பலா முதலிய பல பொருள்களுக்கும் பொதுவாய் நிற்கையால், இடுகுறிப்பொதுப்பெயர். மா பலா என்பன, ஒரு காரணமும் பற்றாது வழங்கும் பெயராய், ஒவ்வொரு பொருளுக்கே சிறப்பாய் நிற்கையால், இடுகுறிச் சிறப்புப்பெயர். அணியென்பது, அணியப்படுதலாகிய காரணம் பற்றி வழங்கும் பெயராய், இடுவன தொடுவன கட்டுவன கவிப்பன முதலிய ஆபரணங்கள் பலவற்றிற்கும் பொதுவாய் நிற்கையாற், காரணப்பொதுப்பெயர். முடி கழல் என்பன, முடியிற் கவிக்கப்படுவதுங் கழலிற் கட்டப்படுவதுமாகிய காரணம் பற்றி வழங்கும் பெயராய், ஒவ்வொரு பொருளுக்கே சிறப்பாய் நிற்கையாற், காரணச் சிறப்புப்பெயர்.

இனி இரட்டுறமொழிதலென்னும் உத்தியால் இச்சூத்திரத்திற்கு வேறுமொருபொருள் உரைக்கப்படும்; அது வருமாறு:—

இடுகுறிகாரணப்பெயர் - இடுகுறியென்றுங் காரணமென்றுஞ் சொல்லப்படும் இலக்கணங்களையுடைய பெயர்கள்—பொது - இடுகுறிகாரணமென்னும் இரண்டற்கும் பொதுவாயும்—சிறப்பின - இடுகுறிக்கே சிறப்பாயுங் காரணத்திற்கே சிறப்பாயும் வருவனவாம். எ - று. எனவே, இடுகுறிப்பெயர் காரணப்பெயர் காரண இடுகுறிப்பெயர் எனப் பெயர் மூவகைப்படு மென்றாராயிற்று.

காரண இடுகுறிப்பெயராவது, காரணங் கருதியபொழுது அக்காரணங்களையுடைய பல பொருள்களுக்குஞ் செல்வதாயும், காரணங் கருதாத பொழுது இடுகுறியளவாய் நின்று ஒவ்வொரு பொருட்கே செல்வதாயும் உள்ள பெயராம்.

உ - ம். பொன் என்பது இடுகுறிப்பெயர். பொன்னன் என்பது காரணப்பெயர். முக்கணன், அந்தணன், முள்ளி, கறங்கு என்பன காரண இடுகுறிப்பெயர். முக்கணன் என்பது, காரணங் கருதியபொழுது விநாயகக்கடவுள் முதலிய பலர்க்குஞ் செல்லுதலாலும், காரணங் கருதாத பொழுது இடுகுறியளவாய்ச் சிவபெருமானுக்குச் செல்லுதலாலும், காரண இடுகுறிப்பெயராயிற்று. மற்றைப்பெயர்களுக்கும் இப்படியே காண்க. (7)

[எழுத்தின்பெயர்.]

**63.** **அம்முத லீரா றாவி கம்முதன்**
**மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.**

**இ - ள்.** அம்முதல் ஈராறு ஆவி (என) - நெடுங்கணக்கினுள் அகரமுதலிய பன்னிரண்டனையும் உயிரெழுத்தென்றும்—கம்முதல் மூவாறு மெய் என - ககரமுதலிய பதினெட்டனையும் மெய்யெழுத்தென்றும்—விளம்பினர் புலவர் - சொன்னார் அறிவுடையோர். எ - று.

அகரமுதலிய பன்னிரண்டும் உயிர்போலத் தனித்தியங்கும் வன்மையுடைமையால் உயிரெனவும், ககரமுதலிய பதினெட்டும் உயிரோடு கூடியல்லது இயங்கும் வன்மையில்லாத மெய்போல

அகரத்தோடு கூடியல்லது இயங்கும் வன்மையில்லாமையால் மெய்யெனவும் பெயர் பெற்றன. இவை உவம ஆகுபெயராய்க் காரணப் பொதுப் பெயராயின. பிறவும் இப்படியே வருதல் காண்க. (௮)

**64.** அவற்றுள்,—
அ இ உ எ ஒக்குறி லைந்தே.

இ - ள். அவற்றுள் - ஆவியுமெய்யுமென்றவற்றுள்— அ இ உ எ ஒ ஐந்து குறில்-அ இ உ எ ஒ என்னும் ஐந்துங் குற்றெழுத்தாம். எ - று. (9)

**65.** ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில்.

இ - ள். ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ நெடில் - ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் ஏழும் நெட்டெழுத்தாம். எ - று. (10)

**66.** அ இ உம்முதற் றனிவரிற் சுட்டே.

இ - ள். அ இ உ - அ இ உ என்னு மூன்றும்—முதல் தனிவரின் சுட்டு - மொழிக்கு முதலிலே தனித்துச் சுட்டுப் பொருளைக் காட்டவரிற் சுட்டெழுத்தாம். எ - று.

முதலெனப் பொதுப்படச் சொன்னதினாலே, புறத்தும் அகத்தும் வருமெனக்கொள்க.

உ - ம். அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன், புறத்து வந்தன. அவன், இவன், உவன் அகத்து வந்தன.

அகரந் தூரத்தினுள்ள பொருளையும், இகரஞ் சமீபத்தினுள்ள பொருளையும், உகரம் நடுவினுள்ள பொருளையுஞ் சுட்டுதற்கு வரும். (11)

**67.** எ யா முதலும் ஆ ஓ வீற்றும்
ஏ யிரு வழியும் வினவா கும்மே.

இ - ள். எ யா முதலும்-எகரமும் யாவும் மொழிக்கு முதலிலும்—ஆ ஓ ஈற்றும்-ஆகாரமும் ஓகாரமும் மொழிக்கு இறுதியிலும்—ஏ இருவழியும் - ஏகாரம் இவ்விரண்டிடத்தி லும்—(தனிவரின்) வினா ஆகும் - தனித்து வினாப்பொரு ளைக் காட்டவரின் வினாவெழுத்தாம். எ - று.

மேலைச் சூத்திரத்திலே 'தனி வரின்' என்றது இதற்குங் கூட்டப்பட்டது. ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தலென்னும் உத்தியால் உயிர்மெய்யாகிய யாவினாவும் உடன் கூறப்பட்டது. இவை புறத்தும் அகத்தும் வருதல் ஏற்றபடி கொள்க.

உ - ம். எக்கொற்றன், யாங்ஙனம் என எகரமும் யாவும் முதலிலே புறத்து வந்தன. எவன், யாவன் என எகரமும் யாவும் முதலிலே அகத்து வந்தன. கொற்றனா, கொற்றனோ என ஆகாரமும் ஓகாரமும் ஈற்றிலே புறத்து வந்தன. ஏவன், கொற்றனே என ஏகாரம் முதலில் அகத்தும் ஈற்றிற் புறத் தும் வந்தது. (12)

**68. வல்லினங் க ச ட த ப ற வென வாறே.**

இ - ள். க ச ட த ப ற என ஆறு வல்லினம் - க ச ட த ப ற என்று ஆறும் வல்லெழுத்தாம். எ - று. இவை வன்கணமெனவும் பெயர்பெறும். (13)

**69. மெல்லினம் ங ஞ ண ந ம ன வென வாறே.**

இ - ள். ங ஞ ண ந ம ன என ஆறு மெல்லினம் - ங ஞ ண ந ம ன என்று ஆறும் மெல்லெழுத்தாம். எ - று. இவை மென்கணமெனவும் பெயர்பெறும். (14)

**70. இடையினம் ய ர ல வ ழ ள வென வாறே.**

இ - ள். ய ர ல வ ழ ள என ஆறு இடையினம் - ய ர ல வ ழ ள என்று ஆறும் இடையெழுத்தாம். எ - று. இவை இடைக்கணமெனவும் பெயர்பெறும். (15)

[இனவெழுத்து.]

**71.** **ஐ ஔ இ உச் செறிய முதலெழுத்**
**திவ்விரண் டோரின மாய்வரன் முறையே.**

**இ - ள்.** ஐ ஔ இ உச் செறிய - இனமில்லாத ஐகார ஔகாரங்கள் ஈகார ஊகாரங்களுக்கு இனமாகிய இகர உகரங்களைத் தமக்கும் இனமாகப் பொருந்த—முதலெழுத்து இவ்விரண்டு ஓரினம் ஆய் வரல் முறை - முதலெழுத்துக்கள் இவ்விரண்டோரினமாய் வருதன்முறை; ஆதலால், அவை இனவெழுத்தெனப் பெயர்பெறும். எ - று.

சுருங்கச்சொல்லலென்னும் அழகுபற்றி முதலெழுத்தெனப் பொதுப்படக் கூறினார்; ஏற்புழிக்கோடலென்பதனால், இவ்விரண்டு ஓரினமாய் வருதல் இடையினமொழிந்த மற்றவைகளுக்கே கொள்க.

உ - ம். அஆ; இஈ; உஊ; எஏ; ஐஇ; ஒஓ; ஔஉ; எ - ம், கங; சஞ; டண; தந; பம; றன. எ - ம். இவ்விரண்டு ஓரினமாய் வந்தமை காண்க. (16)

[இனமென்றதற்குக் காரணம்.]

**72.** **தான முயற்சி யளவு பொருள்வடி**
**வானவொன் றுதியோர் புடையொப் பினமே.**

**இ - ள்.** தானம் - பிறப்பிடமும்—முயற்சி - தொழிலும்—அளவு - மாத்திரையும் — பொருள் - பொருளும்—வடிவு - உருவமும்—ஆன ஒன்று ஆதி ஓர்புடை ஒப்பு - ஆகிய இவற்றுள் ஒன்று முதலாக ஒரு புடை பொத்தலால்—இனம் - இனமாம். எ - று,

முன் காரணம் விளங்காமற் கூறப்பட்ட இனமென்றதை இங்கே காரணங் காட்டி முடிவு செய்தலால், இச்சூத்திரம் எதுவின் முடித்தலென்னும் உத்தி.

ஆய்தந் தனி நிலையாதலாலும், மற்றைச் சார்பெழுத்துக்களுக்கு அவ்வவற்றின் முதலெழுத்துக்களின் பெயர்களே பெயர்களாய் அடங்குதலாலும் சார்பெழுத்துக்களுக்குப் பெயர் சொல்லாது விட்டார். (17)

**பரீக்ஷை வினாக்கள்:**—7. பெயர் எத்தனை வகைப்படும்? இடுகுறிப் பொதுப்பெயராவது யாது? இடுகுறிச்சிறப்புப் பெயராவது யாது? காரணப்பொதுப் பெயராவது யாது? காரணச் சிறப்புப் பெயராவது யாது? பின்னர்க் கூறிய உரைப்படி பெயர் எத்தனை வகைப்படும்? காரணவிடுகுறிப் பெயராவது யாது? 8. உயிரெழுத்தெவை? மெய்யெழுத்தெவை? 9. உயிரெழுத்து எத்தனை வகைப்படும்? குற்றெழுத்தெவை? 10. நெட்டெழுத்தெவை? 11. சுட்டெழுத்தெவை? 12. வினாவெழுத்தெவை? மொழி முதலில்வரும் வினாவெழுத்தெவை? மொழியீற்றில் வரும் வினாவெழுத்தெவை? மொழிமுதல் கடை என்னும் இரண்டிடத்தும் வரும் வினாவெழுத்து எது? 13. மெய்யெழுத்து எத்தனை வகைப்படும்? வல்லெழுத்தெவை? 14. மெல்லெழுத்தெவை? 15. இடையெழுத்தெவை? 16. முதலெழுத்துக்களுள் ஒன்றற்கொன்று இனமாவன உளவோ? இவ்விரண்டோரினமாகா எழுத்துக்கள் எவை? 17. யாதுகாரணத்தால் இவ்விரண்டெழுத்து ஒவ்வோர் இனமாம்?

---

## 3. முறை.

**73.** **சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண் டம்முதல்**
**நடத்த லுனே முறையா கும்மே.**

இ - ள். சிறப்பினும் இனத்தினும் செறிந்து - சிறப்பினாலும் இனத்தினாலும் பொருந்தி—ஈண்டு அம்முதல் நடத்தல் தானே - இவ்வுலகத்தில் அகரமுதலாக வழங்குதலே—முறை ஆகும் - எழுத்துக்களது முறையாம். எ - று.

தனித்தியங்கும் வன்மையுடைய உயிரெழுத்துக்கள் அவ் வன்மையில்லாத மெய்யெழுத்துக்களுக்கு முன் நிற்பதும், குறிலினது விகாரமே நெடிலாதலாற் குற்றெழுத்துக்கள் நெட் டெழுத்துக்களுக்கு முன் நிற்பதும் வலியவர் மெலியவருக்கு முன்னிற்றல்போல வல்லெழுத்துக்கள் மெல்லெழுத்துக்களுக்கு முன்னிற்பதுஞ் சிறப்பினுல் எனவும், குற்றெழுத்துக்களுக்குப் பின் அவ்வவற்றிற்கு இனமொத்த நெட்டெழுத்துக்கள் நிற்ப தும், வல்லெழுத்துக்களுக்குப் பின் அவ்வவற்றிற்கு இனமொத்த மெல்லெழுத்துக்கள் நிற்பதும் இனத்தினுல் எனவுங் கொள்க. ()

**பரீக்ஷை வினு**;—18. எழுத்துக்களின் முறையாவது யாது?

---

## 4. பிறப்பு

[பிறப்பின் பொதுவிதி.]

**74.** **நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப**
**எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி**
**மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்**
**வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.**

**இ - ள்.** நிறை உயிர் முயற்சியின் - ஒலியெழுத்தாகிய காரியத்திற்கு வேண்டுங் காரணங்களிற் குறைவின்றி நிறைந்த உயிரினது முயற்சியால்—உள் வளி துரப்ப எழும் அணுத்திரள் - உள்ளே நின்ற உதானன் என்னுங் காற்று னது எழுப்ப எழுகின்ற செவிப்புலனும் அணுக்கூட்டம்— உரம் கண்டம் உச்சி மூக்கு உற்று - மார்புங் கழுத்துந் தலை யும் நாசியுமாகிய நான்கிடத்தையும் பொருந்தி—இதழ் நாப்பல் அணத்தொழிலின் - உதடும் நாக்கும் பல்லும் மேல்வாயுமாகிய நான்கனுடைய முயற்சிகளால் — வெவ் வேறு எழுத்து ஒளி ஆய் வரல் - வேறுவேறு எழுத்தாகிய

ஓசைகளாய்த் தோன்றுதல்—பிறப்பு - அவற்றின் பிறப் பாம். எ - று. (19)

[முதலெழுத்துக்களுக்கு இடப்பிறப்பு.]

**75.** அவ்வழி,—

**ஆவி யிடைமை யிடமிட றாகும்**
**மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை.**

**இ - ள்.** *அவ்வழி - முன்சொன்ன வழியாற் பிறக்கு மிடத்து—ஆவி இடைமை இடம் மிடறு ஆகும் - உயி ரெழுத்துக்களுக்கும் இடையினத்திற்கும் இடங் கழுத் தாகும்—மென்மை மூக்கு மேவும் - மெல்லினம் நாசியை இடமாகப் பொருந்தும்—வன்மை உரம் பெறும் - வல்லினம் மார்பை இடமாகப்பெறும். எ - று.* (20)

[முதலெழுத்துக்களுக்கு முயற்சிப்பிறப்பு.]

**76.** அவற்றுள்,—

**முயற்சியுள் அஆ வங்காப் புடைய.**

**இ - ள்.** *அவற்றுள் - மேலிடம் வகுக்கப்பட்ட முத லெழுத்துக்களுள்—அஆ முயற்சியுள் அங்காப்பு உடைய - அஆ இரண்டும் நால்வகை முயற்சியுள் அண்ணத்தின்தொழி லாகிய அங்காத்தலை யுடையனவாய்ப் பிறக்கும். எ - று.*

*அங்காத்தல் வாயைத் திறத்தல்.* (21)

**77.** **இ ஈ எ ஏ ஐ அங் காப்போ**
**டண்பன் முதனா விளிம்புற வருமே.**

**இ - ள்.** *இ ஈ எ ஏ ஐ - இ ஈ எ ஏ ஐ ஐந்தும்—அங் காப்போடு - அங்காப்புடனே—அண்பல் நாமுதல் விளிம்பு*

உற வரும் - மேல்வாய்ப்பல்லை நாக்கடியினது ஓரமானது பொருந்தப் பிறக்கும். எ - று.

அண்பல் - நாவிளிம்பால் அணுகப்படும் பல். (22)

**78.** உ ஊ ஒ ஓ ஔவிதழ் குவிவே.

**இ - ள்.** உ ஊ ஒ ஓ ஔ - உ ஊ ஒ ஓ ஔ ஐந்தும் பிறத்தற் கேதுவாகிய முயற்சி—இதழ்குவிவு - உதடுகள் குவிதலாம். எ - று. (23)

**79.** கஙவுஞ் சஞவும் டணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வருமே.

**இ - ள்.** க ங (நா) முதல் (அண்ணமுதல்) - கவ்வும் ஙவ்வும் நாக்கினடி மேல்வாயடியையும்—சஞ (நா) விடை (அண்ணவிடை) - சவ்வும் ஞவ்வும் நாக்கினடு மேல்வாய் நடுவையும்—டண நா நுனி அண்ண (நுனி) உற - டவ்வும் ணவ்வும் நாக்கின்கடை மேல்வாய்க் கடையையும் பொருந்த—முறை வரும் - இம்முறையே பிறக்கும். எ-று.

**80.** அண்பல் லடிநா முடியுறத் தநவரும்.

**இ - ள்.** அண்பல் அடி நா முடி உற - மேல்வாய்ப் பல்லினது அடியை நாக்கு நுனிபொருந்த—த ந வரும் - தவ்வும் நவ்வும் பிறக்கும். எ - று. (25)

**81.** மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.

**இ - ள்.** மீ (மிதழ்) கீழிதழ் உற - மேலுதடுங் கீழுதடும் பொருந்த—பம்மப் பிறக்கும் - பவ்வும் மவ்வும் பிறக்கும். எ - று. (26)

**82.** அடிநா வடியண முறயத் தோன்றும்.

இ-ள். நாவடி அணவடி உற - நாக்கினடியானது மேல்வாயடியைப் பொருந்த—ய தோன்றும் - யகரமானது பிறக்கும். எ-று. (27)

**83. அண்ண நுனிநா வருட ரழவரும்.**

இ-ள். அண்ணம் நா நுனி வருட - மேல்வாயை நாக்கு நுனியானது தடவ—ரழ வரும் - ரவ்வும் ழவ்வும் பிறக்கும். எ-று. (28)

**84. அண்பல் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.**

இ-ள். அண்பல் முதல் நாவிளிம்பு வீங்கி ஒற்ற லகாரம் (ஆய்) - மேல்வாய்ப் பல்லடியை நாவோரமானது தடித்து நெருங்க லகாரமாகியும்—அண்ணம் (நாவிளிம்பு) வீங்கி வருட ளகாரம் ஆய் - மேல்வாயை நாவோரமானது தடித்துத் தடவ ளகாரமாகியும்—இரண்டும் முறை பிறக்கும் - இரண்டெழுத்துக்களும் இம்முறையே பிறக்கும் எ-று. (29)

**85. மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே.**

இ-ள். மேற்பல் இதழ் உற - மேல்வாய்ப்பல்லைக் கீழுதடு பொருந்த—வ மேவிடும் - வகரமானது பிறக்கும். எ-று. (30)

**86. அண்ண நுனிநா நனியுறிற் றனவரும்.**

இ-ள். அண்ணம் நா நுனி நனி உறின் - மேல்வாயை நாக்கு நுனி மிகப் பொருந்தின்—றனவரும் - றவ்வும் னவ்வும் பிறக்கும். எ-று. (31)

[சார்பெழுத்துக்கு இடமுயற்சி.]

**87. ஆய்தக் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.**

இ - ள். ஆய்தக்கு இடம் தலை முயற்சி அங்கா - ஆய்தம் பிறத்தற்கு இடந் தலை, தொழில் வாயைத் திறத்தலாம்—சார்பெழுத்து ஏனவும் தம்முதல் அனைய - ஆய்த மொழிந்த மற்றைச் சார்பெழுத்துக்களும் இடப்பிறப்பு முயற்சிப் பிறப்புக்களினாலே தத்தம் முதலெழுத்துக்களை ஒப்பனவாம். எ - று. (32)

[பிறப்புக்குப் புறனடை.]

**88. எடுத்தல் படுத்த னலித லுழப்பிற்
றிரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும்.**

இ - ள். பலவெழுத்திற்குப் பிறப்பு ஒன்றாகச் சொல்லப்பட்டன வெனினும்—எடுத்தல் - உயர்த்திக்கூறுதலும்—படுத்தல் - தாழ்த்திக் கூறுதலும்—நலிதல் - உயர்த்தியுந் தாழ்த்தியுங் கூறுதலும் ஆகிய—உழப்பின் - எழுத்திற்குரிய ஒலிமுயற்சியால்—திரிபும் தத்தமின் சிறிது உள ஆகும் - ஒன்றற்கொன்று பிறப்பு வேறுபாடுகளும் அவ்வவற்றின்கண்ணே சிறிது சிறிது உள்ளனவாம். எ-று.

[உயிர்மெய்.]

**89. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடு மொற்றுமுன் னய்வரு முயிர்மெய்.**

இ - ள். புள்ளி விட்டு - மெய் புள்ளியை விட்டு—அவ்வொடு முன் உரு ஆகியும் - அகரத்தோடு கூடியவழி அவ்விட்டவுருவே உருவாகியும்—ஏனை உயிரோடு உருவு திரிந்தும் - அஃதொழிந்த உயிர்களோடு கூடியவழி உருவு வேறுபட்டும்—உயிர் அளவு ஆய் - தன்மாத்திரை தோன்ருது உயிர் மாத்திரையே மாத்திரையாய்—அதன் வடிவு ஒழித்து - தன் வரிவடிவின் விகாரவடிவே வடிவாய் உயிர் வடிவை யொழித்து—இரு வயிற் பெயரொடும் - உயிரும் மெய்யுமாகிய இரண்டிடத்தும் பிறந்த உயிர்மெய்யென்னும் பெயருடனே—ஒற்று முன் ஆய் - ஒற்ருெலி முன்னும் உயிரொலி பின்னுமாகி—உயிர் மெய் வரும் - உயிர்மெய் யெழுத்து வரும். எ - று.

பன்னிரண்டுயிரும் பதினெட்டு மெய்மேலுந் தனித்தனி ஏறி வருதலால், உயிர்மெய் இருநூற்றுப்பதினாறுதல் காண்க. ()

[முற்றாய்தம்.]

**90. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி**
**உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.**

இ - ள். ஆய்தப் புள்ளி - புள்ளிவடிவினதாகிய ஆய்தம்—குறியதன் முன்னர் - குற்றெழுத்தின் முன்னதாய்—உயிரொடு புணர்ந்த வல்லாறன்மிசைத்து - உயிரோடுகூடிய வல்லெழுத்தாறனுள் ஒன்றன்மேலதாய் வரும். எ - று.

உ - ம். எஃகு, கஃசு, இருபஃது, பஃறி எனவரும்.

இச்சூத்திரம் மேற்கோளாதலால், தானெடுத்துமொழிதலென்னும் உத்தி.

வல்லினவகையால் இயல்பாக வரும் ஆய்தம் ஆறு; அவ் + கடிய = அஃகடிய எனத் திரிதலென்னும் புணர்ச்சிவிகாரத்தால் வரும் ஆய்தம் ஒன்று; அ + கான் = அஃகான் என விரித்தலென்

னுஞ் செய்யுள்விகாரத்தால் வரும் ஆய்தம் ஒன்று; ஆக முற்றாய்தம் எட்டாதல் காண்க. (35)

[உயிரளபெடை.]

**91. இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்**
**அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே.**

இ - ள். இசை கெடின்-பாட்டில் ஓசை குறையின்—மொழிமுதல் இடை கடை நிலை நெடில்-மொழிக்கு முதலிலும் நடுவிலும் இறுதியிலும் நின்ற நெட்டெழுத்தேழும்—அளபு எழும்-அவ்வோசையை நிறைக்கத் தத்தம் மாத்திரையின் மிக்கொலிக்கும்—அவற்று அவற்று இனக்குறில் குறி-அப்படி யளபெடுத்தமையை அறிதற்கு அவற்றின் பின் அததற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவில் அறிகுறியாய் வரும். எ - று.

உ - ம். "ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை—யாஅதுமென்னு மவர்." எ-ம். "உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்—செறாஅஅய் வாழிய நெஞ்சு." எ-ம். "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு—நல்ல படாஅ பறை." எ-ம். வரும். இவற்றுள்: ஓதல் என்பதில் ஓவென்னு நெட்டெழுத்து மொழிக்கு முதலிலும், உறார் என்பதில் ஆவென்னு நெட்டெழுத்து இடையிலும் படா என்பதில் ஆவென்னு நெட்டெழுத்துக் கடையிலும் அளபெடுத்தவாறு காண்க. செறாய் என்பதில் ஆவென்னு நெட்டெழுத்து ஈரளபெடுத்து வந்தது.

செய்யுளோசை குன்றாவிடத்தும் இன்னிசை நிறைக்கவுஞ் சொல்லிசை நிறைக்கவும் வரும் அளபெடைகளும் உண்டு. இன்னிசை நிறைக்க வரும் அளபெடையாவது குற்றெழுத்து நெட்டெழுத்தாக நீண்டு இன்னிசை நிறைத்தற் பொருட்டு அளபெடுப்பது. சொல்லிசை நிறைக்க வரும் அளபெடையாவது பெயர்ச்

சொல் வினையெச்சச்சொல்லின் இசையை நிறைத்தற்பொருட்டு அளபெடுப்பது.

உ - ம். "கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே— யெடுப்பதூஉ மெல்லாமழை" இதனுள், கெடுப்பதும் எடுப்பதும் என நிற்பினுஞ் செய்யுளோசை குன்றாதாயினும், இன்னிசை நிறைத்தற்பொருட்டுக் குறில் நெடிலாய் அளபெடுத்தமை காண்க. "உரனசைஇ யுள்ளந் துணையாகச்சென்றார்— வரனசைஇ யின்னு முளேன்." இதனுள் உரனசை வரனசை என நிற்பினுஞ் செய்யுளோசை குன்றாதாயினும் விருப்பமெனப் பொருள்படும் நசையென்னும் பெயர்ச்சொல், விரும்பியென வினையெச்சப்பொருள்படும் பொருட்டு வினையெச்சச் சொல்லாதற்கு நசைஇ என அளபெடுத்தமை காண்க.

நெட்டெழுத்தேழும் மொழிக்கு முதலிடைகடை யென்னும் மூன்றிடத்தும் அளபெடுக்குமெனவே, உயிரளபெடை இருபத்தொன்றாதல்பெறப்படும்; ஔகாரம் மொழிக்கு நடுவிலுங்கடையிலும் வாராமையால் அவ்விரண்டுங் கழிக்க, நின்ற உயிரளபெடை பத்தொன்பது; அப்பத்தொன்பதோடு இன்னிசை நிறைக்க வரும் அளபெடை சொல்லிசை நிறைக்க வரும் அளபெடை என்னும் இரண்டுங்கூட்ட, உயிரளபெடை இருபத்தொன்றாதல் காண்க. (36)

[ஒற்றளபெடை.]

**92.** ங ஞ ண ந ம ன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே.

இ - ள். (இசை கெடின்) - பாட்டில் ஓசை குறையின்—குறிலிணைக் (கீழ்) குறிற்கீழ் இடை கடை - குறிலிணையின்கீழுங் குறிலின்கீழும் மொழிக்கு நடுவிலுங் கடையிலும் நின்ற—ங ஞ ண ந ம ன வ ய ல ள ஆய்தம் - ஙம்

முதலிய இப்பத்தும் ஆய்தமுமாகிய பதினொரெழுத்தும்— அளபு ஆம் - அவ்வோசையை நிறைக்கத் தத்தம் மாத்திரையின் மிக்கொலிக்கும்—அவற்றின் குறி வேறு மிகல் ஆம் - அப்படி அளபெடுத்தமையை அறிதற்கு அவற்றின் பின் அவ்வெழுத்துக்களே வரிவடிவில் வேறறிகுறியாய் வரும். எ - று.

முன் சூத்திரத்தில் 'இசை கெடின்' என்றது இதற்குங் கூட்டப்பட்டது.

உ - ம். "இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்—கலங்ங்கு நெஞ்சமிலை காண்:" எ-ம். "எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயா—னெங்ங் கெனத்திரிவா ரின்." எ-ம். "மடங்ங் கலந்த மனனே களத்து—விடங்ங் கலந்தானை வேண்டு." எ-ம். "அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து—நங்ங் களங்கறுப்பா நாம்." எ-ம். வரும். இவற்றுள், இலங்கு என்பதிற் குறிலிணைக்கீழிடையிலும், எங்கு என்பதிற் குறிற்கீழிடையிலும் ஙகரம் அளபெடுத்தது. மடம் என்பதிற் குறிலிணைக்கீழ்க்கடையிலும் அம் என்பதிற் குறிற்கீழ்க்கடையிலும் மகரந் திரிந்த ஙகரம் அளபெடுத்தது. "விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாத—ரிலஃஃகு முத்தி னினம்." "எஃஃகிலங்கிய கையரா யின்னுயிர்—வெஃஃகு வார்க்கில்லை வீடு." இவற்றுள், விலஃகி என்பதிற் குறிலிணைக் கீழிடையிலும், எஃகு என்பதிற் குறிற்கீழிடையிலும் ஆய்தம் அளபெடுத்தது.

பதினொன்றும் குறிலிணைக்கீழிடை குறிற்கீழிடை குறிலிணைக்கீழ்க்கடை குறிற்கீழ்க்கடை என்னு நான்கிடத்தும் அளபெடுக்குமெனவே, ஒற்றளபெடை நாற்பத்துநான்காதல் பெறப்படும்; ஆய்தம் ஙகரம்போல விதியீறாகவும் வாராமையால், அதற்குக் குறிலிணைக்கீழ்க்கடை குறிற்கீழ்க்கடை என்னும் இரண்டிடத்தைக் கழிக்க, ஒற்றளபெடை நாற்பத்திரண்டாதல் காண்க. (37)

[குற்றியலிகரம்.]

**93. யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.**

இ - ள். யகரம் வரக் குறள் உத்திரி இகரமும் - யகரத்தை முதலிலேயுடைய சொல் வரக் குற்றியலுகரந் திரிந்த இகரமும்—அசைச்சொல் மியாவின் இகரமும் - அசைச்சொல்லாகிய மியாவென்பதின் மகரத்தின்மேலிருக்கிற இகரமும்—குறிய - குற்றிய லிகரங்களாம். எ - று.

உ - ம். நாகு + யாது = நாகியாது, எஃகு + யாது = எஃகியாது, வரகு + யாது = வரகியாது, கொக்கு + யாது = கொக்கியாது, குரங்கு + யாது = குரங்கியாத், தெள்கு + யாது = தெள்கியாது, எ - ம். கேண்மியா. எ - ம். வரும்.

பொதுப்படக் கூறிய குற்றியலுகரம் முப்பத்தாறினுலும், அசைச்சொன் மியாவினுலுங் குற்றியலிகரம் முப்பத்தேழாதல் காண்க. (38)

[குற்றியலுகரம்.]

**94. நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே.**

இ - ள். நெடிலோடு - தனிநெடிலேழுடனே — ஆய்தம் - ஆய்த மொன்றும்—உயிர் - சொல்லுக்கு நடுவிலும் கடையிலும் வாராத ஔகார நீங்கிய உயிர் பதினொன்றும்—வலி - வல்லெழுத்தாறும்— மெலி - மெல்லெழுத்தாறும்— இடை - வல்லெழுத்துக்களோடு தொடராத வகர நீங்கிய இடையெழுத்தைந்தும் ஆகிய முப்பத்தாறனுள் ஒன்றினுலே—தொடர் - ஈற்றுக்கு அயலெழுத்தாகத் தொடரப்

பட்டு—மொழி இறுதி வன்மை ஊர் உகரம் - சொல்லி னிறுதியில் வல்லெழுத்துக்களுள் யாதாயினும் ஒன்றன் மேல் ஏறிவரும் உகரமானது—அஃகும் - தன்மாத்திரை யிற் குறுகும்—பிறமேல் தொடரவும் பெறும் - இவற்றுள், ஆய்தத்தொடர் முதலிய ஐந்துதொடரும், வன்மையூருக ரத்தை ஈற்றயலெழுத்துத் தொடர்தலேயன்றிப் பிறவெழுத் துக்களுள் ஒன்றும் பலவும் அவ்வீற்றய லெழுத்தின்மேலே தொடரவும் பெறும். எ - று.

நெடிலோடு என நெடிலை ஒடுக்கெடுத்துப் பிரித்தார், பிற மேற்றொடர்தல் அதற்கில்லையென்பது தோன்றுதற்கென்க. பிறமேற்றொடரின் உயிர்த்தொடரெனப்படும். உயிரென்றது குறில் நெடில் இரண்டையும்.

உ - ம். நாகு, காசு, நீறு என்பன நெடிற்றொடர்க் குற்றியலுகரம். எஃகு, கஃசு, இருபஃது என்பன ஆய்தத்தொடர்க் குற்றிய லுகரம். வரகு, பலாசு, கயிறு, போவது, ஒன்பது, இறும்பூது என்பன உயிர்த்தொடர்க் குற்றியலுகரம். கொக்கு, கச்சு, பற்று, பிண்ணுக்கு, விளையாட்டு, குருத்து என்பன வன்றொ டர்க் குற்றியலுகரம். கங்கு, பஞ்சு, அம்பு, கன்று, பட்டாங்கு, சுண்ணும்பு என்பன மென்றொடர்க் குற்றியலுகரம். வெய்து, சால்பு, தெள்கு என்பன இடைத்தொடர்க் குற்றியலுகரம்.

இங்கே ஈற்றயலெழுத்தைக்கொண்டு குற்றியலுகரத்தை அறுவகையாகச்சொல்லியது பின்னே புணரியலில் எடுத்தாளுதற் பொருட்டென்க; இது முன்மொழிந்து கோடலென்னுமுத்தி.

மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னும் உத்தியால், நுந்தை யென்னு முறைப்பெயரின் முன்னின்ற நகரமெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரமுங் குறுகுமெனக் கொள்க.

மெல்லினமெய்யின்மேலும், இடையினமெய்யின்மேலும் ஏறி நிற்கும் உகரமும், தனிக்குற்றெழுத்தினுலே தொடரப்பட்ட வல்லினமெய்யின்மேல் ஏறிநிற்கும் உகரமும், முற்றியலுகர மாம். (39)

[ஐகார ஔகாரக் குறுக்கங்கள்.]

**95. தற்சுட் டளபொழி யைம்மூ வழியும்**
**நையு மௌவு முதலற் றாகும்.**

இ - ள். ஐ - ஐகாரம்—தற்சுட்டு அளபு ஒழி மூவழியும் - தன்னைக்குறித்துத் தன்பெயர் சொல்லுமளவிற் குறுகாது ஒழிந்த சொல்லுக்கு முதலிடைகடைகளிலே எங்கே நிற்பினும்—நையும் - தன்மாத்திரையிற் குறுகும்—ஔவும் முதல் அற்று ஆகும் - ஔகாரமுந் தன்பெயர் சொல்லுமளவிற் குறுகாது சொல்லுக்கு முதலிலே தன்மாத்திரையிற்குறுகும். எ - று.

உ - ம். ஐப்பசி, இடையன், குவளை. எ - ம். மௌவல். எ - ம். வரும். இடவகையால் ஐகாரக்குறுக்கமூன்றும் ஔகாரக் குறுக்கமொன்றும் வருதல் காண்க. (40)

[மகரக்குறுக்கம்.]

**96. ண ன முன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.**

இ - ள். ண ன முன்னும் - ணகர னகரங்களில் ஒன்று நின்று தொடர அதன்முன் வரினும்—வஃகான் மிசையும் - வகரம் வந்து தொடர அதன்மேல் நிற்பினும்—மக் குறுகும் - மகரந் தன் மாத்திரையிற் குறையும். எ - று.

உ - ம். "வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி—மருளினு மெல்லா மருண்ம்" எ - ம். "திசையறி மீகானும் போன்ம்." எ - ம். தரும் வளவன். எ - ம். வரும். இவற்றுள், மருளும் என்பது மருண்ம். எ - ம். போலும் என்பது போன்ம். எ - ம். வருதலால், செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றுச்சொல்லின் ஈற்றயலிலே உகரங்கெட நின்ற ளகர லகரந்திரிந்த ணகர னகரமே இங்கே சொல்லிய ணகர னகரமென்றறிக.

இச்சூத்திரக்கருத்தைப் பின் வருஞ் சில சூத்திரங்களைக் கொண்டு உய்த்துணர வைத்தலால், இது உய்த்துணரவைப்பு என்னும் உத்தி. மருளும், போலும் என்பன செய்யுமென்வாய் பாட்டுத் தெரிநிலைவினைமுற்றென்பது. "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்—செல்லாதாகுஞ் செய்யுமென் முற்றே." (348) என்னுஞ் சூத்திரங்கொண்டும், முற்றிறுதி யுகரவுயிர் கெடுமென்பது: "செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ்—செய்யுளுளும்முந் தாகலு முற்றே—லுயிரு முயிர்மெய்யு மேகலு முளவே." (341) என்னுஞ் சூத்திரங்கொண்டும், லகர ளகர மெய்களின்முன் மகரம் மயங்காதென்பது: "லளமுன் கசப வய வொன் றும்மே" (117) என்னுஞ் சூத்திரங்கொண்டும், லகர ளகரங்கள் மகரத்தின் முன் முறையே னகர ணகரங்களாகத் திரியுமென்பது: "லளவேற் றுமையிற் றடவு மல்வழி—யவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி—மேவி னணவு மிடைவரி னியல்பு—மாகு மிருவழி யானு மென்ப." (227) என்னுஞ் சூத்திரங்கொண்டும், இந்த ணகர னகரங்களுள் ஒன்றுடன் ஈரொற்றாய் மயங்கின் மகரங் குறுகு மென்பதும் இவைகளின்முன் குறுகுதல் செய்யுளிடத்ததென்பதும், "லள மெய் திரிந்த னணமுன் மகார—நைந்தீ ரொற்றாஞ் செய்யுளுள்ளே." (120) என்னுஞ் சூத்திரங் கொண்டும், உய்த்துணரப்படும். இச்சூத்திரம் பருந்தின்வீழ்வு.

மகரக்குறுக்கம் இடவகையால் மூன்றுதல் காண்க. (41)

[ஆய்தக்குறுக்கம்.]

**97. லள வீற் றியைபினு மாய்த மஃகும்.**

இ - ள். லள ஈற்று இயைபின் ஆம் - லகார ளகார வீற்றுப் புணர்ச்சியில் ஆகின்ற — ஆய்தம் - "குறில்வழி லளத்தவ் வணையி னாய்த - மாகவும் பெறூஉ மல்வழி யானே" (228) என்றற் ஆய்தம்—அஃகும் - தன்னரைமாத்திரையிற் குறுகும். எ - று.

உ - ம். கல் + தீது = கஃறீது. முள் + தீது = முஃடீது என வரும். இது முடிவிடங்கூறலென்னும் உத்தி.

ஆய்தக்குறுக்கம் இடவகையால் இரண்டாதல் காண்க. (42)

**பரீக்ஷை வினாக்கள்:**—19. எழுத்துக்களின் பிறப்பாவது யாது? எழுத்துக்களின் பிறப்பிடங்கள் எவை? எழுத்துக்களின் பிறப்புக்கு ஏதுவாகிய முயற்சிகள் எவை? 20. உயிரெழுத்துக்களுக்கும் இடையெழுத்துக்களுக்கும் பிறப்பிடம் யாது? மெல்லெழுத்துக்களுக்குப் பிறப்பிடம் யாது? வல்லெழுத்துக்களுக்குப் பிறப்பிடம் யாது? 21. அ ஆக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? 22. இ ஈ எ ஏ ஐ எம்முயற்சியாற் பிறக்கும்? 23. உ ஊ ஒ ஓ ஔ எம்முயற்சியாற் பிறக்கும்? 24. க ஙக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? ச ஞக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? ட ணக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? 25. த நக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? 26. ப மக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? 27. யகரம் எம்முயற்சியாற் பிறக்கும்? 28. ர ழக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? 29. லகரம் எம்முயற்சியாற் பிறக்கும்? ளகரம் எம்முயற்சியாற் பிறக்கும்? 30. வகரம் எம்முயற்சியாற் பிறக்கும்? 31. ற னக்கள் எம்முயற்சியாற் பிறக்கும்? 32. ஆய்தத்திற்குப் பிறப்பிடம் யாது? ஆய்தம் எம்முயற்சியாற் பிறக்கும்? ஆய்தமொழிந்த சார்பெழுத்துக்கள் இட முயற்சிவகைகளால் எப்படிப் பிறக்கும்? 33. பிறப்பொன்ருகச் சொல்லப்பட்ட எழுத்துக்களுள் ஒன்றற்கொன்று வேறுபாடு சிறிதில்லையோ? அவ்வேறுபாடு எவைகளால் உண்டாகும்? 34. உயிர்மெய்யாவன யாவை? உயிர்மெய் எதனுல் இருநூற்றுப்பதினுருயின? உயிர்மெய்க் குற்றெழுத்தெத்தனை? உயிர்மெய் நெட்டெழுத்தெத்தனை? உயிர்மெய் வல்லெழுத்தெத்தனை? உயிர்மெய் மெல்லெழுத்தெத்தனை? உயிர்மெய்யிடையெழுத்தெத்தனை? 35. ஆய்தமாவது யாது? முற்ருய்தம் எதனுல் எட்டாயின? 36. உயிரளபெடை யாவன யாவை? உயிரளபெடை எதனுல் இருபத்தொன்ருயின? இன்னிசைநிறைக்கவரும் அளபெடையாவது யாது? சொல்லிசை நிறைக்க வருமளபெடையாவது யாது? 37. ஒற்றளபெடையாவன யாவை? ஒற்றளபெடை எதனுல் காற்பத்திரண்டாயின? 38. குற்றியலிகரமாவன யாவை?

குற்றியலிகரம் எதனால் முப்பத்தேழாயின? 39. குற்றியலுகரமாவது யாது? குற்றியலுகரம் எதனால் முப்பத்தாறாயின? 40. ஐகாரக்குறுக்க மாவது யாது? ஐகாரக்குறுக்கம் எதனால் மூன்றாயின? ஔகாரக் குறுக்க மாவது யாது? ஔகாரக் குறுக்கம் எதனால் ஒன்றாயது? ஐகார ஔகாரங்கள் எங்கே குறுகா? 41. மகரக்குறுக்கமாவது யாது? மருளும் என்றது எப்படி மருண்ம் என்றாயிற்று? போலும் என்றது எப்படிப் போன்ம் என்றாயிற்று? மகரக்குறுக்கம் எதனால் மூன்றாயின? 42. ஆய்தக்குறுக்கமாவது யாது? லகர ளகரஈறு ஆய்தமாகத் திரிதற்கு விதி யாது? ஆய்தக்குறுக்கம் எதனால் இரண்டாயின?

---

## 5. உருவம்

98. தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மெகர வொகரமெய் புள்ளி.

இ - ள். எல்லாவெழுத்தும் தொல்லை வடிவின - எல்லாவெழுத்துக்களும் பலவேறு வகைப்பட எழுதி வழங்கும் பழைய வடிவினையுடையனவாம்—ஆண்டு எகரம் ஒகரம் மெய் புள்ளி எய்தும் - அவ்வடிவை யுடையனவாய் வழங்குமிடத்து எகரமும் ஒகரமும் மெய்களும் புள்ளியைப் பெறும். எ - று.

வரலாறு. எ̊ ஒ̊ எனவும். க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம் ய் ர் ல் வ் ழ் ள் ற் ன். எ - ம். வரும். எ ஒ புள்ளியிட்டெழுதும் வழக்கம் இப்போது இன்று. (43)

பரீக்ஷை வினாக்கள்:—43. வேறுபாடில்லாமற் சமான வடிவாக வழங்கும் எழுத்துக்களுக்கு வேறுபாடறியும் அடையாளம் எது?

---

## 6. மாத்திரை.

[எழுத்துக்களின் மாத்திரை.]

**99.** **மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே**
**குறிலோ டையௌக் குறுக்க மொற்றள**
**பரையொற்றி உக் குறுக்க மாய்தங்**
**கால்குறண் மஃகா னய்த மாத்திரை.**

*இ - ள்.* உயிரளபு (மாத்திரை) மூன்று (ஆம்) - உயிரளபெடைக்கு மாத்திரை மூன்றும்—நெடில் (மாத்திரை) இரண்டு ஆம் - நெட்டெழுத்திற்கு மாத்திரை இரண்டாம்—குறில் ஐ - (க் குறுக்கம்) ஔக்குறுக்கம் ஒற்றளபு (மாத்திரை) ஒன்று (ஆம்) குற்றெழுத்திற்கும் ஐகாரக் குறுக்கத்திற்கும் ஔகாரக்குறுக்கத்திற்கும் ஒற்றளபெடைக்குந் தனித்தனி மாத்திரை ஒன்றும்—ஒற்று இ (க் குறுக்கம்) உக்குறுக்கம் ஆய்தம் (மாத்திரை) அரை (ஆம்)-மெய்யெழுத்திற்குங் குற்றியலிகரத்திற்குங் குற்றியலுகரத்திற்கும் ஆய்தத்திற்குந் தனித்தனிமாத்திரை அரையாம்—குறள் மஃகான் (குறள்) ஆய்தம் மாத்திரை கால் (ஆம்) - மகரக்குறுக்கத்திற்கும் ஆய்தக்குறுக்கத்திற்குந் தனித்தனி மாத்திரை காலாம். எ - று.

மேலே 'உயிரளவாய்' என்றதனால், இங்கே உயிர்மெய்க்கு மாத்திரை கூறாதொழிந்தார்; இது உரைத்தாமென்னும்உத்தி.

"செறாஅஅய் வாழிய நெஞ்சு" என உயிரளபெடை சிறுபான்மை நான்குமாத்திரையினதாய் வருதலுமுண்டு. (44)

[மாத்திரை இன்னதென்பது.]

**100.** **இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.**

இ - ள். மாந்தர் இயல்பு எழும் இமை நொடி - மனித ருடைய இயல்பாக உண்டாகுகின்ற கண்ணிமைப்பொழு துங் கைந்நொடிப் பொழுதும்—மாத்திரை - ஒருமாத்திரை யென்னும் வரையறைப்பொழுதாம். எ - று.

இவ்வளவு கருவியை முற்கூறாது பிற்கூறியது பின்னது நிறுத்தலென்னும் உத்தி. (45)

[மாத்திரைக்குப் புறனடை.]

**101. ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலும்**
**மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்.**

இ - ள். ஆவியும் ஒற்றும் - முதலுஞ் சார்புமாகிய உயிரெழுத்துக்களும் அவ்விருவகை மெய்யெழுத்துக்க ளும்—அளவு இறந்து இசைத்தலும் மேவும் - முன்சொன்ன அளவைக்கடந்து மிக்கொலித்தலையும் பொருந்தும்—இசை விளி பண்டமாற்று ஆதியின் - இராகமும் அழைத்தலும் பண்டமாற்றலு முதலியவைகளிடத்து. எ - று.

ஆதியென்றதனால், முறையீடு புலம்பல் முதலியவைகளுங் கொள்க.

இராகத்தில் அளவிறந்தொலிக்குமிடத்து, உயிர் பன்னி ரண்டு மாத்திரையீறாகவும், ஒற்றுப் பதினொருமாத்திரையீறாக வும் ஒலிக்கும் என்றார் இசைநூலார்: இது பிறநூன் முடிந்தது தானுடன் படுதலென்னும் உத்தி.

இச்சூத்திரம் 'இயல்பெழும்' என்னுஞ் சூத்திரத்தைத் தழு வாது அதற்கு முன் நின்ற 'மூன்றுயிரளபு' என்னுஞ் சூத்திரத் தைத் தழுவி நின்றதனாலே, தவளைப்பாய்த்து. (46)

**பரீக்ஷை வினாக்கள்:**—44. எந்தெந்தவெழுத்து எவ்வளவு மாத்திரை பெறும்? 45. மாத்திரையாவது எது? 46. எழுத்துக்கள்

மேற்கூறிய அளவு கடந்தொலிக்கும் இடங்கள் எவை? இராகத்தில் உயிரெழுத்து எத்தனை மாத்திரை ஈறாக ஒலிக்கும்? ஒற்றெழுத்து எத்தனை மாத்திரை ஈறாக ஒலிக்கும்?

---

## 7. முதனிலை

[மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள்.]

**102. பன்னீ ருயிருங் க ச த ந ப ம வ ய**
**ஞ ங வீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்.**

**இ - ள்.** பன்னீருயிரும் - பன்னிரண்டுயிரெழுத்துக்களும்—க ச த ந ப ம வ ய ஞ ங ஈரைந்து உயிர் மெய்யும் - ககரமுதல் ஙகரமீறாகச் சொல்லப்பட்ட பத்து உயிரேறிய மெய்யெழுத்துக்களும் — மொழி முதல் - சொல்லுக்கு முதலாகும். எ - று.

**உ - ம்.** அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒதி, ஓதி, ஔவியம். எ - ம். களி, சவடி, தளிர், நலம், படை, மலை, வளம், யவனர், ஞமலி, அங்ஙனம். எ - ம். வரும்.

உயிர்போலத்தனித்து முதலாகமாட்டாமையால், உயிர் மெய்யென்றார்; இது இன்னதல்லதிதுவென மொழிதல் என்னும் உத்தி. (47)

[பொதுவிதியுட் சிறப்புவிதி.]

**103. உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல்.**

**இ - ள்.** உ ஊ ஒ ஓ வலவொடு-உ ஊ ஒ ஓ என்னும் நான்கு மல்லாத எட்டுயிர்களோடும்—வ முதல் - வகரமெய் (சொல்லுக்கு) முதலாகும். எ - று.

உ - ம். வளி, வாளி, விளி, வீறு, வெளி, வேளை, வைகல், வெளவு, எனவரும். (48)

**104. அ ஆ உ ஊ ஓ ஔ யம்முதல்.**

இ - ள். அ ஆ உ ஊ ஓ ஔ (வொடு) - அ ஆ உ ஊ ஓ ஔ என்னும் ஆறுயிரோடும்—ய முதல் - யகரமெய் (சொல்லுக்கு) முதலாகும். எ - று.

மேலைச் சூத்திரத்தின் (ஒடு) இங்கே வருவிக்கப்பட்டது.

உ - ம். யவனர், யானை, யுகம், யூகி, யோகி, யெளவனம் என வரும். (49)

**105. அ ஆ எ ஒவ்வோ டாகு ஞம்முதல்.**

இ - ள். அ ஆ எ ஒவ்வோடு - அ ஆ எ ஒ என்னும் நான்கு உயிரோடும்—ஞ முதல் ஆகும் - ஞகரமெய் (சொல்லுக்கு) முதலாகும். எ - று.

உ - ம். ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று என வரும். (50)

**106. சுட்டியா வெகர வினவழி யவ்வை**
**ஒட்டி ஙவ்வு முதலா கும்மே.**

இ - ள். சுட்டு யா (வினா) எகரவினா வழி - மூன்று சுட்டும் யாவினாவும் எகரவினாவுமாகிய இடைச்சொற்களின் பின்—அவ்வை ஒட்டி ஙவ்வும் முதல் ஆகும் - அகரத்தைச் சேர்ந்து ஙகர மெய்யுஞ் (சொல்லுக்கு) முதலாகும். எ-று.

உ - ம். அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம், யாங்ஙனம் என வரும். ஙனமென்பது இடத்தையுந் தன்மையையும் உணர்த்தும் பலபொருளொருசொல்.

ஒருவிதத்தினாலே முதலாகையால், ஙவ்வுமென இழிவுசிறப்பும்மை கொடுத்துக் கூறினார். முதலாகாதென்பவருக்கு உடன்

படுதலும் மறுத்தலுமாதலால், இது பிறர்தம்மத மேற்கொண்டு களைவுஎன்னுமதம்.

முதலாமென்ற பத்துயிர் மெய்யுள், வகரமுதலிய நான்கினையும் விதந்து கூறவே, ஒழிந்த ஆறுமெய்யும் பன்னிரண்டுயிரோடும் முதலாமென்பது அருத்தாபத்தியாற் பெற்றாம். (51)

**பரீக்ஷை வினாக்கள்:**—47. மொழிக்கு முதனிற்கும் எழுத்துக்கள் எவை? எத்தனை மெய்கள் பன்னிரண்டுயிரோடும் மொழிக்கு முதல் வரும்? 48. வகரமெய் எவ்வுயிர்களோடு மொழிக்கு முதல் வரும்? 49. யகரமெய் எவ்வுயிர்களோடு மொழிக்கு முதல் வரும்? 50. ஞகரமெய் எவ்வுயிர்களோடு மொழிக்கு முதல் வரும்? 51. ஙகரமெய் எங்கெங்கே எவ்வுயிரோடு மொழிக்கு முதல் வரும்?

---

## 8. இறுதிநிலை.

[மொழிக்கிறுதியில் வரும் எழுத்துக்கள்.]

**107.** **ஆவி ஞணநமன யரலவ ழளமெய்**
**சாயு முகரநா லாறு மீறே.**

**இ - ள்.** ஆவி - தனித்தும் மெய்யோடும் வரும் பன்னிரண்டுயிர்களும்—ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள மெய் - இப்பதினொரு மெய்களும்—சாயும் உகரம் - குற்றிய லுகரமுமாகிய—நாலாறும் ஈறு - இருபத்துநான்கெழுத்தும் மொழிக்கீறாகும். எ - று.

**உ - ம்.** ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ. எ - ம். விள, பலா, கரி, தீ, கடு, பூ, சேஎ, தே, தை, நொ, போ, கௌ. எ - ம். உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வாள், அஃது. எ - ம். வரும். (52)

[சிலவற்றிற்குச் சிறப்புவிதி.]

**108. குற்றுயி ரளபி னீறு மெகர
மெய்யொடே லாதொந் நவ்வொ டாமெனக்
ககர வகரமோ டாகுமென்ப.**

**இ - ள்.** குற்றுயிர் அளபின் ஈறு ஆம் - அ இ உ எ ஒ என்னுங் குற்றுயிர்கள் அளபெடையிலே வரிவடிவில் அறிகுறியாகத் தனித்து ஈறும்—எகரம் மெய்யோடு ஏலாது - எகரம் மெய்யோடீறாகாது—ஒ நவ்வொடு ஆம் - ஒகரம் நகரமெய்யொன்றுடன் ஈறும்—ஔக் ககர வகரமோடு ஆகும் - ஔகாரங் ககர வகரங்களிரண்டு மெய்களுடன் ஈறும்—என்ப - என்று சொல்லுவர் புலவர். எ-று.

உ - ம். பலாஅ, தீஇ, பூஉ, சேஎ, கைஇ, கோஒ, கௌஉ. எ - ம். நொ. எ - ம். கௌ, வௌ. எ - ம். வரும். நொ - துன்பப்படு. கௌ - வாயாற் பற்று. வௌ - கொள்ளையிடு. (53)

[எழுத்தினது முதலும் ஈறும்.]

**109. நின்றநெறி யேயுயிர் மெய்முத லீறே.**

**இ - ள்.** நின்ற நெறியே - மெய் முன்னும் உயிர் பின்னுமாக ஒலித்து நின்றவழியே — உயிர்மெய் முதல் ஈறு - உயிர்மெய்க்கு மெய்முதலாகும் உயிரீறும். எ-று.

எனவே, உயிரும் ஒற்றும் ஆய்த முதலிய ஒன்பது சார்பெழுத்துக்களும் ஓரெழுத்தாகையால், அவற்றிற்கு முதலுமீறும் அவையேயாமென்பது அருத்தாபத்தியாற் கூறினர்; இது எஞ்சிய சொல்லின் எய்தக்கூறலென்னும் உத்தி, இப்படிச் சொல்லாதவையெல்லாஞ் சொல்லின்முடிவின் அப்பொருண் முடித்தலென்னும் உத்தி. (54)

**பரீக்ஷை வினாக்கள்:**—52. மொழிக்கு இறுதியில்நிற்கும் எழுத்துக்கள் எவை? 53. குற்றுயிர் தனித்து எங்கேஈறும்? மெய்யோடு

ஈறுகாத உயிர் எது? ஒகரம் எம்மெய்யோடீறுகும்? ஔகாரம் எம்மெய்யோடீறுகும்? 54. உயிர்மெய்க்கு முதல் யாது, ஈறுயாது? மற்றையெழுத்துக்களுக்கு முதலீறுயாவை?

---

## 9. இடைநிலைமயக்கம்

**110.** **க ச த ப வொழித்த வீரேழன் கூட்டம்**
**மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்**
**டாகுமிவ் விருபான் மயக்கு மொழியிடை**
**மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.**

**இ - ள்.** *க ச ற ப ஒழித்த ஈரேழன் கூட்டம் மெய்ம் மயக்கு (ஆகும்) - க ச த ப என்னு நான்கையும் நீக்கிய பதினன்கு மெய்களும் பிறமெய்களோடு அடுங் கூட்டம் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாகும்--ர ழ ஒழித்து ஈரெட்டுக் (கூட்டம்) உடனிலை (மெய்ம்மயக்கு) ஆகும் - ர ழ என்னும் இரண்டனையும் நீக்கி மற்றைப் பதினறு மெய்களுந் தம்மோடு கூடுங் கூட்டம் உடனிலைமெய்ம்மயக்கமாகும்-- இவ்விருபால் மயக்கும் மொழி இடை மேவும் - இவ்விரு வகை மயக்கமும் ஒருமொழிக்குந் தொடர்மொழிக்கும் நடுவில் வரும்--உயிர்மெய் மயக்கு அளவு இன்று - உயிருடன் மெய்யும் மெய்யுடன் உயிரும் மாறி உயிருமெய்யும் மயங்கு மயக்கத்திற்கு வரையறையில்லை வேண்டியவாறே மயங்கும். எ - று.*

*கூட்டமெனினும் மயக்கமெனினும் ஒக்கும்.*

*பின் உடனிலை என்றதனல், முன் பிறமெய்யென்பது கொள்ளப்பட்டது.*

*இச்சூத்திரத்தால், மெய்யுடன் மெய் மயங்குமிடத்துக், க ச த ப என்னும் நான்குந் தம்மொடு தாமே மயங்குமெனவும், ர ழ*

என்னுமிரண்டுந் தம்மொடு பிறவே மயங்குமெனவும், ஒழிந்த பன்னிரண்டுமெய்யும் தம்மொடு தாமும் பிறவும் மயங்குமெனவும் பெற்றாம்.

உயிருமெய்யு மயங்குதற்கு உதாரணம். அல், புள் என உயிருடன் மெய் மயங்கின. கா, பூ என மெய்யுடன் உயிர் மயங்கின. மற்றவைகளுக்கு உதாரணம் மேல் வருஞ் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க. (55)

[வேற்றுநிலை மெய்ம்மயக்கத்திற்குச் சிறப்புவிதி.]

**111. ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.**

இ - ள். ஙம்முன் க வம்முன் ய ஆம் - ஙகரத்தின் முன் ககரமும், வகரத்தின் முன் யகரமும் மயங்கும். எ-று.

உ - ம். கங்கன். எ-ம். தெவ்யாது எனவும் வரும். (56)

**112. ஞநமுன் றம்மினம் யகரமொ டாகும்.**

இ - ள். ஞ ந முன் தம் இனம் யகரமொடு ஆகும் - ஞகர நகரங்களின் முன் அவற்றிற்கினமாகிய சிகர தகரங்களும் யகரமும் மயங்கும். எ - று.

உ - ம். கஞ்சன், உரிஞ்யாது. எ-ம். கந்தன், பொருந்யாது, எ-ம். வரும். (57)

**113. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.**

இ - ள். டறமுன் க ச ப மெய் உடன் மயங்கும் - டகர றகரங்களின் முன் க ச ப என்னு மூன்றுமெய்களும் இணங்கி மயங்கும். எ - று.

உ - ம். கட்கம், கட்சி, திட்பம். எ-ம். கற்க, கற்சிறார், கற்ப. எ-ம். வரும். (58)

**114. ணனமுன் னினங்கச ஞபமய வவ்வரும்.**

இ - ள். ண ன முன் - ணகர னகரங்களின் முன்—இனம் - அவற்றிற்கினமாகிய டகர றகரங்களும்—கச ஞ ப ம ய ம வரும் - ககரமுதலிய இவ்வேழு மெய்களும் மயங்கும். எ - று.

உ - ம். விண்டு, வெண்கலம், வெண்சோறு, வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிது. எ-ம். புன்றலை, புன்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர், புன்மலர், பொன்யாது, பொன்வலிது. எ - ம். வரும். (59)

**115. மம்முன் பயவ மயங்கு மென்ப.**

இ - ள். மம்முன் ப ய வ மயங்கும் என்ப - மகரத்தின் முன் ப ய வ என்னும் மூன்று மெய்களும் மயங்குமென்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். கம்பன், கலம்யாது, கலம்வலிது என வரும். (60)

**116. யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்.**

இ - ள். ய ர ழ முன்னர் - ய ர ழ என்னும் மூன்று மெய்களின் முன்—மொழி முதல் மெய் வரும் - மொழிக்கு முதலாக நின்ற பத்துமெய்களும் மயங்கும். எ - று.

உ - ம். வேய்கடிது, வேர்கடிது, வீழ்கடிது; சிறிது, பெரிது, தீது, நீண்டது, மாண்டது, ஞான்றது, யாது, வலிது இவற்றையும் அம்மூன்றுடன் கூட்டுக. வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு என வரும். சுருங்கச்சொல்லல் என்னும் அழகுபற்றி மொழிமுதன்மெய்யெனக் கூறலால், யகரத்தின் முன் யகர மயங்கும் உடனிலை இங்கே கொள்ளாதொழிக. ()

**117. லளமுன் கசப வயவொன் றும்மே.**

இ - ள். ல ள முன் க ச ப வ ய ஒன்றும் - லகர ளகரங்களின்முன் ககரமுதலிய இவ்வைந்தும் மயங்கும். எ-று.

உ-ம். வேல்கடிது, வாள்கடிது; சிறிது, பெரிது, வலிது, யாது இவற்றையுங் கூட்டுக. (62)

[உடனிலை மெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதி.]

**118. ரழவல்லன தம்முற் றுமுட னிலையும்.**

இ-ள். ர ழ அல்லன தம்முன் தாம் உடன் நிலையும்-ரகர ழகரமல்லாத பதினாறு மெய்களுந் தமக்குமுன் தாம் உடனின்று மயங்கும். எ-று.

உ-ம். அக்கம், அங்ஙனம், அச்சம், அஞ்ஞானம், அட்டு, அண்ணம், அத்து, அந்நீர், அப்பு, அம்மை, அய்யம், அல்லி, அவ்வை, அள்ளல், அற்றம், அன்னை என வரும். (63)

[தனிமெய்யுடன் தனிமெய்யாய் மயங்குவன இவை மொழிக்கு உறுப்பாக மயங்காதன இவை.]

**119. யரழவொற் றின்முன் கசதப ஙஞநம ஈரொற் றும் ரழத் தனிக்குறி லணையா.**

இ-ள். ய ர ழ முன் ஒற்றின் க ச த ப ங ஞ ந ம-ய ர ழ என்னும் மூன்றுமெய்களும் இவற்றின்முன் மயங்குமென்ற பத்து மெய்களுட் ககரமுதலாகிய இவ்வெட்டு மெய்களும்—ஈரொற்று ஆம்-தனிமெய்யும் உயிர்மெய்யுமாகி மயங்குதலன்றியும் ஈரொற்றாயும் மயங்கும்—ரழத் தனிக்குறில் அணையா-ரகார ழகார மெய்கள் தனிக்குறிற் கீழொற்றாக மயங்கா. எ-று.

உ-ம். வேய்க்குறை, வேர்க்குறை, வீழ்க்குறை. எ-ம். வேய்ச்சிறை, வேர்ச்சிறை, வீழ்ச்சிறை. எ-ம். வேய்த்தலை, வேர்த்தலை, வீழ்த்தலை. எ-ம். வேய்ப்புறம், வேர்ப்புறம், வீழ்ப்புறம். எ-ம். வேய்ங்குழல், ஆர்ங்கோடு, பாழ்ங்கிணறு. எ-ம். தேய்ஞ்சது, கூர்ஞ்சிறை, பாழ்ஞ்சுனை. எ-ம். காய்ந்தனம்,

நேர்ந்தனம், வாழ்ந்தனம். எ-ம். வேய்ம்புறம், ஈர்ம்பணை, பாழ்ம் பதி. எ-ம். வரும். (64)

[செய்யுளில் ஈரொற்றாய் நிற்கும் எழுத்துக்கள்.]

**120.** **லளமெய் திரிந்த னணமுன் மகாரம்**
**நைந்தீ ரொற்றாஞ் செய்யு ளுள்ளே.**

இ-ள். லளமெய் திரிந்த னண முன் மகாரம் - லகார ளகார ஒற்றுத்திரிந்த னகார ணகாரமுன்வரும் மகரவொற்று—நைந்து ஈரொற்று ஆம் செய்யுளுள் - முன் சொன்னபடியே குறுகி அந்த மெய்களுடனே ஈரொற் றுடன் நிலையாம் பாட்டினுள். எ-று.

உ-ம். "திசையறி மீகானும் போன்ம்." எ-ம். "மயிலியன் மாதர் மருண்ம்." எ-ம். வரும். (65)

[முதனிலை இறுதிநிலை இடைநிலைகளுக்குப் புறனடை.]

**121.** **தம்பெயர் மொழியின் முதலு மயக்கமும்**
**இம்முறை மாறியு மியலு மென்ப.**

இ-ள். தம் பெயர் மொழியின் - தம்முடைய பெயர் களைச்சொல்லி நிலைமொழி வருமொழிகளாகப் புணர்க்கு மிடத்து—முதலும் மயக்கமும் - மொழிமுதலுக்கும் இடை நிலை மயக்கத்திற்கும்—இம்முறை மாறியும் இயலும் - இப் படி விதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்டனவுமாகிய எல்லா எழுத்துக்களும் முதலாகியும் மயங்கியும் வரும்—என்ப - என்று சொல்லுவர் புலவர். எ-று.

இப்படி யெல்லா எழுத்துக்களுந் தனித்தனி அதற்கதுவே முதலாமெனவே, எற்றிற்கு விதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்ட னவுமாகிய எல்லாவெழுத்துக்களுந் தனித்தனி அதற்கதுவே

ஈறுமெனத் தானே விளங்குதலால், ஈறுமென மிகைபடக் கூறு தொழிந்தார்.

உ - ம். "அவற்றுள், லளஃகான் முன்னர் யவவுந் தோன்றும்." இதிலே லகரம் முதலாகியும், கூனிறுதி ளகரமெய்யோடு மயங்கியும் வந்தது. செப்பெரிது இதில் எகரம் மெய்யோ டீறாய் வந்தது. (66)

**பரீக்ஷை வினாக்கள்:**—55. இடைநிலை மயக்கமாவது யாது? இடைநிலைமயக்கம் எத்தனைவகைப்படும்? வேற்றுநிலைமெய்ம்மயக்கமாவது யாது? உடனிலைமெய்ம்மயக்கமாவது யாது? தம்மொடு தாமே மயங்கும் எழுத்துக்கள் எவை? தம்மொடு பிறவே மயங்கும் எழுத்துக்கள் எவை? தம்மொடு தாமும் பிறவு மயங்கும் எழுத்துக்கள் எவை? உயிர்மெய்ம்மயக்கம் எப்படி வரும்? 56. ஙம்முன் எந்த மெய் மயங்கும்? வம்முன் எந்த மெய் மயங்கும்? 57. ஞ ந முன் எந்த மெய் மயங்கும்? 58. ட ற முன் எந்த மெய் மயங்கும்? 59. ண ன முன் எந்த மெய் மயங்கும்? 60. மம்முன் எந்த மெய் மயங்கும்? 61. ய ர ழ முன் எந்த மெய் மயங்கும்? 62. ல ள முன் எந்த மெய் மயங்கும்? 63. எவ்வெழுத்துக்கள் தம்மொடு தாம் உடனின்று மயங்கும்? 64. எந்த மெய்களின் முன் எந்த மெய்கள் ஈரொற்றாயும் மயங்கும்? எந்த மெய்கள் தனிக்குறிற்கீழொற்றாய் மயங்கா? 65. செய்யுளில் எந்த மெய் முன் எந்த மெய் ஈரொற்றாய் மயங்கும்? 66. மொழிக்குமுதலாகா எழுத்து முதலாதலும் ஈறாகா எழுத்து ஈறுதலும் மயங்கா எழுத்து மயங்குதலும் எப்பொழுதேனும் உண்டா?

---

## 10. போலி

[மொழி யிறுதிப் போலி.]

**122. மகர விறுதி யஃறிணைப் பெயரின்**
**னகரமோ டுறழா நடப்பன வுளவே.**

இ - ள். அஃறிணைப் பெயரின் இறுதி மகரம் - பால் பகாவஃறிணைப் பெயர்களிடத்து ஈற்றிலே நின்ற மகர மெய்—னகரமோடு உறழா நடப்பன உள - னகரமெய் யோடு ஒத்து நடப்பவை உண்டு. எ - று.

மகரம் னகரத்தோடொத்தலாவது, பெயரினிறுதியிலே மகர நின்றவிடத்து னகரம் வந்து நிற்பினும் வேற்றுமையின்றி யொத்தலாம். இம்மகரங் குறிலிணைக்கீழ் மகரமென்றறிக.

உ - ம். அகம் - அகன்; நிலம் - நிலன் என வரும்.

இவ்விறுதிப்போலியை முற்கூறியதனால், சுரும்பு - சுரும்பர்; வண்டு - வண்டர் என மென்றொடர்க் குற்றியலுகரப் பெயரிறுதி யுகரம் அர் என்பதனோடொத்து வருதலும், பந்தல் - பந்தர்; சாம்பல் - சாம்பர் எனச் சில லகரமெய்யீற்றுப் பெயரினிறுதி லகரமெய் ரகரமெய்யோடொத்து வருதலுங் கொள்க. (67)

[மொழிமுதற்போலியும் மொழியிடைப்போலியும்.]

**123. அ ஐ முதலிடை யொக்குஞ் சஞய முன்.**

இ - ள். முதல் இடை - சொல்லுக்கு முதலினும் நடு விலும்—அ ஐ ஒக்கும் - அகரமும் ஐகாரமும் வேறு பாடின்றி ஒத்து நடக்கும்—ச ஞ ய முன் - சகர ஞகர யகரங்களுக்கு முன் வருமாயின். எ - று.

இங்கே முன் என்றது காலமுன் எனக்கொள்க.

உ - ம். பசல் - பைசல்; மஞ்சு - மைஞ்சு; மயல் - மையல். எ - ம். அமச்சு - அமைச்சு; இலஞ்சி - இலைஞ்சி; அரயர் - அரையர். எ - ம். வரும். (68)

[மொழியிடைப்போலி.]

**124. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி**
**ஞஃகா னுறழு மென்மரு முளரே.**

இ - ள். சில்வழி-சொல்லுக்கு நடுவே சிலவிடத்து— ஐகான் (வழி) யவ்வழி - ஐகாரத்தின் பின்னும் யகரமெய்யின் பின்னும்—நவ்வொடு ஞஃகான் உறழும் - இயல்பாய் வரும் நகரமெய்யினோடு ஞகரமெய் ஒத்து நடக்கும்—என்மரும் உளர் - என்று சொல்வாருஞ் சிலருண்டு. எ - று.

உ - ம். "செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன் - மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்து நிற்க - நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான் - கைஞ்ஞின்ற வாடல்கண் டாற் பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே." எ - ம். சேய்நலூர் - சேய்ஞலூர்; ஐந்நூறு - ஐஞ்ஞூறு. எ - ம். வரும்.

மண்யாத்த கோட்ட மழகளிறு—"மண் ஞாத்த கோட்ட மழகளிறு." எ - ம். பொன் யாத்த தார்—"பொன் ஞாத்த தார்." எ - ம். ணகர னகர மெய்களின் முன் வருமொழி வினைச்சொல்லின் முதலிலே யா நின்ற விடத்து ஞா நிற்பினும் ஒக்கும் போலிக்கு ஆசிரியர் தொல்காப்பியர் சூத்திரஞ் செய்தபடி இவ்வாசிரியர் கூறொழிந்தது இறந்தது விலக்கலென்னும் உத்தி.()

பரீக்ஷை வினாக்கள்:—67. மகரமெய் எங்கே நின்றவிடத்து எம்மெய் வந்து ஒத்து நடக்கும்? 68. அகரவுயிர் எங்கே நின்றவிடத்து எவ்வுயிர் வந்து ஒத்து நடக்கும்? 69. நகரமெய் எங்கே நின்றவிடத்து எம்மெய் வந்து ஒத்து நடக்கும்?

---

## சந்தியக்கரம்

**125. அம்மு னிகரம் யகர மென்றிவை**
**எய்தி னையொத் திசைக்கு மவ்வோ**
**டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன.**

இ - ள். அம்முன் இகரம் யகரம் என்ற இவை ஒத்து எய்தின் ஐ இசைக்கும் - அகரத்தின்முன் இகரமும் யகரமும் என்று சொல்லப்பட்ட இவை தம்முளொத்துப் பொருந்தினால் ஐ என்னு நெட்டெழுத்து ஒலிக்கும்—

அவ்வோடு உவ்வும் வவ்வும் (ஒத்து) ஓரன்ன (எய்தின்) ஔ (இசைக்கும்) - அகரத்தோடு உகரமும் வகரமெய்யுந் தம்முளொத்து ஒருதன்மையனவாகப் பொருந்தினால் ஔ என்னு நெட்டெழுத்து ஒலிக்கும். எ - று.

யகர வகரமெய்கள் நடுவிலே கலக்குமெனக் கொள்க.

மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்றுமுடித்தல் என்னும் உத்தியால், அகரக்கூறும் இகரக் கூறுந் தம்முளொத்து எகரமொலிக்கும்; அகரக்கூறும் உகரக் கூறுந் தம்முளொத்து ஒகரமொலிக்கும் எனக்கொள்க. (70)

**பரிசை வினுக்கள் :**—70. எவ்வெழுத்துக்கள் கூடி ஐகாரம் ஒலிக்கும்? எவ்வெழுத்துக்கள் கூடி ஔகாரம் ஒலிக்கும்? எகரம் எவை கூடி ஒலிக்கும்? ஒகரம் எவை கூடி ஒலிக்கும்?

---

## எழுத்தின் சாரியைகள்

**126. மெய்க ளகரமு நெட்டுயிர் காரமும்**
**ஐ யௌக் கானு மிருமைக் குறிலிவ்**
**விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற.**

**இ - ள்.** மெய்கள் அகரமும் - ஒற்றுக்கள் அகரச் சாரியையும்—நெட்டுயிர் காரமும் - உயிர்நெடில்கள் காரச் சாரியையும்—ஐ ஔக்கானும் - அவற்றுள் ஐகார ஔகாரங் கள் காரச்சாரியையுடனே கான்சாரியையும்—இருமைக் குறில் இவ்விரண்டோடு கரமும் - உயிர்க்குறிலும் உயிர் மெய்க்குறிலும் காரம் கான் என்னும் இரண்டுடனே கரச் சாரியையும்—ஆம் சாரியை பெறும் - ஆகின்ற சாரியை களைப் பெறும். எ - று.

மெய்களவ்வுமென்னாது அகரமு மென்றதனால், இப்படியே கரங் காரங் கான் வரின் அவை சாரியையாகிய அகரத்தினது சாரியையெனக் கொள்க.

குற்றெழுத்தோடு கான்சாரியை புணரும்போது இடையே ஆய்தம் விரியும்.

மெய்கள் சாரியை பெறுதும் உயிர்மெய்நெடில்கள் சாரியை பெற்றும் வருதலில்லை.

உ-ம். க, ங. எ-ம். ஆகாரம், ஐகாரம், ஔகாரம். எ-ம். ஐகான், ஔகான். எ-ம். அகாரம், அஃகான், அகரம், மகாரம் மஃகான், மகரம். எ-ம். வரும்.

விகற்பத்தின் முடித்தலென்னும் உத்தியால் மேல் விரிந்து முடிந்து கிடந்தனவற்றை விளங்கவேண்டி இங்கே தொகுத்து முடித்தலால், இச்சூத்திரம் முடிந்தது முடித்தலென்னும் உத்தி.

**பரிக்ஷை வினாக்கள்:**—71. மெய்கள் எச்சாரியை பெறும்? உயிர் நெடில்கள் எச்சாரியை பெறும்? ஐகார ஔகாரங்கள் எச் சாரியை பெறும்? உயிர்க்குறிலும் உயிர்மெய்க்குறிலும் எச் சாரியை பெறும்?

---

## இவ்வியலுக்குப்புறனடை

**127. மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே.**

**இ-ள்.** எழுத்து - இவ்வெழுத்துக்கள் — மொழி யாய்த் தொடரினும் - பதமாயினும் அப்பதந் தம்மோடும் உருபோடும் புணர்ந்தாலும்—முன் அனைத்து - முன்சொல் லப்பட்ட அப்பதத்திலக்கணத்தையும் உடையனவாகும். எ-று.

எழுத்தென்பது சாதியொருமையாதலால், அனைத்தென் னும் ஒருமையோடு முடிந்தது. (72)

**பரிக்ஷை வினா:**—72. எழுத்துக்கள் தாம் பதமாயபொழுதும் அப்பதந் தம்மோடும் உருபோடும் புணரும்போதும் முற்கூறிய இலக்கணங்களின் வேறுபடுமா?

எழுத்தியல் முற்றிற்று.

---

# 2. பதவியல்

## பதம்

[பதம் இன்னதென்பதும் அதன்வகையும்.]

**128. எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருடரிற்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப.**

இ - ள். *எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரின் பதம் ஆம் - எழுத்துக்கள் தாமே ஒவ்வொன்றாகத் தனித்தும் இரண்டுமுதலாகத் தொடர்ந்தும் பிறபொருளைத் தருமாயின் அது பதமாம்—அது பகாப்பத (மென) பகுபத மென இருபாலாகி இயலும் - அப்பதம் பகாப்பதமெனவும் பகுபதமெனவும் இரண்டு வகையினையுடையதாகி நடக்கும்—என்ப - என்று சொல்லுவர் புலவர். எ - று.* (1)

[ஓரெழுத்தொருமொழி.]

**129. உயிர்மவி லாறுந் தபநவி லைந்துங்
கவசவி னாலும் யவ்வி லொன்று
மாகு நெடினொது வாங்குறி லிரண்டோ
டோரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின.**

இ - ள். *உயிர் மவில் ஆறும் - உயிர்வருக்கத்திலும் மவ்வருக்கத்திலும் அவ்வாறும்—த ப நவில் ஐந்தும் - தவ்வருக்கத்திலும் பவ்வருக்கத்திலும் நவ்வருக்கத்திலும் ஐவ்வைந்தும்—க வ சவில் நாலும் - கவ்வருக்கத்திலும் வவ்வருக்கத்திலுஞ் சவ்வருக்கத்திலும் நந்நான்கும்—யவ்வில் ஒன்றும் - யவ்வருக்கத்தில் ஒன்றும்— ஆகும் நெடில்- ஆகும்*

நெட்டெழுத்தாலாகிய மொழி நாற்பதும்—நொ து ஆம் குறில் இரண்டோடு - நொவ்வுந் துவ்வும் ஆகுங் குற்றெழுத்தாலாகிய மொழி இரண்டுடனே—ஓரெழுத்து இயல் பதம் ஆறேழ் சிறப்பின - ஓரெழுத்தாலாகிய மொழிகள் நாற்பத்திரண்டுஞ் சிறப்பினவாம். எ - று.

உ - ம். ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ. எ - ம். மா, மீ, மூ, மே, மை, மோ. எ - ம். தா, தீ, தூ, தே, தை. எ - ம். பா, பூ, பே, பை, போ. எ - ம். நா, நீ, நே, நை, நோ. கா, கூ, கை, கோ. எ - ம், வா, வீ, வை, வெள. எ - ம். சா, சீ, சே, சோ. எ - ம். யா. எ - ம். நொ, து. எ - ம். வரும். இவற்றுள், ஊ - இறைச்சி. ஓ - மதகுநீர் தாங்கும் பலகை. பே - நுரை. நே - அன்பு. சோ - மதில். நொ - துன்பப்படு. து - உண். இவை சிறப்பினவெனவே, கு, கெள, பீ, வே எனச் சிறப்பில்லாதவைகளுஞ் சிலவுளவென்றறிக. (2)

[தொடரெழுத்தொருமொழி.]

**130.** **பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்**
**எழுத்தீ றுகத் தொடரு மென்ப.**

இ - ள். பகாப்பதம் ஏ(ழெழுத்து) ஈறு ஆக - பகாப்பதங்கள் இரண்டெழுத்து முதல் ஏழெழுத்தீறுகவும்—பகு பதம் ஒன்பது எழுத்து ஈறு ஆக - பகுபதங்கள் இரண்டெழுத்துமுதல் ஒன்பதெழுத்தீறுகவும் — தொடரும் என்ப - தொடரும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திரட்டாதி. எ - ம். கூனி, கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன், அரங்கத்தான், உத்தராடத்தான், உத்திரட்டாதியான். எ - ம். வரும். நடத்துவிப்பிக்கிறுன் எனப்பகுதி முதலிய உறுப்பு வேறுபட்டு வருவனவற்றிற்கு இவ்வரையறை இல்லையென்றறிக. (3)

[பகாப்பதம்.]

**131.** **பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி**
**முன்னே யொன்றாய் முடிந்தியல் கின்ற**
**பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்.**

**இ - ள்.** *பகுப்பால் பயன் அற்று - பிரிக்கப்படுதலினாலே பகுதி விகுதி முதலாகிய பயனில்லாமல்—இடுகுறி ஆகி முன்னே ஒன்று ஆய் முடிந்து இயல்கின்ற - காரணமின்றி இடப்பட்ட குறியாகிப் படைப்புக் காலந்தொட்டு ஒன்றாகி முடிந்து நடக்கின்ற—பெயர் வினை இடை உரி நான்கும் பகாப்பதம் - பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகிய நான்கும் பகாப் பதங்களாம். எ - று.*

**உ - ம்.** *நிலம், நீர், நெருப்பு, காற்று எனபன பெயர்ப்பகாப்பதம். நட, வா, உண், தின் என்பன வினைப்பகாப்பதம். மன், கொல், போல், மற்று என்பன இடைப்பகாப்பதம். உறு, கழி, நனி, தவ என்பன உரிப்பகாப்பதம்.* (4)

[பகுபதம்.]

**132.** **பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்**
**வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே.**

**இ - ள்.** *பொருள் இடம் காலை சினை குணம் தொழிலின் வருபெயர் - பொருளும் இடமுங் காலமுஞ் சினையுங் குணமுந் தொழிலுங் காரணமாக வருகின்ற பெயர்ச்சொற் களும்—பொழுது கொல்வினை - தெரிநிலையாகவுங் குறிப் பாகவுங் காலத்தைக் கொள்ளும் வினைச்சொற்களும்—பகு பதம் - பகுபதங்களாகும். எ - று.*

*பொழுது கொள்வினை பகுபதமெனவே, அவ்விருவகை வினையாலணையும் பெயர்களும் பகுபதமாமென்பது அருத்தாபத் தியாற் கூறினாரெனவறிக.*

குற்றுகரவீற்றின் முன் இருவழியும் வல்லினம் வரின் எவ்வாறாம்? அது எச்சூத்திரத்தாற் பெறப்படும்? வன்றொடர் முன் வரும் வல்லினம் எங்கும் இயல்பாதல் இல்லையோ? அது எதனாற் பெறப்படும்? மென்றொடர்க் குற்றுகர ஈற்றின்முன் வரும் வல்லினம் வேற்றுமையில் எவ்வாறாம்? அது எச்சூத்திரத்தாற் பெறப்படும்? இடப் பொருள் தந்து ஏழாம்வேற்றுமைப் பொருள்பட வரும் மென்றொடர்க் குற்றுகரவீற்றிடைச் சொற்களின் முன் வலி வரின் எவ்வாறாம்? காலப் பொருள் தந்து ஏழாம்வேற்றுமைப்பொருள்பட வரும் மென்றொடர்க் குற்றுகர ஈற்றிடைச் சொற்களின் முன் வலி வரின் எவ்வாறாம்? 32. எக்குற்றுகரங்களின் முன் வரும் வல்லினம் வேற்றுமையிலும் இயல்பாம்? 33. நெடிற்றொடர்க் குற்றுகர மொழிகளுள்ளும் உயிர்த்தொடர்க்குற்றுகர மொழிகளுள்ளும் எவ்வெவைகள் இடையே மெய்யிரட்டித்து வரப்பெறும்? அல்வழியில் எங்கும் இவ்வாறு இரட்டுதலில்லையோ? வேற்றுமையில் இரட்டாது வருதலில்லையோ? டறவொற்றன்றிப் பிறவொற்று இருவழியும் இரட்டுதல் இல்லையோ? 34. மென்றொடர்க் குற்றுகர மொழி வேறுவிதி பெறாதோ? அல்வழியில் இங்ஙனம் வாராதோ? 35. மென்றொடர்க்குற்றுகரம் இன்னும் எவ்வாறாம்? வேறு குற்றுகரம் ஐகாரச் சாரியை பெறாதோ? 36 திசைப் பெயரோடு திசைப்பெயர் புணருமிடத்து எத்திசைப் பெயரோடு எத்திசைப் பெயர்புணரும்? திசைப்பெயர் வந்து புணரும்போது நிலைமொழிகளாக நிற்குந் திசைப்பெயர்கள் எவை? வடக்கு என்பதன் முன் திசைப்பெயரும் பிற பெயரும் வரின் எவ்வாறாம்? தெற்கு என்பதன்முன் திசைப் பெயரும் பிற பெயரும் வரின் எவ்வாறாம்? மேற்கு என்பதன் முன் பிற பெயர் வரின் எவ்வாறாம்? குணக்கு, குடக்கு என்பவற்றின் முன் பிற பெயர் வரின் எவ்வாறாம்? கிழக்கு என்பதன் முன் பிற பெயர் வரின் எவ்வாறாம்? கிழக்கு மேற்கு என்னும் பெயர்கள் வேறுவிதியும் பெறுமோ? திசைப் பெயர்கள் பொதுவிதி பெறுவோ? 37. தெங்கு என்பதன் முன் காய் வரின் எவ்வாறாம்? 38. ஒன்று முதல் எட்டீறாகிய எண்ணுப் பெயர்கள், தம்முன்னே எண்ணுப்பெயர் முதலிய பெயர்கள்

வரின், எவ்வாறும்? ஆறு என்பதன் முன் முக்கணமும் வரின் எவ்வாறும்? ஆறன் முன் உயிர்க்கணம் வரின் எவ்வாறும்? ஏழு என்பதன் முன் முக்கணமும் வரின் எவ்வாறும்? ஏழன் முன் உயிர்க்கணம் வரின் எவ்வாறும்? 39 ஒன்று என்பதன் முன் முக்கணமும் வரின் எவ்வாறும்? ஒன்றன்முன் உயிர்க் கணம் வரின் எவ்வாறும்? ஒன்றன்முன் உயிர் வந்தவிடத்து வேறு விதியும் பெறுமோ? ஒன்று மற்றைக்கணத்தில் வேறு விதியும் பெறுமோ? இரண்டு என்பதன் முன் முக்கணமும் வரின் எவ்வாறும்? இரண்டன்முன் உயிர்க்கணம் வரின் எவ் வாறும்? இரண்டன்முன் உயிர் வந்தவிடத்து வேறுவிதியும் பெறுமோ? இரண்டு மற்றைக்கணத்தில் வேறுவிதியும் பெறுமோ? 40. மூன்று என்பதன்முன் உயிர்க்கணம் வரின் எவ்வாறும்? மூன்றன் முன் வன்கணம் மென்கணம் வரின் எவ்வாறும்? மூன்றன் முன் இடைக்கணம் வரின் எவ்வாறும்? 41. நான்கு என்பதன் முன் உயிர்க்கணமும் இடைக்கணமும் வரின் எவ்வாறும்? நான்கன் முன் வன்கணம் வரின் எவ்வா றும்? நான்கன்முன் மென்கணம்வரின் எவ்வாறும்? 42. ஐந்து என்பதன்முன் மென்கணம் வரின் எவ்வாறும்? ஐந்தின்முன் வன்கணம் வரின் எவ்வாறும்? ஐந்தின்முன் உயிர்க்கணமும் இடைக்கணமும் வரின் எவ்வாறும்? 43. எட்டு என்பதன்முன் நாற்கணமும் வரின் எவ்வாறும்? 44. ஒன்பஃது என்பதன் முன் பத்து வரின் எவ்வாறும்? ஒன்பது என்பதன்முன் நூறு வரின் எவ்வாறும்? 45. ஒன்றுமுதலிய எட்டெண்களின்முன் பத்து வரின் எவ்வாறு புணரும்? 46 ஒருபஃது முதலிய எட்டெண்களின் முன்னும் ஒன்று முதல் ஒன்பதெண்ணும் அவ்வெண்களை யூர்ந்த பிற பெயரும் வரின் எவ்வாறும்? 47. பத்து என்பதன்முன் எண்ணுப்பெயர் முதலிய பெயர்கள் வரின் எவ்வாறும்? ஒன்பது என்பதன்முன் எண்ணுப்பெயர் முதலிய பெயர்கள் வரின் எவ்வாறும்? 48. பத்தின்முன் இரண்டு வரின் வேறு விதி பெறுமோ? 49. ஒன்பதொழிந்த ஒன்பது முதற் பத்தீறாகிய ஒன்பதெண்களையும் இரட்டித்துச் சொல்லுமிடத்து எவ்வாறும்?

---

## ஊகாரவீற்றுச் சிறப்புவிதி

**200.** **பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்.**

**இ - ள்.** பூப்பெயர் முன் - பூவென்னும் பலபொருட் பெயர்ச்சொல்லின்முன்—இன மென்மையும் தோன்றும் - வல்லினம்வரிற் பொதுவிதியான் மிகுதலேயன்றி அவற் றிற்கு இனமாகிய மெல்லினமும் மிகும். எ - று.

உ - ம். பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பணை என வரும். இவைகளுள்ளே பூவென்பது மலராயின், இரண்டாம் வேற்றுமைத் தொகை; அழகாயிற் பண்புத்தொகை.

இனமென்மையுந் தோன்றும் என்றது "இயல்பினும் விதியி னும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. (50)

**பரீக்ஷை வினா:**—50. பூ என்னும் பெயர்முன் வல்லினம் வரின் வேறு விதியும் பெறுமோ?

---

## ஏகார ஓகார வீற்றுச் சிறப்புவிதி

**201.** **இடைச்சொல் லேயோ முன்வரி னியல்பே.**

**இ - ள்.** இடைச்சொல் ஏ (முன்) ஓ முன் - இடைச் சொல்லாகிய ஆறேகாரத்தின் முன்னும் எட்டோகாரத்தின் முன்னும்—வரின் இயல்பு - வல்லினம் வரிற் பொதுவிதியால் மிகாது இயல்பாகும். எ - று.

உ - ம். (1.) அவனேகொண்டான் என்பது பிரிநிலையும் வினாவும் ஈற்றசையுந் தேற்றமுமாம். "ஏயே சினையென் றோரிருடி வினவ" என்பது இசைநிறை.

(2.) அவனோ கொண்டான் என்பது ஒழியிசை முதலிய எட்டுமாம்.

ஏ ஓ முன் வரின் இயல்பு என்றது "இயல்பினும் விதியி னும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது விலக்கல். (51

பரீக்ஷை வினு ;—51. சொல்வின் கடையில் வரும் ஏ ஓ என்னும் இடைச்சொற்களின் முன் வல்லினம் வரின் எவ்வாறும்?

---

## ஐகாரவீற்றுச் சிறப்புவிதி

**202.** வேற்றுமை யாயி னைகா னிறுமொழி
ஈற்றழி வோடுமம் மேற்பவு முளவே.

**இ - ள்.** ஐகான் இறுமொழி - ஐகாம் வீற்றுச்சொற்கள்—வேற்றுமை ஆயின் - வேற்றுமைக்கண் வருமாயின்—ஈற்று அழிவோடும் அம் ஏற்பவும் உள - ஈற்றைகாரங்கெடுதலுடனே அம்முச்சாரியை பெற்று முடிவனவும் சிலவுள. எ - று.

அழிவோடும் என்றமையால், அழியாமையோடும் அம் ஏற்பவு முளவெனக் கொள்க. வருமெழுத்துச் சொல்லாமையால், நாற்கணத்துள் ஏற்பன கொள்க.

உ - ம். (1.) வழுதுணை + காய் = வழுதுணங்காய், தாழை + பூ = தாழம்பூ, ஆவிரை + வேர் = ஆவிரம்வேர் என ஈற்றைகாரம் கெட்டு அம்முச்சாரியை பெற்றன.

(2.) புன்னை + கானல் = புன்னையங்கானல், முல்லை + புறவம் = முல்லையம்புறவம் என ஈற்றைகாரங் கெடாமல் அம்முச்சாரியை பெற்றன.

ஏற்பவுமுள என்றதனால், முல்லைப்புறவம் என வரினுங் கொள்க.

இது எய்தாததெய்துவித்தல். (52)

**203.** பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.

**இ - ள்.** பனைமுன் - பனையென்னும் பெயர்முன்—கொடிவரின் மிகலும் - கொடியென்னும் பெயர் வருமாயின்

வந்தது மிகுதலும்—வலி வரின் ஐ போய் அம்மும் - க ச த பக்கள் வருமாயின் நிலைமொழியீற்று ஐகாரங்கெட்டு அம்முப் பெறுதலும்—திரள்வரின் உறழ்வும் - திரளென்னும் பெயர் வருமாயின் வந்தது மிகுந்தும் ஐ போய் அம்முப்பெற்றும் விகற்பித்தலும்—அட்டு உறின் ஐ கெட்டு அந் நீள்வும் - அட்டென்னும் பெயர் வருமாயின் ஐகாரங்கெட்டு வருமொழி அகரம் ஆகாரமாதலும்—ஆம் வேற்றுமை - ஆகும் வேற்றுமைக்கண். எ - று.

உ - ம். பனைக்கொடி. எ - ம். பனங்காய். செறும்பு, தூண். பழம். எ - ம். பனைத்திரள், பனந்திரள். எ - ம். பனாட்டு. எ - ம். வரும். பனைக்கொடி—பனையை எழுதிய கொடி. பனாட்டு—பனையினது தீங்கட்டி.

பனைமுன் கொடிவரின் மிகும் என்றது "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்திய திகந்து படாமைக்காத்தல்; வலி வரின் ஐ போய் அம்முப்பெறும் என்றது "வேற்றுமையாயின்" என்னும் மேலைச்சூத்திரத்தால் எய்தியதிகந்துபடாமைக் காத்தல்; திரள் வரின் உறழ்வாம் என்றது "இயல்பினும்" என்பதனாலும் மேலைச் சூத்திரத்தாலும் எய்தியதிகந்துபடாமைக் காத்தல்; அட்டுறின் ஐ கெட்டு அந் நீள்வும் என்றது "இ ஈ ஐ வழி" என்பதனால் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல்.

பரீக்ஷை வினாக்கள்:—52. ஐகாரவீற்றுப் பெயர்களின்முன் வேற்றுமையில் நாற்கணத்துள் எற்பனவரின் எவ்வாறும்? 53. பனைமுன் கொடி வரின் எவ்வாறும்? பனைமுன் வல்லினம் வரின் எவ்வாறும்? பனைமுன் திரள்வரின் எவ்வாறும்? பனைமுன் அட்டு வரின் எவ்வாறும்?

## உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

# 4. மெய்யீற்றுப்புணரியல்

## மெய்யீற்றின்முன் உயிர்

**204.** உடன்மே லுயிர்வந் தொன்றுவ தியல்பே.

**இ - ள்.** உடல்மேல் - நிலைமொழி யீற்றில் நின்ற மெய்யின் மேல்—உயிர்வந்து ஒன்றுவது இயல்பே - வருமொழி முதலுயிர் வந்து ஒன்றுபட்டு இணங்கி நிற்பது இயல்பு புணர்ச்சியேயாம். எ - று.

**உ - ம்.** தோன்றல் + அழகன் = தோன்றலழகன், உரிஞ் + அழகிது = உரிஞழகிது, புகழ் + அழகிது = புகழழகிது. எ-ம். வேல் + எறிந்தான் = வேலெறிந்தான். எ - ம். வரும். (1

**205.** தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

**இ - ள்.** தனிக் குறில் முன் ஒற்று - தனிக்குற்றெழுத்தின் முன்னின்ற மெய்—உயிர் வரின் இரட்டும் - உயிர் வரின் இரட்டித்து நிற்கும். எ - று.

**உ - ம்.** மண் + அரிது = மண்ணரிது, பொன் + அரிது = பொன்னரிது. எ - ம். மண் + அகம் + மண்ணகம், பொன் + ஒளி = பொன்னொளி. எ - ம். வரும்.

இது மேலைச்சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்புவிதி; உயிரேற இடங்கொடுத்தலேயன்றி இரட்டித்தும் நிற்குமென்றலின். (2)

**பரீக்ஷை வினாக்கள்:**—1. மெய்யீற்றின்முன் உயிர் வரின் எவ்வாறு புணரும்? 2. தனிக்குறிலைச் சார்ந்து நின்ற மெய் முன் உயிர் வரின் எவ்வாறாம்?

---

## மெய்யீற்றின்முன் மெய்

**206.** தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரந்
துன்னு மென்று துணிநரு முளரே.

இ - ள். தன் ஒழி மெய்ம்முன் - தன்னையொழிந்த ஞ ண ந ம ன ர ல வ ழ ள என்னும் பத்து மெய்களின் முன்னும்—ய வரின் - யகரம் வந்தால்—இகரம் துன்னும் என்று துணிநரும் உளர் - இகரச்சாரியையைத் தன்முன் பொருந்துமென்று அறிதிற் கொள்வாருஞ் சிலருளர். எ-று.

உ-ம். வேளியாவன், மண்ணியாது. எ - ம். வேளியானை; மண்ணியானை. எ - ம். வரும்.

துணிநருமென்ற எதிர்மறையாய இழிவுசிறப்பும்மையால், வேள்யாவன், மண் யாது எனப்பொதுவிதிபெறுமென்பார் பலருளரெனக் கொள்க.

இது "எண் மூவெழுத்தீற்று" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. (3)

**207.** ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வல் மெய்வரின்
உவ்வுறு மேவ லுறுசில சில்வழி

இ - ள். ஞ ண ந ம ல வ ள ன ஒற்று இறு தொழிற் பெயர் ஏவல் வினை - ஞ ண ந ம ல வ ள ன என்னும் எட்டு மெய்களும் இறுதியாகிய முதல் நிலைத்தொழிற்பெயர்களும் ஏவல்வினைகளும்—ய அல் மெய் வரின் - யகரமொழிந்த மெய்கள் வருமாயின்—நனி உ உறும் - பெரும்பாலும் உகரச் சாரியையை இறுதிக்கட் பொருந்தும்—சில ஏவல் சில்வழி உறா - சில ஏவல் வினைகள் சிலவிடங்களிலே அவ்வுகரச் சாரியையைப் பொருந்தாவாம். எ - று.

முதல்நிலைத் தொழிற்பெயராவது தொழிற்பெயர்விகுதி தன்றி முதல்நிலை மாத்திரம் நின்று தொழிற்பெயர்ப் பொருளைத் தருவதாம்.

உ - ம். (1.) உரிஞுக்கடிது, உண்ணுக்கடிது, பொருநுக்கடிது, திருமுக்கடிது, தின்னுக்கடிது, சேண்டது, வலிது.

எ-ம். கடுமை, நீட்சி, வன்மை. எ-ம். தொழிற் பெயர்கள் இருவழியும் உகரம் பெற்றன. மற்றவை களும் இப்படியே. இவை, உரிஞுதல் உண்ணல் என் புழி வரும் விகுதி குன்றி, நின்றமை காண்க.

(2.) உரிஞு கொற்றா, உண்ணு கொற்றா, பொருநு கொற்றா, திருமு கொற்றா, தின்னு கொற்றா, நாகா, வளவா என ஏவல் வினை உகரம் பெற்றன. மற்றவை யும் இப்படியே.

உகரச்சாரியை பெற்றும் பெறாதும் வரும் ஏவல்வினை கள் ண ன ல ள என்னும் நான்கு ஈற்றனவுமாம். வரு மாறு: உண்கொற்றா, தின்சாத்தா, வெல்பூதா, துள் வளவா எனவரும். ஞ ந ம வ என்னும் நான்கீறும் உகரம் பெற்றே வரும்.

இது எய்தாததெய்துவித்தல். (4)

**208. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை.**

இ-ள். ந இறு தொழிற் பெயர்க்கு - நகரவிறுதி யாகிய முதல் நிலைத்தொழிற்பெயர்க்கு—அவ்வும் ஆம் வேற்றுமை - உகரச்சாரியையேயன்றி அகரச்சாரியையு மாகும் வேற்றுமைக்கண். எ-று.

உ-ம். பொருநக்கடுமை, நன்மை, வன்மை எனவரும். [பொரு நுதல் - ஒத்தல்; அது ஒருவர் மற்றொருவர்போல வேடங் கொள்ளும் பொருநரது தொழில். பொருநர்—கூத்தர்.]

இது மேலைச் சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. ()

**பரீக்ஷை வினாக்கள்:**—3. யகரமல்லாத மற்றைய மெய்கண் முன் யகரம் வரின் எவ்வாறும்? 4. ஞ ண ந ம ல வ ள ன என்னும் எட்டுமெய்களையும் ஈறாகவுடைய முதன் நிலைகள் முதன்நிலைத் தொழிற் பெயராங்காலத்தும், ஏவல்வினையாங்காலத்தும், அவைகளின்முன் மெய் வரின் எவ்வாறும்? முதல் நிலைத் தொழிற்பெயர் என்பதென்னை? இவ்வெட்டீற்றேவல் வினைக ளுள், உகரச்சாரியை பெறாதும் வருவன உளவோ? 5. முத

னிலைத் தொழிற்பெயர்களுள், பொருந் என்பது வேறு சாரி யையும் பெறுமோ?

---

## ணகர னகர வீறு

**209.** ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.

**இ - ள்.** ணன-ணகார னகாரங்கள்—வேற்றுமைக்கு வல்லினம் வரட் டறவும் - வேற்றுமைக்கண் வன்கணம் வந் தால் முறையே டகாரமும் றகாரமும்—பிற வரின் இயல்பும் ஆகும் - மெல்லினமும் இடையினமும் வந்தால் இயல்பும் ஆம்—அல்வழிக்கு அனைத்து மெய் வரினும் இயல்பு ஆகும்- அல்வழிக்கண் மூவின மெய்களும் வந்தாலும் இயல்பே யாகும். எ - று.

உ - ம். (1.) சிறுகண் + களிறு + சிறுகட்களிறு, பொன் + தகடு= பொற்றகடு என வேற்றுமையிலே வல்லினம் வர ணனக்கள் திரிந்தன.
(2.) மண்ஞாற்சி, பொன்ஞாற்சி. நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை என வேற்றுமையிலே மெல்லினமும் இடை யினமும் வர ண னக்கள் இயல்பாயின.
(3.) மண்கடிது, பொன்கடிது; சிறிது, தீது, பெரிது, ஞான்றது, நீண்டது, மாண்டது, யாது, வலிது என அல்வழியிலே மூவினமும் வர ண னக்கள் இயல் பாயின.

ஒப்பின்முடித்தலால், னகரமும் உடன்கூறினார். 'பின்னே கூட்டிச சொல்லப்படும் எழுத்துக்களுக்கும் இவ்வுத்தியே கொள்க. (6)

**210.** குறலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

இ - ள். குறில் அணைவு இல்லா ண னக்கள் - தனிக் குறிலொன்றனையுஞ் சாராது ஒருமொழி தொடர்மொழி களைச்சார்ந்த ணகார னகார மெய்கள்—வந்த நகரம் திரிந்துழி - வருமொழிக்கு முதலாக வந்த நகரம் மயக்க விதியில்லாமையினாலே திரிந்தவிடத்து—கேடு நண்ணும் - கெடுதலைப்பொருந்தும். எ . று.

உ - ம். (1.) தூண் + நன்று = தூணன்று, பசுமண் + நன்று = பசுமணன்று. எ - ம். நன்மை. எ - ம். ணகரம் இருவழியுங் கெட்டது.

(2.) அரசன் + நல்லன் = அரசனல்லன், செம்பொன் + நன்று = செம்பொனன்று. எ - ம். நன்மை. எ - ம். னகரம் இருவழியுங்கெட்டது.

ண னக்கள் வந்த நகரந் திரிந்துழி நண்ணுங்கேடு என்றது மேலைச்சூத்திரத்தால் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல்.

211. சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே.

இ - ள். சாதிப் (பெயர்) - சாதிபற்றி வரும் பெயர்களுக்கும்—குழூஉப் (பெயர்) - திரள் பற்றி வரும் பெயர்களுக்கும்—பரண் கவண் பெயர் - பரண் கவணென்னும் பெயர்களுக்கும்—இறுதி - ஈற்று ணகரம்—வேற்றுமைக் (கும்) இயல்பு ஆம்-வேற்றுமைக்கண்ணும் வல்லினம்வரின் இயல்பாகும்—உணவு எண் (பெயர்) - உணவுக்குரிய எள்ளின்றிரிசொல்லாகிய எண்ணென்னும் பெயருக்கும்—சாண் (பெயர்) - சாணென்னும் நீட்டலளவைப் பெயருக் கும்—(இறுதி) - ஈற்று ணகரம்—அல்வழியும் டவ்வாகலும் ஆம் - அல்வழிக்கண்ணும் வல்லினம் வரின் திரிந்து டகரமாதலும் பொருந்தும். எ - று.

உ-ம். (1.) பாண்குடி, உமண்குடி. எ-ம். அமண்குடி. எ-ம். பரண்கால். எ-ம். கவண்கால். எ-ம். வேற்றுமையிலும் இயல்பாயிற்று. [பாண் - பாடுதற்றொழிலுடைய தொருசாதி. உமண் - உப்பமைத்தற்றொழிலுடைய தொருசாதி. அமண் - அருகனை வழிபடுவதொரு கூட்டம்.]

(2.) எண் + கடிது = எட்கடிது, சாண் + கோல் = சாட்கோல் என அல்வழியிலுந் திரிந்தது. டவ்வாகலுமாம் என்ற உம்மையால், எண்கடிது, சாண்கோல் என இயல்பாதலே சிறப்பாம்.

பிற என்ற மிகையால் வேற்றுமையில், பாணக்குடி என அகரச்சாரியை பெறுதலும், அட்டுண்டுழனி என்னும் இயல்பும், மட்குடம் மண்குடம் என்னும் உறழ்வும் இருவழியிலும் இன்னும் ணகரவீற்றுள் அடங்காதவையுண்டேல், அவையுங்கொள்க.

இயல்பாம் வேற்றுமைக்கு என்றது "ணன வல்லினம் வரட்டறவும்" என எய்தியது விலக்கல்; டவ்வாகலுமாம் அல்வழியும் என்றது "அல்வழிக்கனைத்து மெய் வரினு மியல்பாகும்" என எய்தியதன்மேற் சிறப்புவிதி. (8)

**212. ணஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான் அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.**

இ-ள். ணஃகான் கிளைப்பெயர் - ணகரத்தையிறுதியிலுடைய சாதிப்பெயர்—இயல்பும் - வல்லினம் வர ஈறு திரியாதியல்பாதலும்—அஃகான் அடைவும் - அகரச்சாரியை பெறுதலும்—வேற்றுமைப் பொருட்கு ஆகும் - வேற்றுமைப்பொருட் புணர்ச்சிக்கண் ஆகும். எ - று.

உ-ம். எயின்குடி, எயினக்குடி, சேரி, தோட்டம், பாடி என வரும். [எயின் - வேட்டுவச்சாதி.]

பொருட்கே என்ற மிகையால், எயின மரபு, எயினவாழ்வு. எயினவணி என மற்றைக்கணம் வரினும் அகரச்சாரியை,

பெறுதலும், எயினக்கன்னி எயினப்பிள்ளை, எயினமன்னன் என அல்வழியில் அகரச்சாரியை பெறுதலுங் கொள்க.

வேற்றுமைப்பொருட்கு இயல்பு என்றது "ண ன வல்லினம் வரட்டறவும்" என எய்திபது விலக்கல்; அஃகானமடைவு என்றது பிறிதுவிதி வகுத்தல். (9)

**213. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.**

இ - ள். மீன் - மீனென்னு மொழியிறுதி னகரம்—வேற்றுமைவழி - வேற்றுமைக்கண் வல்லெழுத்து வரின்—றவ்வொடு பொரூஉம் - றகரத்தோடு உறழ்ந்துவரும். எ-று.

உ - ம். மீன் + கண் = மீற்கண், செவி, தலை, புறம் என வரும்.

றவ்வொடு பொரூஉம் வேற்றுமைவழி என்றது "ண ன வல்லினம் வரட்டறவும்" என எய்தியதொருவாற்றால் விலக்கல். (10)

**214. தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை**
**மேவி னிறுதி யழிவும் வலிவரின்**
**ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி.**

இ - ள். தேன் மொழி - தேனென்னுஞ்சொல்—மெய் வரின் இயல்பும் - மூவின மெய்களும் வரின் இறுதி னகர மெய் இயல்பாதலும்—மென்மை மேவின் இறுதி அழிவும் - மெல்லினம் வரின் அம்மெய் இயல்பாதலேயன்றிக் கெடுதலும்—வலி வரின் ஈறு போய் வலி மெலி மிகலும் ஆம் - வல்லினம் வரின் அம்மெய் இயல்பாதலே யன்றிக் கெட வந்த வல்லினமாவது அதற்கு இனமாவது மிகுதலும் ஆகும்—இருவழி - இருவழிக்கண்ணும். எ - று.

உ - ம். (1.) தேன்கடிது, தேன்ஞான்றது, தேன்யாது. எ - ம். தேன்மொழி, தேமொழி. எ-ம். தேன்குழம்பு, தேக்குழம்பு, தேங்குழம்பு. எ-ம். அல்வழியில் வந்தன.

(2.) தேன் கடுமை, தேன் மலிவு, தேன் யாப்பு. எ - ம். தேன்மலர், தேமலர். எ - ம். தேன்குடம், தேக்குடம், தேங்குடம். எ - ம். வேற்றுமையில் வந்தன.

இருவழி மெய் வரின் இயல்பு என்றது "ண ன வல்லினம் வரட்டறவும்" என எய்தியது விலக்கலும், "பிறவரினியல்பு மாகும் வேற்றுமைக்கல்வழிக் கனைத்துமெய் வரினு மியல்பாகும்" என எய்தியது இகந்துபடாமைக் காத்தலும்; "மென்மை மேவி னிறுதியழிவும் வலி வரி னீறுபோம்" என்றது இச்சூத்திரத்தால் இயல்பு என எய்திபதன்மேற் சிறப்புவிதி; வலி மெலி மிகும் என்றது "இயல்பினும் விதியினும்" என்பதனால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. (11)

**215. மரமல் லெகின்மொழி யியல்பு மகரம்**
**மருவ வலிமெலி மிகலு மாகும்.**

இ - ள். மரம் அல் எகின்மொழி - மரமல்லாத அன்னத்தை புணர்த்தும் எகினென்னுஞ் சொல்—இயல்பும் - வேற்றுமையிலும் வல்லினம் வர இறுதி இயல்பாதலும்—அகரம் மருவ வலி மெலி மிகலும் ஆகும் - இருவழியிலும் அகரச்சாரியை பொருந்த வரும் வல்லெழுத்தாவது அதற்கு இனமாவது மிகுதலும் ஆகும். எ - று.

உ - ம். (1.) எகின்கால், சிறை, தலை, புறம் என வேற்றுமையிலும் இயல்பாயிற்று.

(2.) எகினப்புள், எகினம்புள். எ-ம். எகினக்கால், எகினங்கால். எ-ம். இருவழியிலும் அகரம் வர வலி மெலி மிகுந்தன.

அகரம் வருதற்கு வருமெழுத்தைச் சொல்லாமையால்; நாற்கணமுங் கொள்க. எகின மாட்சி, எகினவாழ்க்கை, எகின வழகு என வரும்.

எகின்மொழியியல்பு என்றது "ண ன வல்லினம் வரட்டறவும்" என எய்தியது விலக்கல்; அகரமருவும் என்றது அச்சூத்திரத்தால் இருவழிக்கண்ணும் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல்; வலி மெலி மிகும் என்றது "இயல்பினும் விதியினும்" என்பதனால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. (12)

**216. குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே.**

இ - ள். குயின் ஊன் - குயினென்னும் பெயரும் ஊனென்னும் பெயரும்—வேற்றுமைக்கண்ணும் இயல்பு - வேற்றுமையினிடத்தும் இயல்பாகும். எ - று.

உ - ம். குயின்கடுமை, ஊன்கடுமை, சிறுமை, தீமை, பெருமை என வரும். [குயின் - மேகம்.]

வேற்றுமைக்கண்ணுமியல்பு என்றது "ணன வல்லினம் வரட்டறவும்" என எய்தியது விலக்கல். (13)

**217.** மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.

இ - ள். மின் பின் பன் கன் தொழிற்பெயர் அனைய - மின் முதலிய நான்கு சொற்களும் முதல்நிலைத் தொழிற்பெயர் போல யகரமல்லாத மெய்கள் வரின் உகரச் சாரியை பொருந்தும்—கண் அ ஏற்று மென்மையோடு உறழும் - இவற்றுட் கன்னென்னுஞ் சொல் உகரச் சாரியையேயன்றி அகரச் சாரியையும் பெற்று வல்லினம் வந்தால் வருமெழுத்தாவது அதற்கு இனமாவது மிகப்பெறும். எ - று.

உ - ம். மின்னுக்கடிது, பின்னுக்கடிது, பன்னுக்கடிது, கன்னுக்கடிது, நன்று, வலிது. எ - ம். கடுமை, நன்மை, வன்மை. எ - ம். கன்னத்தட்டு, கன்னந்தட்டு. எ - ம் கன்னத்தூக்கு, கன்னந்தூக்கு. எ - ம். அல்வழி வேற்றுமையில் முறையே வந்தன. [பன் - இறை. கன் - சிறுதராசுத்தட்டு.]

தொழிற்பெயரனைய என்றதும் அவ்வேற்றும் என்றதும் "ணன வல்லினம் வரட்டறவும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல்; மென்மையோடுறழும் என்றது "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. (14)

**218.** தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோ
டுறழு நின்னீ றியல்பா முறவே.

இ - ள். தன் என் என்பவற்று ஈற்று ன - தன் என் என்னும் விகார மொழிகளுடைய இறுதியிலுள்ள னகர மெய்—வன்மையோடு உறழும் - வல்லினம் வரிற் பொது விதியால் றகரமாகத் திரிதலும் அவ்விதி யேலாது இயல்பாதலுமாம்—நின் ஈறு இயல்பு ஆம் - நின்னென்னும் விகார மொழியினது இறுதியிலுள்ள னகரமெய் வல்லினம் வரின் திரியாது இயல்பேயாகும். எ - று.

உ - ம். தன்பகை, தற்பகை, என்பகை, எற்பகை. எ - ம்; நின்பகை. எ - ம். வரும்.

உறவே என்ற மிகையால், மின் பின் முதலியவை. மின்கடிது, மின்கடுமை என இருவழியுஞ் சாரியை பெறுதலுந் திரிதலு மின்றி வருதலும், மான் குளம்பு, அழன்கை, கான் கோழி, வான்சிறப்பு, அலவன் கால், கலுழன் சிறை என வேற்றுமையிலே சிறப்பு விதி சொல்லப் பெறாதவைகள் இயல்பாதலும், வரிற் கொள்ளும் எனச் செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சம் பொதுச்சூத்திரத்தால் இயல்பாகாது திரிதலும், இன்னும் னகர மெய்யீற்றுள் அடங்காதவை இருந்தால் அவையுங் கொள்க. [அழன் - பிணம்.]

னவ் வன்மையோடுறழும் என்றது "ணன வல்லினம் வரட்டறவும்" என எய்தியதொருவாற்றான் விலக்கல்; நின்னீறியல்பாம் என்றது எய்தியது விலக்கல். (15)

பரீக்ஷை வினாக்கள்:—6. ண ன முன் வேற்றுமையில் வன்கணம் வரின் எவ்வாறும்? ண ன முன் வேற்றுமையில் மென்கணமும் இடைக்கணமும் வரின் எவ்வாறும்? ண ன முன் அல்வழியில் மூக்கணமும் வரின் எவ்வாறும்? செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சவிறுதி னகரம் வன்கணம் வரின் எவ்வாறும்? இதற்கு விதி எதனாற் கொள்ளப்படும்? 7. தனிக்குறிலைச் சாராது நெடின் முதலியவற்றைச் சார்ந்து நின்ற ணகர னகரம் எங்கும் இயல்பாகவே நிற்குமோ? 8. ணகரம் எந்த மொழியினும் வேற்றுமையிற்றிரிந்தே வருமோ? ணகரம் எந்த

மொழியினும் அல்வழியில் வல்லினம் வரின் இயல்பே பெறுமோ? வேற்றுமையிலும் இயல்பே பெறும் ணகரவீற்றுச் சொல் இன்னும் உண்டோ? ணகரம் வன்கணம் வரின் வேற்றுமையில் உறழ்ந்து வருதல் எங்கும் இல்லையோ? 9. எந்த மொழியினும் னகரம் வேற்றுமையிற்றிரிந்தே வருமோ? எயினென்னுஞ் சாதிப்பெயர் வேற்றுமையில் வேறு விதியும் பெறுமோ? இப்பெயர் அல்வழியில் அகரச் சாரியை பெறாதோ? 10. மீனென்னும் மொழியிறுதி னகரம் வேற்றுமையில் வன்கணம் வரின் இயல்பே பெறுமோ? 11. தேனென்பதன்முன் முக்கணமும் வரிற் பொதுவிதியே பெறுமோ? 12 அன்னத்தையுணர்த்தும் எகினென்னும் மொழியிறுதி னகரம் வேற்றுமையில் திரிந்தே வருமோ? இவ்வெகினென்பது வேறு விதியும் பெறுமோ? 13. குயின் ஊன் என்னும் பெயர்கள் வேற்றுமையில் திரிந்தே வருமோ? 14. மின் பின் பன் கன் என்னு நான்கு பெயரும் இருவழியும் எவ்வாறும்? கன்னென்னும் பெயர் வேறுசாரியையும் பெறுமோ? 15. தன் என் என்பவற்றின் னகரம் வலி வரின் எவ்வாறும்? நின் இக கணம் வாராதோ? வேற்றுமையிலேசிறப்புவிதி சொல்லப்பெறா விடத்தும் இயல்பாகவே வரும் னகரவீற்றுப் பெயர்கள் இன்னுமுளவோ? மின் முதலிய நான்கும் மற்றும் விதி பெறாவோ?

---

## மகர வீறு

219. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்.

இ - ள். மவ்வீறு - மகரவீற்றுச் சொற்கள்—ஒற்று அழிந்து உயிரீறு ஒப்பவும் - நாற்கணமும் வர இறுதியிலுள்ள மகரமெய் கெட விதிபுயிரீறாய் நின்று இயல்புயிரீறுபோலப் புணர்வனவும்—வன்மைக்கு இனம் ஆத் திரிபவும் ஆகும் - வல்லினம் வரிற்கெடாது அவற்றிற்கு இனமாகத் திரிவனவும் ஆகும். எ - று.

உயிரீறு ஒத்தலாவது, உயிர்வரின் அவை உடம்படுமெய்பெறுவும், வல்லினம் வரின் அவை மிகவும், மெல்லினமும் இடையினமும் வரின் அவை இயல்பாகவும் புணர்தல்.

மகரமெய் உயிரும் இடையினமும் வல்லினமும் வரக் கெடுவது வேற்றுமையிலும் அல்வழியிலே பண்புத்தொகை உவமைத் தொகையிலுமாம் எனவும், மெல்லினம் வரக்கெடுவது இருவழியிலுமாம் எனவுங் கொள்க.

மகரமெய் வல்லினம் வரக்கெடாது இனமெல்லெழுத்தாகத் திரிவது பண்புத்தொகை உவமைத்தொகை யிரண்டும் ஒழிந்தொழிந்த அல்வழிப்புணர்ச்சியிலாம் எனவும், வினையாலணையும் பெயரிறுதி மகரமும், தனிக்குறிலைச்சார்ந்த மகரமும், வேற்றுமையிலும் வல்லினம் வரிற் கெடாது இனவெழுத்தாகத் திரியும் எனவுங் கொள்க.

உ - ம் (1.) மரம்+அடி=மரவடி, மரம்+வேர்=மரவேர், மரம்+கோடு=மரக்கோடு எனவேற்றுமையிலும், வட்டம்+ஆழி=வட்டவாழி, வட்டம்+வடிவம்=வட்ட வடிவம், வட்டம்+கல்=வட்டக்கல் எனப் பண்புத்தொகையிலும், பவளம்+இதழ்=பவளவிதழ், பவளம்+வாய்=பவளவாய், கமலம்+கண்=கமலக்கண், என உவமைத்தொகையிலும் உயிரும் இடையினமும் வல்லினமும் வர ஈறு கெட்டு உயிரீறு போன்முடிந்தன. மரம்+நார்=மரநார். எ - ம். மரம்+நீண்டது=மரநீண்டது, வட்டம்+நேமி=வட்டநேமி. எ - ம். மெல்லினம் வர ஈறு கெட்டு உயிரீறுபோன் முடிந்தன.

(2.) நாம்+கடியம்=நாங்கடியம், நிலம்+தீ=நிலந்தீ, உண்ணும்+சோறு=உண்ணுஞ்சோறு, உண்டனம்+சிறியேம்=உண்டனஞ்சிறியேம், பூதனும்+தேவனும்=பூதனுந் தேவனும் என அல்வழிக்கண் எழுவாய்த் தொடர்முதலியவற்றில் வல்லினம் வர ஈறு திரிந்து முடிந்தது. சிறியேம்+கை=சிறியேங்கை. எ - ம். நம்+கை=நங்கை. எ - ம். வினையாலணையும் பெயர்

இறுதிமகரமுந் தனிக்குறிலைச் சார்ந்த மகரமும் வேற்றுமையிலும் வல்லினம் வரத்திரிந்து முடிந்தன.

இனமாத்திரியும் என்றமையின், அருத்தாபத்தியால், நாம் பெரியம், சிறியேம்பண்பு எனப் பகரம் வருவழித் திரியாதென்பது பெற்றாம். (16)

**220. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்
அல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.**

**இ - ள்.** வேற்றுமை மப்போய் வலிமெலி உறழ்வும் - வேற்றுமைக்கண் மகரவிறுதி கெட வல்லினமாவது அவற்றிற்கு இனமாவது மிகுதலும்—அல்வழி உயிர் இடைவரின் இயல்பும் உள - அல்வழிக்கண் உயிரும் இடையினமும் வரிற் கெடாது இயல்பாதலும் உளவாம். எ - று.

மகரமெய் உயிரும் இடையினமும் வர இயல்பாவது பண்புத்தொகை உவமைத்தொகை இரண்டுமொழித்தொழிந்த அல்வழிப் புணர்ச்சியிலெனக் கொள்க.

உ - ம். (1.) குளம் + கரை = குளக்கரை, குளங்கரை என வேற்றுமையில் ஈறு கெட்டு உறழ்ந்தது.

(2.) மரமடைந்தது, மரம் வலிது. எ - ம். வலமிடம், நிலம் வானம். எ-ம். உண்ணுமுணவு, ஆளும் வளவன். எ-ம். உண்டனமடியேம், உண்டனம் யாம். எ-ம். அரசனுமமைச்சனும், புலியும் யானையும். எ-ம். எழுவாய்த்தொடர் முதலிய அல்வழியில் உயிரும் இடையினமும் வர ஈறுகெடாது இயல்பாக முடிந்தது.

வினையாலணையும் பெயரிறுதி மகரமுந் தனிக்குறிலைச் சார்ந்த மகரமும், சிறியேமன்பு, சிறியேம் வாழ்வு. எ-ம். நம்மன்பு, நம்வாழ்வு. எ-ம். வேற்றுமையிலும் உயிரும் இடையினமும் வர இயல்பாமெனக் கொள்க.

மப்போம் என்றது மேலைச்சூத்திரத்தால் எய்தியது இகந்துபடாமைக்காத்தல்; வலி மெலியுறழும் என்றது "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்பு

விதி அல்வழியுயிரிடை வரினியல்பாம் என்றது மேலைசூத்திரத்தால் எய்தியது விலக்கல். (17)

**221.** நுந்தம்,
எம் நம் மீறு மவ்வரு ஞநவே.

**இ - ள்.** நும் தம் எம் நம் ஈறு ஆம் ம - நும் முதலிய நான்கு விகாரமொழிகளுக்கும் இறுதியாகிய மகரமெய்— வரு ஞ ந - வரு ஞகர நகரங்களாகத்திரியும். எ - று.

**உ - ம்.** நுஞ்ஞாண், நுந்நூல், தஞ்ஞாண், தந்நூல், எஞ்ஞாண், எந்நூல், நஞ்ஞாண், நந்நூல் என வரும்.

ஞ ந வரின் அவையாகத் திரியும் எனவே, ஒழிந்த மகரம் வரின், நும்மணி என இயல்பாமென்பது பெற்றாம்.

மவ் வரு ஞ ந என்றது "மவ்வீறொற்றழிந்து என எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல். (18)

**222.** அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்.

**இ - ள்.** அகமுனர்ச் செவி கை வரின் - அகமென்னும் இடப்பெயர் முன் செவி கையென்னுஞ் சினைப்பெயர்கள் வந்தால்—இடையன கெடும் - நிலைமொழி யிறுதிமகரம் வன்மைக்கு இனமாகத் திரிதலேயன்றி அதன்நடு நின்ற ககர மெய்யும் அதன்மேலேறிய அகரவுயிருங்கெடும். எ-று.

**உ - ம்.** அகம்+செவி=அஞ்செவி, அகம்+கை=அங்கை என வரும்.

கெட்டே வரும் என்னுமையால், அகஞ்செவி, அகங்கை என வருவனவுங் கொள்க.

இடையன கெடும் என்றது வன்மைக் கினமாத்திரியும்" என எய்தியன்மேற் சிறப்புவிதி. (19)

**223.** ஈமுங்,
கம்மு முருமுந் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

இ - ள். ஈமும் கம்மும் உருமும் - ஈம் கம் உரும் என்னும் மூன்று சொல்லும்—தொழிற்பெயர் மானும் - இருவழியும் முதல்நிலைத் தொழிற்பெயர்போல யகரமல்லாத மெய்கள் வரின் உகரச்சாரியை பெற்று முடியும்—முதலனை வேற்றுமைக்கு அவ்வும் பெறும் - இவற்றுள்ளே முதற்கண் நின்ற ஈமும் கம்மும் வேற்றுமைக்கண் உகரச்சாரியை யன்றி அகரச்சாரியையும் பெறும். எ - று.

உ - ம். ஈமுக்கடிது, கம்முக்கடிது, உருமுக்கடிது, நீண்டது, வலிது. எ - ம். கடுமை, நீட்சி, வன்மை. எ - ம். ஈமக்குடம், கம்மக்குடம். எ-ம். வரும். [ஈம் - சுடுகாடு. கம் - கம்மியரது தொழில். உரும் - இடி.]

இது "மவ்வீறொற்றழிந்து" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல். (20)

**பரீக்ஷை விஞக்கள்:**—16. மகரவீற்றின்முன் நாற்கணமும் வரின் எவ்வாறும்? உயிரீறொத்தல் என்பதென்னை? மகரமெய் உயிரும் இடையினமும் வல்லினமும் வரக் கெடுவது எவ்விடத்து? மெல்லினம் வரக் கெடுவது எவ்விடத்து? வல்லினம் வரக் கெடாது இனமெல்லெழுத்தாகத்திரிவது எவ்விடத்து? வேற்றுமையில் இனமெல்லெழுத்தாகத் திரிந்து வருதல் எங்கும் இல்லையோ? 17. வேற்றுமையில் மகரங் கெட்டவழிவரும் வல்லெழுத்து மிகுதலன்றி வேறு விதி பெறுதோ? மகரவீறு உயிரும் இடையினமும் வர இயல்பாவது எவ்விடத்து? வேற்றுமையில் உயிரும் இடையினமும் வர மகரங் கெடாது இயல்பாதல் எங்குமில்லையோ? 18. மெல்லினம்வர மகரங் கெடாது முடிதல் எங்குமில்லையோ? 19. அகம் என்பதன்முன் செவி, கை எனபன வரின் வேறு விதியும் பெறுமோ? 20. மகரவீறு கெடுதல் திரிதல் இயல்பாதலன்றி வேறு விதி பெறுதல் எங்கும் இல்லையோ? ஈம், கம் இவ்விரண்டும் வேறு சாரியையும் பெறுமோ?

## யழர வீறு

**224.** யரழ முன்னர்க் கசதப வல்வழி
இயல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.

இ - ள். யரழ முன்னர்க் கசதப - யகர ரகர ழகர மெய்களின் முன் ககர சகர தகர பகரங்கள் வரின்—அல்வழி இயல்பும் மிகலும் - அல்வழியில் இயல்பாதலும் மிகுதலும்—வேற்றுமை மிகலும் இனத்தோடு உறழ்தலும் - வேற்றுமையில் மிகுதலும் வல்லினமாவது மெல்லினமாவது மிகுதலும்—விதி ஆகும் - விதியாகும். எ - று.

அல்வழி யியல்பு மிகுதியிரண்டனுள் இயல்பு எழுவாய்த் தொடர் உம்மைத்தொகை வினைத்தொகைகளிலும், மிகுதி பண்புத்தொகை உவமைத்தொகைகளிலுங் கொள்ளப்படும். யகர ஈற்று வினையெச்சத்தின் முன் வரும் வல்லினம் மிகும்; ரகர ஈற்று வினையெச்சத்தின் முன்வரும் வல்லினம் இயல்பாம்.

உ - ம். (1.) வேய்குறிது, வேர்சிறிது, யாழ்பெரிது. எ - ம். பேய்பூதம், நீர்கனல், இகழ்புகழ். எ-ம். செய்கடன், தேர்பொருள், வீழ்புனல். எ-ம். உண்ணியர் போவான். எ - ம். எழுவாய்த்தொடர் முதலியவற்றில் இயல்பாயின. மெய்க்கீர்த்தி, கார்ப் பருவம், பூழ்ப்பறவை. எ - ம். வேய்த்தோள், கார்க்குழல், காழ்ப்படிவம். எ - ம். போய்க்கொண்டான். எ-ம். பண்புத்தொகை முதலியவற்றில் மிகுந்தன.

(2.) நாய்க்கால், தேர்த்தலை, பூழ்ச்செவி என வேற்றுமையில் மிகுந்தன. வேய்க்குழல், வேய்ங்குழல்; ஆர்க்கோடு, ஆர்ங்கோடு என வேற்றுமையில் இனத்தோடு உறழ்ந்தன.

மேல் என்ற மிகையால், வாய்புகுவதனினும் என வேற்றுமையில் இயல்பாதலும், பாழ்க்கிணறு, பாழ்ங்கிணறு எனப் பண்புத் தொகையில் உறழ்தலும்

காய்+யாது=காயாது; நோய்+யானை=நோயானை எனத் தனிக்குறிலைச் சாராத யகரத்தின்முன் யகரம் வரின் இருவழியும் நிலைமொழி யிறுதி யகரங் கெடுதலும், இன்னும் அடங்காதவைக ளிருந்தால் அவைகளுங் கொள்க. (21)

**225.** தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே.

இ - ள். தமிழ்வேற்றுமைக்கு அ உறவும் பெறும் - தமிழென்னுஞ் சொல் நாற்கணமும் வரின் வேற்றுமைக்கண் அகரச் சாரியை பொருந்தவும் பெறும்—தாழும் கோல் வந்து உறுமேல் அற்று-தாழென்னுஞ் சொல்லுங் கோலென்னுஞ் சொல்லும்வந்து பொருந்துமாயின் அவ்வகரச்சாரியையைப் பெறும். எ - று.

உ - ம். தமிழப் பிள்ளை, தமிழநாகன், தமிழ வளவன், தமிழ வரசன். எ-ம். தாழக்கோல். எ-ம். வரும். தமிழையுடைய பிள்ளை, தாழைத்திறக்குங்கோல் என விரியும். [தாழக் கோல் - திறவு கோல்.]

இது எய்தாததெய்துவித்தல். (22)

**226.** கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.

இ - ள். கீழின் முன் வன்மை - கீழென்னுஞ் சொல்லின்முன் வரும் வல்லினம்—விகற்பமும் ஆகும் - ஒருகால் இயல்பாகியும் ஒருகால் மிக்கும் வரும் விகற்பத்தையும் பொருந்தும். எ - று.

உ - ம். கீழ்குலம், கீழ்க்குலம்; கீழ்சாதி, கீழ்ச்சாதி என வரும். விகற்பமும் என்னும் இழிவுசிறப்பும்மையால், இவற்றுள் இயல்பே சிறப்புடைத்தென்றறிக.

வன்மை விகற்பமாகும் என்றது "யரழ முன்னர்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது பெரும்பாலும் விலக்கல். (23

**பரீக்ஷை வினாக்கள்:**—21. யரழ வீற்றின் முன் வல்லினம் வரின் எவ்வாறாம்? அல்வழியில் யரழ வொற்றின் முன் வரும் வல்லினம் எவ்விடத்தியல்பாம். எவ்விடத்து மிகும்? ழகரவொற்றின் முன் வரும் வல்லினம் அல்வழியில் இனத்தோடுறழ்தல் எங்கும் இல்லையோ? 22. தமிழென்னுஞ் சொல் முன் வேற்றுமையில் நாற்கணமும் வரின் வேறு விதி பெறாதோ? தாழ் என்பதன் முன் கோல் வரின் வேறு விதிபெறாதோ? 23. கீழ் என்பதன்முன் வேற்றுமையில் வன்கணம் வரின் எவ்வாறாம்?

---

## லகர ளகர வீறு

**227.** லளவேற் றுமையிற் றடவு மல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியல்பும்
ஆகு மிருவழி யானு மென்ப.

**இ - ள்.** ல ள - லகர ளகரமாகிய இரண்டு மெய்யீறுகளும்—வலி வரின் - வல்லினம் வந்தால்—வேற்றுமையில் றடவும் - வேற்றுமைக்கண் முறையே றகர டகர மெய்களும்—அல்வழி அவற்றோடு உறழ்வும் ஆம் - அல்வழிக்கண் றகர டகாரங்களுடனே உறழ்வனவும் ஆகும்—இருவழியானும் - இருவழிக் கண்ணும்—மெலி மேவின் னணவும் - மெல்லினம் வந்தால் முறையே னகர ணகர மெய்களும்—இடை வரின் இயல்பும் ஆகும் - இடையினம் வந்தால் இயல்பும் ஆகும்—என்ப - என்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம் (1.) கல் + குறை = கற்குறை, முள் + குறை = முட்குறை என வல்லினம் வர வேற்றுமையில் றகர டகரங்களாகத் திரிந்தன.

(2.) கல் + குறிது, = கல்குறிது, கற்குறிது; முள் + குறிது = முள் குறிது, முட்குறிது என வல்லினம் வர அல்

வழியில் ஒருகால் இயல்பாகியும் ஒருகாற் றிரிந்தும் உறழ்ந்தன.

(3.) கல் + மாண்டது = கன்மாண்டது, முள் + மாண்டது = முண்மாண்டது. எ-ம். கல் + மாட்சி = கன்மாட்சி, முள் + மாட்சி = முண் மாட்சி, எ-ம். மெல்லினம் வர இருவழியும் னகர ணகரமாகத் திரிந்தன.

(4.) கல் + யாது = கல்யாது, முள் + யாது — முள்யாது எ-ம். கல் + யாப்பு = கல்யாப்பு, முள் = யாப்பு = முள் யாப்பு. எ-ம். இடையினம் வர இருவழியும் இயல்பாயின.

அல்வழியவற்றோடுறழ்வும் என்றாரேனும், இவற்றோடு மயங்காத தகரம் வரின், ஏற்புழிக்கோடலால், கற்றீது, முட்டீது எனத் திரிபொன்றுமே கொள்க. ()

**228.** குறில்வழி லளத்தவ் வணையி னாய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே.

**இ-ள்.** குறில் வழி லள - தனிக் குறிலின் பின்னின்ற லகர ளகர மெய்கள் — அல்வழியான் த அணையின் - அல்வழிக்கண்ணே தகரம் வருமாயின் — ஆய்தம் ஆகவும் பெறூஉம் - றகர டகரங்களாகத் திரிதலேயன்றி ஆய்தமாகத் திரிதலையும் பொருந்தும். எ-று.

**உ-ம்.** கல் + தீது = கஃறீது, முள் + தீது = முஃடீது என வரும். இது மேலைச்சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. (25)

**229.** குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்புந் திரிபு மாவன வுளபிற.

**இ-ள்.** குறில்செறியா லள - தனிக்குறிலொன்றனை யுஞ் சாராத லகார ளகார மெய்கள் — அல்வழி வந்த தகரந் திரிந்தபின் கேடும் - அல்வழிக்கண் வருமொழிக்கு முதலாய்

வந்த தகரந்திரியுமிடத்துக் கெடுதலும்—ஈரிடத்தும் வரு நத்திரிந்தபின் மாய்வும்- இருவழிக் கண்ணும் வருமொழிக்கு முதலாய்வந்த நகரந்திரியுமிடத்துக் கெடுதலும்— வலி வரின் இயல்பும் திரிபும் ஆவன உள - வல்லெழுத்து முதன்மொழி வந்தால் அல்வழிக்கண் உறழாது இயல்பாதலும் திரிதலும் வேற்றுமைக்கண்ணே திரியாது இயல்பாதலும் பொருந்து வனவுள. எ - று.

லளக்கள் அல்வழியில் வல்லினம் வர உறழாது இயல்பாவது எழுவாய்த்தொடர் உம்மைத்தொகை விளித்தொடர் வினைமுற் றுத்தொடர் வினைத்தொகைகளிலும், திரிவது பண்புத்தொகை. உவமைத்தொகை வினையெச்சங்களிலுமெனக் கொள்க.

உ - ம். (1.) வேல் + தீது = வேறீது, தோன்றல் + தீயன் = தோன்றறீயன், வாள் + தீது = வாடீது, வேள் + தீயன் = வேடீயன் என அல்வழியிலே தகரந்திரியுமிடத்துக் கெட்டன.

(2.) தோன்றல் + நல்லன் = தோன்றனல்லன், வேள் + நல்லன் = வேணல்லன். எ-ம். தோன்றல் + நன்மை = தோன்றனன்மை, வேள் + நன்மை = வேணன்மை. எ-ம். இருவழியிலும் நகரந்திரியுமிடத்துக்கெட்டன.

(3.) கால்கடிது, மரங்கள்கடிய. எ-ம். கால்கை, பொருள் புகழ். எ-ம். தோன்றல் கூறாய், மக்காள் சொல்லீர். எ - ம். உண்பல் சிறியேன், கேள் சாத்தா. எ-ம். கால் சுடர், அருள்குரு. எ - ம். அல்வழியிலே எழுவாய்த் தொடர் முதலியவற்றில் உறழாதியல்பாயின. வேற் படைக் குமரன், வாட்படைக்கையன். எ - ம். வேற் கண், வாட்கண். எ - ம். வந்தாற்கொள்ளும், வந்தக் காற்கொள்ளும். எ - ம். அல்வழியிலே பண்புத் தொகை முதலியவற்றில் உறழாது திரிந்தன.

(4.) "கால்குதித்தோடிக் கடல்புகமண்டி, வாள்போழ்ந் தட்ட நீள்கழன் மறவர்" என வேற்றுமையிலே வலிவரத் திரியாது இயல்பாயின.

பிற என்றமிகையால், தோன்றருள், வேடோன் என, நிலைமொழி உயர்திணைப்பெயராயின், வேற்றுமையி லுந் தகரந் திரியுமிடத்துக் கெடுதலும், காற்றுணை, தாட்டுணை; எ-ம். பிறங்கற்றோள், வாட்டாரை. எ-ம். அல்வழியிலும் பண்புத்தொகை உவமைத்தொகை களிற் கெடாமையுங் கொள்க. இன்னும் பிற என்ற மிகையால்; தனிக்குறிலைச் சார்ந்த ல ளக்களும், விற்படை. எ-ம். விற்புருவம். எ-ம். பண்புத்தொகை உவமைத்தொகைகளில் உறழாதுதிரிதலும், கொல் களிறு, கொள்பொருள். எ-ம். நில் கொற்றா, கொள் பூதா. எ-ம். வினைத்தொகை வினைமுற்றுத் தொடர் களில் இயல்பாதலுங் கொள்க.

இது "லளவேற் றுமையிற் றடவும்" என்னும் சூத்திரத்தால் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல். (26)

**230. லனவிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுரு**
**வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.**

இ - ள். ல ள இறு தொழிற்பெயர் ஈரிடத்தும் உவ் வுரு - லகாரத்தை யிறுதியாகவுடைய விகுதி பெற்ற தொழிற்பெயரும் ளகாரத்தை யிறுதிபாகவுடைய முதனிலை திரிந்த தொழிற்பெயரும் இருவழியிலும் யகரமல்லாத மெய்கள் வந்தால் உகரம்பெறுவாம்—வலி வரின் அல்வழி யியல்பும் ஆவன உள - வல்லினம் வந்தால் அல்வழிக்கண் உறழாதியல்பாவனவுஞ் சிலவுள. எ - று.

உ - ம். (1.) ஆடல்சிறந்தது, ஆடற்சிறந்தது; ஆடனன்று, ஆடல் வலிது. எ - ம். ஆடற்சிறப்பு, ஆடனன்மை, ஆடல் வன்மை. எ - ம். கோள்கடிது, கோட்கடிது; கோ ணன்று, கோள்வலிது. எ - ம். கோட்கடுமை; கோ ணன்மை, கோள்வன்மை. எ-ம். இருவழியும் உகரம் பெறாது பொதுவிதியான் முடிந்தன.

(2.) நடத்தல்கடிது; நடப்பித்தல் கடிது எனச் சில உற ழாது அல்வழியில் இயல்பாயின.

இயல்பும் என்ற உம்மையால், பின்னல்கடிது, பின்னற் கடிது; உன்னல்கடிது, உன்னற்கடிது எனப் பொது விதியால் உறழ்தலே பெரும்பாலனவென்க.

ஈரிடத்தும் உவ்வுறு என்றது ஐயமறுத்தல்; வலிவரினல் வழி யியல்புமாவன வுள என்றது ஒருவாறு "அல்வழியவற்றோடுறழ்வும்" என எய்திபது விலக்கல். (27)

**231.** வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.

**இ - ள்.** வல் இருவழியும் தொழிற்பெயர் அற்று - வல்லென்னுஞ் சூதாடுகருவிப்பெயர் யகரமல்லாத மெய்கள் வரின் முதனிலைத் தொழிற்பெயர்போல இருவழியும் உகரச் சாரியை பெறும்—பலகை நாய் வரினும் வேற்றுமைக்கு அவ்வுமாம் - பலகை நாயென்னும் இருபெயர் வரினும் பிற பெயர்கள் வரினும் வேற்றுமைக்கண் உகரச்சாரியையே யன்றி அகரச்சாரியையும் பெறும். எ - று.

உ - ம். (1.) வல்லுக்கடிது, நன்று வலிது. எ-ம். வல்லுக்கடுமை. நன்மை, வன்மை. எ-ம். இருவழியுந் தொழிற்பெயர் போலஉகரச்சாரியை பெற்றது. [வல்-சூதாடுகருவி.]

(2.) வல்லப்பலகை, நாய், புலி, குதிரை. எ-ம். வல்லுப் பலகை, நாய், புலி, குதிரை. எ-ம். வேற்றுமையில் அகரச்சாரியையும் உகரச்சாரியையும் பெற்றது. வல்லப்பலகை - வல்லினதறைவரைந்த பலகை. வல்லநாய்—வல்லினுணாய் என விரியும்.

இது "லளவேற்றுமையிற்றடவும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல். (28)

**232.** நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகர மாகும்.

**இ - ள்.** நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும் - நென்முதலிய நான்கு சொற்களினீற்று லகரமெய்—அல்வழி

யானும் றகரம் ஆகும் - பொதுவிதியால் உறழாது அல்வழிக் கண்ணும் வேற்றுமைபோல றகரமெய்யாகத் திரியும். எ-று.

உ-ம். நெற்கடிது, செற்கடிது, கொற்கடிது, சொற்கடிது, சிறிது, தீது, பெரிது என வரும். [செல் - மேகம், கொல் - கொல்லன்.] இதுவும் "ல ள வேற்றுமையிற் றடவும்" என்னுஞ் சூத்திரத்தால எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தல். (29)

233. இல்லெ னின்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்.

இ-ள். இன்மை இல் என் சொற்கு - இன்மைப் பண்பையுணர்த்திநிற்கும் இல் என்னுஞ் சொல்லுக்கு—ஐ அடைய வன்மைவிகற்பமும் - ஐகாரச்சாரியை பொருந்த அவ்விடத்து வரும் வல்லினம் விகற்பித்தலும்—ஆகாரத்தொடு வன்மை ஆகலும் - ஆகாரச்சாரியை பொருந்த அவ்விடத்து வரும் வல்லினம் மிகலும்—இயல்பும் ஆகும் - இவ்விருவிதியும் பெறாதியல்பாதலும் பொருந்தும். எ-று.

சாரியை பெறுதற்கு வருமெழுத்தைச் சொல்லாமையால், காற்கணமுங் கொள்க.

உ-ம். இல்லைப்பொருள், இல்லைபொருள், இல்லாப்பொருள், இல்பொருள், ஞானம், வன்மை, அணி என வரும்.

இல்லென்னும் பண்புச்சொல் ஐகார ஆகாரச்சாரியைகள் பெறும் என்றதும், இயல்பாம் என்றதும் "லளவேற்றுமையிற் றடவு மல்வழி யவற்றோ டுறழ்வும்" என எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல்; ஐகாரச்சாரியை முன் வல்லினம் விகற்பமாம் என்றது "அல்வழி இ ஐ முன்ன ராயின்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது இகந்துபடாமைக் காத்தல்; ஆகாரச்சாரியை முன் வல்லினமிகும் என்றது "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது இகந்துபடாமைக்காத்தல். (30)

**234. புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும்.**

**இ - ள்.** புள்ளும் வள்ளும் தொழிற்பெயரும் மானும்- இவ்விருசொற்களும் இருவழியும் யகரமல்லாத மெய்கள் வந்தாற் பொதுவிதியான் முடிதலேயன்றித் தொழிற்பெயர் போல உகரச்சாரியையும் பெற்றுப் புணரும். எ - று.

**உ - ம்.** புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது, நன்று, வலிது. எ - ம். புள்ளுக்கடுமை, வள்ளுக்கடுமை, நன்மை, வன்மை. எ - ம். வரும்.

இது "ல ள வேற்றுமையிற் றடவும்" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்புவிதி. (31)

**பரீக்ஷை வினாக்கள்:**—24. ல ள. வீற்றின் முன் மூவினமெய்களும் வரின் எவ்வாறாம்? ளளவீற்றின்முன் அவற்றோடு மயங்காத தகரம் வரின் அல்வழியில் உறழ்ச்சிமுடிபு எப்படிக் கூடும்? 25. லளக்கள் தகரம் வருமிடத்து றடக்களாதலன்றி வேறு திரிபும் பெறுமோ? 26. லளக்கள் திரிதல் இயல்பாதலன்றிக் கெடுதல் எவ்விடத்தும் இல்லையோ? தனிக்குறிலைச் சாராத லளக்கள் அல்வழியிலே தகரம் வரிற் கெடுதலன்றித் திரிதல் எங்கும் பெறாவோ? தனிக்குறிலைச் சாராத லளக்கள் அல்வழியில் வல்லினம் வரின் உறழாது இயல்பாதலுந் திரிதலும் பெறாவோ? தனிக்குறிலைச்சாராத லளக்கள் வேற்றுமையின் வல்லினம் வரிற் றிரியாது எங்கும் இயல்பாதலில்லையோ? தனிக்குறிலைச்சாராத லளக்கள் வேற்றுமையிலே தகரம் வரின் திரிதலேயன்றிக் கெடுதல் யாண்டும் பெறாவோ? 27. லகாரத்தை இறுதியாகவுடைய விகுதி பெற்ற தொழிற்பெயரும் ளகாரத்தை இறுதியாகவுடைய முதனிலை திரிந்த தொழிற் பெயரும் முதனிலைத் தொழிற் பெயர்போல உகரச்சாரியை பெறுமோ? இத்தொழிற்பெயர் இறுதி லளக்கள் வல்லினம் வரின் அல்வழியில் உறழ்தலேயன்றி வேறு விதியும் பெறுமோ? 28. வல் என்னுஞ் சூதாடுகருவிப்பெயர் முன் யவ்வொழிந்த மெய்கள் வரின் எவ்வாறாம்? வல் என்பது வேறுசாரியையும் பெறுமோ? 29. நெல், செல், கொல், சொல்,

என்னுஞ் சொற்கள் வல்லினம் வரின் அல்வழியிலே பொது விதியால் உறழ்ந்து வருமோ? 30. இன்மையையுணர்த்தும் இல் என்பதன்முன் நாற்கணமும் வரின் எவ்வாறாம்? 31. புள், வள் என்னுஞ் சொற்கள் யகரமொழிந்த மெய்கள் வரிற் பொதுவிதியேயன்றி வேறுவிதியும் பெறுமோ?

---

## வகரவீறு

**235. சுட்டு வகரமூ வினமுற முறையே**
**ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்.**

இ - ள். சுட்டு வகரம் - அவ் இவ் உவ் என்னும் அஃறிணைச் சுட்டுப்பெயர்களீற்று வகரமெய்—மூவினம் உற - வல்லினமும் மெல்லினமும் இடையினமும் வர—முறையே ஆய்தமும் மென்மையும் இயல்பும் ஆகும் - முறையாக ஆய்தமும் வருமெல்லினமும் இயல்பும் ஆகும். எ-று.

உ-ம். (1) அவ் + கடிய = அஃகடிய, இவ் + கடிய = இஃகடிய, உவ் + கடிய = உஃகடிய என வல்லினம் வர ஆய்தமாகத் திரிந்தது.

(2.) அவ் + ஞானம் = அஞ்ஞானம், இவ் + ஞானம் = இஞ்ஞானம், உவ் + ஞானம் = உஞ்ஞானம் என மெல்லினம் வர வருமெழுத்தாகத் திரிந்தது.

(3.) அவ் + யானை = அவ்யானை, இவ் + யானை = இவ்யானை, உவ் + யானை = உவ்யானை என இடையினம் வர இயல்பாயிற்று.

வேற்றுமைப்புணர்ச்சிக்கு அற்றுச்சாரியை பெறும் என மேல்விதத்தலால், இவ்விதி அல்வழிக்கெனக் காண்க. (32)

**236. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே**
**மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.**

இ - ள். தெவ் என் மொழி தொழிற்பெயர் அற்று - தெவ் என்னும் பகையையுணர்த்தும் பெயர் யகரமல்லாத

மெய்களோடு புணருமிடத்துத் தொழிற்பெயர்போல உகரச் சாரியை பெற்று முடியும்—மவ் வரின் வஃகான் மவ்வும் ஆகும் - மகரமெய் வரின் உகரச்சாரியை பெறுதலேயன்றி ஒரோவிடத்து வகரமெய் மகரமெய்யாகத் திரியவும் பெறும். எ - று.

உ - ம். (1.) தெவ்வுக்கடிது, தெவ்வுமாண்டது, தெவ்வுவலிது. எ - ம். தெவ்வுக்கடுமை, தெவ்வுமாட்சி, தெவ்வு வலிமை. எ-ம். இருவழியும் உகரச்சாரியை பெற்றது

(2.) தெவ்வுமன்னர், தெம்மன்னர். எ - ம். தெவ்வுமுனை, தெம்முனை. எ - ம். இருவழியும் மகரமெய் வர உகரச்சாரியை பெற்றும், மகரமெய்யாகத் திரிந்தும் வந்தது. (33)

பரீக்ஷை வினாக்கள்:—32. வகரவீற்றுச் சுட்டுப்பெயர் முன் அல்வழியில் மூவினமெய்களும் வரின் எவ்வாறும்? 33. தெவ் என்னும் பெயர்முன் யகர மொழிந்த மெய்களின்வரின் எவ்வாறும்? தெவ் என்பது மகரம் வரின் வேறுவிதியும் பெறுமோ?

---

## வருமொழித் தகரநகரந்திரிபு

**237.** னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகுந் தநக்க ளாயுங் காலே.

**இ - ள்.** ன ல முன் (த நக்கள்) ற ன வும் - னகர லகரங்களின் முன் வருந் தகரம் றகரமாம் அவற்றின் முன் வரும் நகரம் னகரமாம்—ண ள முன் த நக்கள் ட ண வும் ஆகும் - ணகர ளகரங்களின் முன் வருந் தகரம் டகரமாம் அவற்றின முன் வரும் நகரம் ணகரமாம்—ஆயுங்கால் - ஆராயுமிடத்து. எ - று.

உ - ம். பொன் + தீது = பொன்றீது, கல் + தீது = கற்றீது, பொன் + நன்று = பொன்னன்று, கல் + நன்று = கன்னன்று. எ - ம். மண் + தீது = மண்டீது, முள் + தீது = முட்டீது.

மண் + நன்று = மண்ணன்று, முள் + நன்று = முண்ணன்று. எ-ம். அல்வழியிலே திரிந்தன. பொற்றீமை, கற்றீமை, பொன்னன்மை, கன்னன்மை. எ-ம். மட்டீமை, முட்டீமை; மண்ணன்மை, முண்ணன்மை. எ-ம். வேற்றுமையிலே திரிந்தன.

ஆயுங்காலே என்றதனால், அல்வழி வேற்றுமைப் பொருள் நோக்கத்தாலன்றி மயக்கவிதியின்மையால் இப்படிப்புணரும் முதலீறிரண்டனுள் ஒன்றேனும் இரண்டுமேனும் விகாரப்பட்டு மயங்குதற்கு உரியனவாகிப் புணருமென்பதும், மயக்கவிதியுள் ளனவற்றிற்கு வரும் விகாரம் அல்வழி வேற்றுமைப் பொருள் நோக்கத்தால் வருமென்பதும் பெற்றாம். (34)

**பரீக்ஷை வினாக்கள்:**—34. னகர லகரங்களின் முன் தகரம் வரின் எவ்வாறாம்? னகர லகரங்களின்முன் நகரம் வரின் எவ்வாறாம்? ணகர ளகரங்களின்முன் தகரம் வரின் எவ்வாறாம்? ணகர ளகரங்களின் முன் நகரம் வரின் எவ்வாறாம்?

[வேற்றுமைப்பொருட்புணர்ச்சியை உருபு
புணர்ச்சியோடு மாட்டெறிதல்.]

**238. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.**

**இ-ள்.** உருபின் முடிபவை - மேல் உருபுபுணர்ச்சிக் கண் முடியு முடிபுகள்— அப்பொருளினும் ஒக்கும் - அவ்வுருபின் பொருட்புணர்ச்சிக்கண்ணும் ஒத்து முடியும். எ-று.

உருபுபுணர்ச்சியானது வேற்றுமையுருபு வெளிப்பட்டு நிற்பப் புணரும் புணர்ச்சி; உறிக்கட்டயிர் என்பதுபோல. வேற்றுமைப் பொருட்புணர்ச்சியாவது வேற்றுமையுருபின்றி அவ்வுருபினது பொருள்படப்புணரும் புணர்ச்சி, உறித்தயிர் என்பதுபோல.

உ-ம். (1.) எல்லாவற்றதும் என்பது உருபுபுணர்ச்சி, எல்லாவற்றுக்கோடும் என்பது பொருட்புணர்ச்சி. மேல் உருபு புணரியலில் "எல்லாமென்பதிழிதிணையாயின் அற்றோடுருபின் மேலும் முறுமே" என்ற விதிப்படி எல்லாவற்றதும் என்ற உருபு புணர்ச்சிக்கு அஃ

திணைக்கண் அற்றும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போல எல்லாவற்றுக்கோடும் என்னும் பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன. எல்லா நமதும் என்பது உருபுபுணர்ச்சி; எல்லாநங்கையும் என்பது பொருட்புணர்ச்சி. "அன்றே னம்மிடை யடைந்தற்றாகும்" என்ற விதிப்படி எல்லா நமதும் என்னும் உருபுபுணர்ச்சிக்கு உயர்திணைக்கண் நம்மும் உருபின்மேல் உம்மும் பெற்றாற்போல, எல்லாநங்கையும் என்றும் பொருட்புணர்ச்சிக்கும் பெற்றன.

(2.) எல்லார்தமதும், எல்லீர்நுமதும் என்பன உருபுபுணர்ச்சி; எல்லார்தங்கையும் எல்லீர் நுங்கையும் என்பன பொருட்புணர்ச்சி. மேல் உருபுபுணரியலில் "எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை—தள்ளி நிரலே தம் நும் சாரப்—புல்லு முருபின் பின்னரும்மே" என்ற விதிப்படி எல்லார் தமதும் எல்லீர் நுமதும் என்னும் உருபுபுணர்ச்சிக்கு எல்லாரும் எல்லீரும் என்பவைகளின் இறுதியிலுள்ள முற்றும்மைகளைத் தள்ளி முறையே தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் வந்து பொருந்த அவைகளினாலே தள்ளுண்ட முற்றும்மைகள் உருபுகளின் பின்னே வந்து புணர்ந்தாற்போல, எல்லார்தங்கையும் எல்லீர் நுங்கையும் என்னும் பொருட் புணர்ச்சிக்கும் முடிந்தன.

(3.) தனது, தமது, நமது என்பன உருபுபுணர்ச்சி; தன்கை, தங்கை, நங்கை என்பன பொருட்புணர்ச்சி. மேல் உருபுபுணரியலில் "தான்றா நாமுதல் குறுகும்" என்ற விதிப்படி உருபுபுணர்ச்சிக்குத் தான் தாம் நாம் என்பன முறையே தன் தம் நம் என விகாரப் பட்டாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் விகாரப் பட்டன. எனது, எமது, நினது, நுமது என்பன உருபுபுணர்ச்சி; என்கை, எங்கை, நின்கை, நுங்கை என்பன பொருட்புணர்ச்சி. "யான் யாம் நீ நீர் என

எம் நின் நும் ஆம்" என்ற விதிப்படி உருபுபுணர்ச்சிக்கு யான் யாம் நீ நீர் என்பன முறையே என் எம் நின் நும் என விகாரப்பட்டாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் விகாரப்பட்டன.

(4.) ஆனது, மானது, கோனது என்பன உருபுபுணர்ச்சி; ஆன்கோடு, மான்கோடு, கோன்குணம் என்பன பொருட்புணர்ச்சி. மேல் உருபுபுணரியலில் "ஆமா கோனவ் வணையவும் பெறுமே" என்ற விதிப்படி உருபுபுணர்ச்சிக்கு னகரச்சாரியை வந்தாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் வந்தது.

(5.) அவற்றது, இவற்றது, உவற்றது என்பன உருபு புணர்ச்சி; அவற்றுககோடு, இவற்றுக்கோடு, உவற்றுக்கோடு என்பன பொருட்புணர்ச்சி. மேல் உருபு புணரியலில் "வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே" என்றவிதிப்படி உருபுபுணர்ச்சிக்கு அற்றுச்சாரியை வந்தாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் வந்தது.

(6.) அதனது, இதனது, உதனது என்பன உருபு புணர்ச்சி; அதன்கோடு, இதன்கோடு, உதன்கோடு என்பன பொருட்புணர்ச்சி. மேல் உருபுபுணரியலில் "சுட்டின் முன்னாய்த மன்வரிற் கெடுமே" என்ற விதிப்படி உருபுபுணர்ச்சிக்கு அன்சாரியைப் பேறும் ஆய்தக்கேடும் வந்தாற்போலப், பொருட்புணர்ச்சிக்கும் வந்தன.

இவைபோல்வன பிறவும் இப்படியே முடித்துக்கொள்க. ()

**பரீக்ஷை வினாக்கள்:**—35. உருபுபுணர்ச்சியாவது யாது? வேற்றுமைப்பொருட்புணர்ச்சியாவது யாது? உருபுபுணரியலில் உருபு புணர்ச்சிக்குக் கூறுஞ் சாரியைப் பேறு முதலிய விதி அவ்வுருபு தொக்க பொருட்புணர்ச்சிக்கும் வருமோ?

## புணரியல்களுக்குப் புறனடை

239. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு மரூஉவும் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

இ - ள். இடை உரி வடசொலின் இயம்பிய கொளாதவும் - இடைச்சொற்களுள்ளும் உரிச்சொற்களுள்ளும் வடசொற்களுள்ளும் உயிரீறும் ஒற்றீறுமான புணரியலிலே தோன்றல் திரிதல் கெடுதல் இயல்பாதல் எனச் சொல்லிய புணர்ச்சியிலக்கணங்கள் பொருந்தாது வேறுபட்டு வருவனவும்—போலியும் - இலக்கணப்போலி மொழிகளும்—மரூஉவும் - மரூஉமொழிகளும்—பொருந்திய ஆற்றிற்கு இயையப் புணர்த்தல் - இருவகை வழக்கிலும் நடக்கு முறைமைக்குப் பொருந்துமாறு புணர்க்கை—யாவர்க்கும் நெறி - அறிவுடையோரெல்லார்க்கும் முறை. எ - று.

உ - ம். (1.) "மடவை மன்ற தடவு நிலைக் கொன்றை" என அகரவீற்றிடைச்சொன்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயிற்று. ஆன்கன்று, மான்கன்று, வண்டின்கால், தேரின்செலவு, யாழின்புறம் என வேற்றுமைப் புணர்ச்சிக்கண் னகரவீற்றுச் சாரியையிடைச்சொற்கள் திரியாது இயல்பாயின.

(2.) மழகளிறு, உறுபுனல். எ-ம். கமஞ்சூல், தடஞ்செவி, தடந்தோள், கயந்தலை எ - ம். உயிரீற்றுரிச்சொல் முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயும் மெல்லெழுத்து மிகுந்தும் வந்தன.

(3.) அளிகுலம், தனதடம், ஆதிபகவன் என உயிரீற்று வடசொல்முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயின.

(4.) இல் + முன் = முன்றில், பொது + இல் = பொதியில் என வரும் இலக்கணப்போலி மொழிகளும், அருமருந்தன்னபிள்ளை = அருமந்தபிள்ளை, குணக்குள்ளது = குணாது, தெற்குள்ளது = தெனாது, வடக்குள்

ளாது=வடாது, சோழனாடு=சோணாடு, பாண்டியனாடு=பாண்டிநாடு, மலையமானாடு=மலாடு, தொண்டைமானாடு=தொண்டைநாடு, தஞ்சாவூர்=தஞ்சை, ஆற்றூர் = ஆறை, ஆதன்றந்தை = ஆந்தை, பூதன்றந்தை=பூந்தை, வடுகன்றந்தை=வடுகந்தை என வரும் மரூஉமொழிகளும், நிலைமொழி வருமொழிகளுள் ஏற்குஞ் செய்கையறிந்து முடித்துக்கொள்க. மற்றவைகளும் இப்படியே.

வடமொழித் தொகைப்பதங்கள், தமிழில் ஆங்காங்கு வருமிடத்துப் பெரும்பாலும் அவ்வடநூற் புணர்ச்சியே பெறும். புணர்ச்சியெனினுஞ் சந்தியெனினும் ஒக்கும். அச்சந்தி தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி என மூவகைப்படும்.

## 1. தீர்க்கசந்தி.

(1.) அ ஆ வின்முன் அ ஆ வரின், ஈறுமுதலுங்கெட, ஆ வொன்று தோன்றும்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ - ம்.) | பத | + | அம்புயம் | = | பதாம்புயம் |
| | சிவ | + | ஆலயம் | = | சிவாலயம் |
| | சேநா | + | அதிபதி | = | சேநாதிபதி |
| | சதா | + | ஆநந்தம் | = | சதாநந்தம் |

(2.) இ ஈ யின் முன் இ ஈ வரின், ஈறுமுதலுங்கெட, ஈ யொன்று தோன்றும்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ - ம்.) | கிரி | + | இந்திரன் | = | கிரீந்திரன் |
| | கிரி | + | ஈசன் | = | கிரீசன் |
| | மகீ | + | இந்திரன் | = | மகீந்திரன் |
| | நதீ | + | ஈசன் | = | நதீசன் |

(3.) உ ஊ வின் முன் உ ஊ வரின், ஈறுமுதலுங் கெட ஊவொன்று தோன்றும்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ - ம்.) | குரு | + | உபதேசம் | = | குரூபதேசம் |
| | மேரு | + | ஊர்த்துவம் | = | மேரூர்த்துவம் |
| | வதூ | + | உத்துவாகம் | = | வதூத்துவாகம் |
| | வதூ | + | ஊரு | = | வதூரு |

## 2. குணசந்தி.

(1.) அ ஆ வின் முன் இ ஈ வரின், ஈருமுதலுங்கெட ஏயொன்று தோன்றும்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ - ம்.) | நர | + | இந்திரன் | = | நரேந்திரன் |
| | சுர | + | ஈசன் | = | சுரேசன் |
| | தரா | + | இந்திரன் | = | தரேந்திரன் |
| | மகா | + | ஈசன் | = | மகேசன் |

(2) அ ஆ வின் முன் உ ஊ வரின், ஈறு முதலுங்கெட ஓவொன்று தோன்றும்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ - ம்.) | பாத | + | உதகம் | = | பாதோதகம் |
| | ஞான | + | ஊர்ச்சிதன் | = | ஞானோர்ச்சிதன் |
| | கங்கா | + | உற்பத்தி | = | கங்கோற்பத்தி |
| | தயா | + | ஊர்ச்சிதன் | = | தயோர்ச்சிதன் |

## 3. விருத்திசந்தி.

(1.) அ ஆ வின் முன் ஏ ஐ வரின், ஈறுமுதலுங்கெட, ஐயொன்று தோன்றும்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ - ம்.) | லோக | + | ஏகநாயகன் | = | லோகைகநாயகன் |
| | சிவ | + | ஐக்கியம் | = | சிவைக்கியம் |
| | தரா | + | ஏகவீரன் | = | தரைகவீரன் |
| | மகா | + | ஐசுவரியம் | = | மகைசுவரியம் |

(2) அ ஆ வின் முன் ஓ ஔ வரின், ஈறுமுதலுங்கெட, ஔவொன்று தோன்றும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (உ - ம்.) | கலச | + | ஓதனம் | = | கலசௌதனம் |
| | திவ்விய | + | ஔடதம் | = | திவ்வியௌடதம் |
| | கங்கா | + | ஓகம் | = | கங்கௌகம் |
| | மகா | + | ஔதாரியம் | = | மகௌதாரியம் |

**பரீக்ஷை வினாக்கள்:—36.** இதுவரையுங் கூறப்பட்ட புணர்ச்சி விதிகளுள் வேறுபட்டுவருவனவும் உளவோ? வடமொழித் தொகைப்பதங்கள் தமிழில் எப்படி வந்து வழங்கும்? வடமொழிச்சந்தி எத்தனை வகைப்படும்?

**மெய்யீற்றுப்புணரியல் முற்றிற்று.**

---

# 5. உருபுபுணரியல்

## உருபுகள்

[எட்டுருபுகளுஞ் சாருமிடவகையால் இத்தனையாமென்பது]

**240.** ஒருவ னொருத்தி பலரொன்று பலவென
வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்
குருபு முறழ்தர நாற்பதா முருபே.

இ - ள். ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என வரு பெயர் ஐந்தொடு - ஒருவனும் ஒருத்தியும் பலரும் ஒன்றும் பலவும் என்று கருத வரும ஐந்துபெயரோடும்—பெயர் முதல் இருநான்கு உருபும் உறழ்தர - எழுவாய்வேற்றுமை யான பெயர்முதல் விளியிறுக நின்ற எட்டுருபுகளையும் பெருக்க—உருபு நாற்பது ஆம் - வேற்றுமையுருபுகள நாற்பதாகும். எ - று.

வ - று. நம்பி, சாத்தி, மக்கள், மரம், மரங்கள் என்னும் இவற் றுள், நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு, நம்பியின், நம்பி யது, நம்பிகண், நம்பீ என ஒருவனென்னும் வாய்ப்பாட் டுயர் திணையாண்பாற் பெயரோடு எட்டுருபுகளும் வந்தன மற்றை நான்குபெயர்களோடு இப்படியே யொட்டுக. (1)

[வேற்றுமையுருபுகள் வருவதற்குக் காரணமும் வருமிடமும்.]

**241.** பெயர்வழித் தம்பொரு டரவரு முருபே.

இ - ள். உருபு - வேற்றுமையுருபுள்—தம்பொருள் தர - தம்பொருளைக்கொடுக்க—பெயர்வழி வரும் - பெயர்க் குப்பின் வரும். எ - று.

வ - று. நம்பிபெற்றான், நம்பியைப்பெற்றான், நம்பியாற்பெற் றான் எனவரும். மற்றவைகளும் இப்படியே. (2)

[ஐம்முதலிய ஆறுருபும் நிலைமொழி வருமொழியோடு புணருமாறு.]

**242. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்**
**ஒக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.**

**இ - ள்.** ஒற்று உயிர் முதல் ஈற்று உருபுகள் - நிலைமொழியோடும் வருமொழியோடும் புணரும் மெய்யுயிர்களை முதலும் ஈற்றுமாகவுடைய ஐம்முதலிய ஆறுருபுகளும்— புணர்ச்சியின் மன் ஒக்கும் - இடைச்சொல்லாயினும் இயல்பொடு விகாரத்தினையும் புணர்ச்சிவகையாற் பெரும்பாலும் ஒக்கும்—வேற்றுமைப்புணர்ப்பு-போன இரண்டியலுள்ளும் வேற்றுமைப்புணர்ச்சிக்கண்—அப்பெயர் - இயல்பொடு விகாரத்தினைந்த மெய்யுயிர் முதலீற்றுப்பெயர்களை. எ - று.

மன் என்றமையால், சிறுபான்மை, ஒவ்வாவென்பதாம்.

உ - ம். நம்பிகண்வாழ்வு; இங்கே "ஆவி யரமுன் வன்மை மிகா" என்றும், "ணன வல் லினம்வரட் டறவும் பிறவரி—னியல்புமாகும் வேற்றுமைக்கு" என்றுஞ் சொல்லியபடியே கண்ணுருபின் முதலுமீறும் இயல்பாயின,

உறிக்கட்டயிர்; இங்கே "இயல்பினும் விதியினு நின்ற உயிர் முன் க ச த ப மிகும்" என்றும், "ண ன வல்லினம் வரட் டறவும்" என்றுஞ் சொல்லியபடியே, கண்ணுருபின் முதலு மீறும் விகாரமாயின.

பழிக்கஞ்சி; இங்கே "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்" என்றும், "முற்றுமற் றொரோவழி" என்றுஞ் சொல்லியபடியே, குவ்வுருபின் முதலுமீறும் விகாரமாயின.

நம்பிக்குப்பிள்ளை; இங்கே "ஆவி ய ர முன் வன்மை மிகா" என்ற விதியொவ்வாமற் குவ்வுருபின் முதல் வல்லொற்று மிக்கது. மற்றவையும் இப்படியே வருதலை ஆராய்ந்தறிக. (3)

**பரீக்ஷை வினாக்கள்:**—1. வேற்றுமையுருபுகள் தாஞ் சாரும் இட வகையால் எத்தனையாம்? 2. வேற்றுமையுருபுகள் எதன்

பொருட்டு எவ்விடத்து வரும்? 3. ஐம்முதலிய வேற்றுமையுருபாறும் நிலைமொழியோடும் வருமொழியோடும் எப்படிப் புணரும்?

---

## சாரியை

[சாரியை வருமாறு.]

**243.** பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.

இ - ள். பதமுன் விகுதியும் பதமும் உருபும் புணர்வழி - பதத்தின் முன் இறுதிநிலையாவது பதமாவது உருபாவது புணருமிடத்து—சாரியை ஒன்றும் (சாரியை) பலவும் - ஒருசாரியையாயினும் பலசாரியையாயினும்—வருதலும் தவிர்தலும் விகற்பமும் ஆகும் - வருதலும் வராதொழிதலும் இவ்விரண்டுமாகிய விகற்பமும் ஆகும். எ - று.

உ - ம். (1.) நடந்தனன். எ - ம். நடந்தான். எ - ம். நடந்தன, நடந்த. எ-ம். விகுதிப்புணர்ச்சியுட் சாரியை வேண்டியும், வேண்டாதும் விகற்பித்தும் வந்தன.

(2) புளியங்காய். எ - ம். புளிக்கறி. எ - ம். நெல்லின் குப்பை, நெற்குப்பை. எ - ம். பதப்புணர்ச்சியுட் சாரியை அவ்வாருயின.

(3.) அவற்றை. எ-ம். தன்னை. எ-ம். ஆனை, ஆவை, எ-ம். உருபுபுணர்ச்சியுட் சாரியை அவ்வாருயின.

(4.) ஆவினுக்கு, மரத்தினுக்கு இவைகளிலே சாரியை பல வந்தன. (4)

[சாரியைகள் இவையென்பது.]

**244.** அன் ஆன் இன் அல் அற்றிற் றத்தம்
தம் நம் நும் ஏ அ உ ஐ குன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

இ - ள். அன்**ன - அன் முதல் னகரமெய்யீறாகச் சொல்லப்பட்ட பதினேழும்—இன்ன பிறவும் - இவைபோல்வன பிறவும—பொதுச் சாரியை - விகுதிபதமுருபென்னு மூன்று புணர்ச்சிகளிலுந் தனிமொழிகளிலும் வருதலினாலே பொதுச்சாரியையாகும் எ - று.

உ - ம். அன் - ஒன்றன்கூட்டம், ஆன் - ஒருபாற்கு, இன் - வண்டின்கால், அல் - தொடையல், அற்று - பலவற்றை, இற்று - பதிற்றுப்பத்து, அத்து - மரத்திலே, அம் - மன்றம், தம் - எல்லார் தம்மையும், நம் - எல்லா நம்மையும், நும் - எல்லீர்நும்மையும், ஏ - கலனேதூணி, அ - நடந்தது, உ - சாத்தனுக்கு ஐ - ஏற்றை, கு - உய்குவை, ன் - ஆன் என முறையே காண்க.

இன்னபிறவும் என்றதனால், தன் - அவன்றன்னை; தான் - அவன்றான், தாம் - அவர்தாம், ஆம் - புற்றாஞ்சோறு, ஆ - இல்லாப்பொருள், து - செய்துகொண்டான் என்பனவும், இன்னும் வருவன உளவாயின் அவையுங் கொள்க. (5)

**பரீக்ஷை வினாக்கள்:**—1. பகுபதவுறுப்பு ஆறனுட் சாரியைகளென்பன எவ்வெவற்றிற்கு வேண்டப்படும்? சாரியைகள் விகுதிப் புணர்ச்சி பதப்புணர்ச்சி உருபுபுணர்ச்சி என்னும் மூன்றுக்கும் இன்றியமையாதனவோ? ஒருபுணர்ச்சிக்குச் சாரியை ஒன்றே வருமோ பல வருதலுமுண்டோ? 5. சாரியைகளென்பன எவை? இன்னபிறவும் என்றதனாற் கொள்ளப்படுஞ் சாரியைகள் எவை?

---

## உருபுபுணர்ச்சிக்குச் சிறப்புவிதி

**245.** **எல்லா மென்ப திழிதிணை யாயின்**
**அற்றோ டுருபின் மேலும் முறுமே**
**அன்றே னம்மிடை யடைந்தற் றாகும்.**

**இ - ள்.** எல்லாம் என்பது-எல்லாமென்னும் பொதுப்பெயர்—இழிதிணை ஆயின் (இடை) அற்று உருபின்மேல்

டும் உறும்-அஃறிணையில் வரும்போது அதனோடு ஆறுருபு களும் புணரின் இடையிலே அற்றுச்சாரியையும் உருபின் மேல் முற்றும்மையும் பெறும்—அன்றேல் இடை நம் அடைந்து அற்று ஆகும் - உயர்திணையில் வரும்போது இடையிலே நம்முச்சாரியை யடைந்து உருபின்மேல் முற் றும்மையும் பெறும். எ - று.

உ-ம் எல்லாவற்றையும், எல்லாநம்மையும் என வரும். மற்றை யுருபுகளோடும் இப்படியே யொட்டுக. எல்லாநம்மையும் உயர்திணைத் தன்மைப்பன்மை.

இனி, இரட்டுற மொழிதலால், இழிதிணையாய் இன் அற்றோடு எனக்கொண்டு, எல்லாவற்றினையும் என வருதலுங்கொள்க.

**246.** **எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை**
**தள்ளி நிரலே தம் நும் சாரப்**
**புல்லு முருபின் பின்ன ரும்மே.**

இ - ள். எல்லாரும் எல்லீரும் என்பவற்று உம்மை தள்ளி- ஆறுருபும் புணருமிடத்து எல்லாரும் எல்லீரும் என் னும் இருபெயர்களினுடைய இறுதியிலுள்ள முற்றும்மை களைத் தள்ளி—நிரல்தம் நும் சார - முறையே தம்முச் சாரியையும் நும்முச்சாரியையும் அவையிருந்த இடங்களிலே பொருந்த—உம் உருபின் பின்னர்ப் புல்லும் - அவற்றி னாலே தள்ளுண்ட முற்றும்மைகள் உருபுகளின் பின்னே வந்து பொருந்தும். எ - று.

உ-ம். எல்லார்தம்மையும், எல்லாரையும். எ-ம். எல்லீர்நும்மை யும், எல்லீரையும். எ-ம். விகற்பித்து வந்தன. மற்றை யுருபுகளோடும் இப்படியே யொட்டுக.

நந்தம்மை, நுந்தம்மை எனப் படர்க்கைக்குரிய தம்முச் சாரியை தன்மை முன்னிலைகளில் வருதல் "ஓரிடம் பிற விடந் தழுவலுமுளவே" என்னும் வழுவமைதி. (7)

**247. தான் தாம் நாம் முதல் குறுகும் யான்யாம்
நீ நீர் என் எம் நின்நு மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல.**

**இ - ள்.** *தான் தாம் நாம் முதல் குறுகும் - தான் தாம் நாம் என்னு மூன்று பெயர்களும் உருபுகள் புணருமிடத்து நெடுமுதல் குறுகி முறையே தன் தம் நம் என வரும்—யான் யாம் நீ நீர் என் எம் நின் நும் ஆம் - யான் யாம் நீ நீர் என்னு நான்குபெயர்களும் உருபுகள் புணருமிடத்து முறையே என் எம் நின் நும் எனத் திரியும்—குவ்வின் அவ்வரும் - இவ்வேழு பெயரோடு குவ்வுருபு புணருமிடத்து நடுவே அகரச்சாரியை வரும்—நான்கு ஆறு இரட்டல-குவ்வுருபின் அகரச்சாரியை வரினும் ஆறும்வேற்றுமையுருபுயிர்கள் வரினும் இவ்வேழுவிகாரமொழிகளினிறுதியிலுள்ளனவாகிய தனிக்குறின் முன்னொற்றுக்கள் இரட்டாவாம். எ - று.*

**உ - ம்.** (1.) *தான் + ஐ = தன்னை, தாம் + ஐ = தம்மை, நாம் + ஐ = நம்மை. எ - ம். யான் + ஐ = என்னை, யாம் + ஐ = எம்மை, நீ + ஐ = நின்னை, நீர் + ஐ = நும்மை. எ - ம். வரும். ஒழிந்த உருபுகளோடும் இப்படியே யொட்டுக.*

(2.) *தனக்கு தமக்கு எனக் குவ்வுருபு புணருமிடத்து அகரச்சாரியை பெற்றன.*

(3.) *தனக்கு. எ-ம். தனது, தனாது, தன. எ-ம். அகரச்சாரியையும் ஆறும்வேற்றுமையுருபுயிர்களும் வந்தவிடத்துந் தனிக்குற்றொற் றிரட்டாவாயின.*

*பிற என்ற மிகையால், நீ நீர் என்பன முறையே உன் உம் எனவுந் திரிந்து வருதல் கொள்க.* (8)

**248. ஆமா கோனவ் வணையவும் பெறுமே.**

**இ - ள்.** *ஆ மா கோ - ஆவென்னும் பசுவின் பெயரும் மாவென்னும் விலங்கின் பொதுப்பெயரும் கோவென்*

னும் இறைவனே புணர்ந்துநிற்கும் பெயரும்—னவ்வணையவும் பெறும் - உருபுகள் புணருமிடத்து னகரச்சாரியை பொருந்தவும் பெறும். எ - று.

உ - ம். ஆனே, ஆவை; மானே, மாவை; கோனே, கோவை என விகற்பித்து வருதல் காண்க. மற்றையுருபுகளோடும் இப்படியே ஒட்டுக.

அணையவும் என்ற உம்மையால், குவ்வுருபு புணரும்போது, ஆனுக்கு, மானுக்கு, கோனுக்கு என உகரச்சாரியையும் உடன்பெறுதலும், ஆவுக்கு, மாவுக்கு, கோவுக்கு என உகரச் சாரியை யொன்றே பெறுதலும், ஆவினுக்கு, மாவினுக்கு, கோவினுக்கு என இன்சாரியையும் உகரச்சாரியையும் உடன்பெறுதலும், ஆவினே, மாவினே, கோவினே என் இன்னுருபொழிந்த உருபுகள் புணரும்போது இன்சாரியை பெறுதலுங் கொள்க.

இனி, இரட்டுறமொழிதலால், ஆமா என ஒரு சொல்லாய்க் காட்டுப்பசுவையுணர்த்தி நின்றவிடத்தும், ஆமானே, ஆமானுக்கு, ஆமாவினுக்கு என இவ்விதிகள் பெறுதலும், அணையுமென்றொழியாது பெறும் என்றமையால், ஆன், மான், கோன், ஆமான் எனத் தனிமொழிக்கண்ணும் னகரச் சாரியை வருதலுங் கொள்க. (9)

**249. ஒன்று முதலெட் டீறு மெண்ணூர்**
**பத்தின்முன் னான்வரிற் பவ்வொற் றொழியமேல்**
**எல்லா மோடு மொன்பது மிற்றே.**

இ - ள். ஒன்று முதல் எட்டு ஈறு ஆம் எண் ஊர் பத்தின் முன் - ஒன்று முதல் எட்டீறாகிய எண்களோடு புணர்ந்த பத்தென்னும் எண்முன் உருபுகள் புணருமிடத்து—ஆன் வரின் - ஆன்சாரியை வருமாயின்—பவ்வொற்றுஒழிய மேல் எல்லாம் ஓடும் - அப்பத்தென்னும் எண்ணினது பகர மெய்யொன்றுமே நிற்க அதன்மேலே நின்ற எல்லாவெழுத்துங் கெடும்—ஒன்பதும் இற்று - ஒன்பதென்னும் எண்முன்

னும் உருபுகள் புணருமிடத்து ஆன்சாரியைவரின் அதன் பகரமெய் நிற்க மேலே நின்ற எல்லாவெழுத்துங் கெடும். எ - று.

உ - ம். ஒருபானை, ஒருபதை, ஒருபஃதை எ - ம். ஒன்பானை, ஒன்பதை, ஒன்பஃதை. எ - ம். விகற்பித்து வரும். மற்றவை களோடும் இப்படியே யொட்டுக.

ஒருபது, ஒருபஃது என விகாரப்பட்டு வரும் பத்தென்பார் எண்ணூர் பத்தென்றார்.

ஆன்வருதலைப் பராமுகமாகச் சொன்னமையால், உகரச் சாரியை இன்சாரியைகளும் வேண்டியவிடத்து வருமெனக் கொள்க. (10)

**250. வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.**

இ - ள். வவ்விறு சுட்டிற்கு - வகரமெய்யீற்று மூன்று சுட்டுப்பெயர்களுக்கும் - அற்று உறல்வழி - உருபுகள் புணருமிடத்து அற்றுச்சாரியை பொருந்துதல் முறையாம். எ - று.

உ - ம். அவற்றை, இவற்றை, உவற்றை என அற்றுச்சாரியை வேண்டியே வருதல் காண்க.

வழியே என்றமிகையால், அவற்றினை, இவற்றினை, உவற்றினை; என இன்சாரியை வருதலும், தனிக்குறின் முன்னொற்று உயிர்வரின் இரட்டாமையுங் கொள்க. ஒழிந்த உருபுகளோ டும் இப்படியே யொட்டுக. (11)

**251. சுட்டின்முன் னாய்த மன்வரிற் கெடுமே.**

இ - ள். சுட்டின்முன் ஆய்தம் - அஃது இஃது உஃது என்னும் மூன்று சுட்டுப்பெயர்களில் அம்மூன்று சுட்டெழுத்துக்களின் முன்னின்ற ஆய்தம் - அன்வரின் கெடும் - உருபுகள் புணருமிடத்து அன்சாரியை வரிற் கெடும். எ - று.

உ - ம். அஃது + ஐ = அதனை, அஃதை; இஃது + ஐ = இதனை, இஃதை, உஃது + ஐ = உதனை, உஃதை எனச்சாரியை விகற்பித்து வருதலும் வந்தவழி ஆய்தங்கெடுதலுங் காண்க.

அன்சாரியை வருதலைநோக்கி ஆய்தங் கெட்டவழி, அது, இது, உது என ஆய்தமில்லாச் சுட்டுப்பெயர்களாய்ப், பின்பு அன்சாரியை பெறுதலால், ஆய்தமில்லாச் சுட்டுப்பெயர்களுக்கும் இதுவே விதியெனக்கொள்க.

அன்வருதலைப் பராமுகமாகக் கூறலால், குவ்வுருபு புணரும்போது அதற்கு என அன்சாரியை தனித்து வருதலேயன்றி அதனுக்கு என உகரச்சாரியையுடன் வருதலுங்கொள்க. (12)

**252. அத்தி னகர மகரமுனை யில்லை.**

இ - ள். அத்தின் அகரம் - அத்துச்சாரியையினது அகரவுயிர்—அகரமுனை இல்லை - இயல்பினும் விதியினும் நின்ற அகரவுயிரீற்றின்முன் வரின் வகரவுடம்படுமெய் பெறுது கெடும். எ - று.

உ - ம். மக + அத்து + கை = மகத்துக்கை, மா + அத்து + குறை = மாத்துக்குறை என இரண்டு அகரவீற்றின் முன்னுங் கெட்டது. (13)

பரிசோதன வினாக்கள்:—6 எல்லாமென்னும் பெயர் ஐம்முதலிய ஆறுருபும் ஏற்குமிடத்து எவ்வாறும்? 7. எல்லாருமென்னும் படர்க்கைப் பெயரும் எல்லீருமென்னும் முன்னிலைப் பெயரும் ஆறுருபும் ஏற்குமிடத்து எவ்வாறும்? 8. தான் தாம் நாம் என்னும் பெயர்கள் ஆறுருபும் ஏற்குமிடத்து எவ்வாறும்? யான் யாம் நீ நீர் என்னும் பெயர்கள் ஆறுருபும் ஏற்குமிடத்து எவ்வாறும்? இவ்வேழுபெயரும் குவ்வுருபு புணருமிடத்து வேறு விதியும் உடன் பெறுமோ? விகாரமடைந்து நின்ற இவ்வேழு பெயர்களின் முன்னும் அகரச்சாரியையும் ஆறாம்வேற்றுமை உருபுயிர்களும் புணருமிடத்து தனிக்குறில் முன்னொற்றுக்கள் இரட்டுமோ? நீ நீர் என்பன பிறவாறு திரிதலுமுண்டோ? 9. ஆ, மா, கோ என்னும் பெயர்கள் உருபுகள் ஏற்குமிடத்து எவ்வாறும்? ஆ முதலிய பெயர்கள் குவ்வுருபு ஏற்குமிடத்து வேறுசாரியையும் உடன்பெறுமோ? ஆ முதலிய பெயர்கள் ஐ முதலிய உருபுகளேற்குமிடத்து னகரச்சாரியையன்றி வேறு

சாரியை பெறுவோ? ஆ முதலிய பெயர்கள் உருபேலாது தனித்து நிற்குமிடத்துச் சாரியைபெறுவோ? 10. ஒன்றுமுதல் எட்டெண்களும் பத்தொடு புணர்ந்து ஒரு பஃது ஒருபது என இங்ஙன நிற்குமிடத்து உருபேற்குங்கால் எவ்வாறாம்? இவை ஆன்சாரியைபெறுவிடத்து எவ்வாறுவரும்? ஒன்பஃது ஒன்பது என்பன உருபுகள் ஏற்குமிடத்து எங்ஙனம் முடியும்? 11. வகரவீற்றுச் சுட்டுப்பெயர்கள் உருபேற்குமிடத்து எவ்வாறாம்? இச்சுட்டுப்பெயர்கள் அற்றுச்சாரியையோடு வேறு சாரியையும் உடன்பெறுவோ? 12. ஆய்தத்தொடர்க் குற்றுகர வீற்றுச் சுட்டுப்பெயர்கள் உருபேற்குமிடத்து எவ்வாறாம்? இவை அன்சாரியை பெறுவிடத்து எவ்வாறு வரும்? ஆய்த மில்லாச் சுட்டுப்பெயர்கள் உருபேற்குமிடத்து எவ்வாறாம்? இச்சுட்டுப் பெயர்கள் குவ்வுருபேற்குமிடத்து வேறு சாரியையும் உடன் பெறுமோ? 13. இயல்பினும் விதியினும் நின்ற அகரவீற்றுப் பால்பகாவஃறிணைப் பெயர்முன் பெயரேனும் உருபேனும் வரின் எவ்வாறாம்?

---

## புறனடை

[சாரியைக்குப் புறனடை.]

**253.** இதற்கிது சாரியை யெனினள வின்மையின்
விகுதியும் பதமு முருபும் பகுத்திடை
நின்ற வெழுத்தும் பதமு மியற்கையும்
ஒன்ற வுணர்த்த லுரவோர் நெறியே.

இ - ள். இதற்கு இது சாரியை எனின் அளவு இன்மையின் - விகுதி முதலிய புணர்ச்சிக்கண் இதற்கு இது சாரியையென்று அளவுசெய்துவிதித்தனவற்றுள்ளும் ஒழிந்தனவற்றுள்ளுந் தனித்தனி சொல்லப்புகின் அளவுபடாமையால்—விகுதியும் பதமும் உருபும் பகுத்து - விகுதிப் புணர்ச்சியையும் பதப்புணர்ச்சியையும் உருபுபுணர்ச்சியையும் கண்டவிடத்துப் பகுத்து—இடைநின்ற எழுத்தும் பதமும் - நடுவேநின்ற ஏகாரம் அகரம் முதலிய எழுத்துக்

சாரியையினையும் அன் ஆன் முதலிய பதச்சாரியையினை யும்—இயற்கையும் - இவ்விரண்டு சாரியையுந் தோன்றாத இயல்பினையும்—ஒன்ற உணர்த்தல் உரவோர் நெறி - தெரிய அறிவித்தல் பெரியோரது கடனாகும். எ - று.

உ - ம். (1.) "ஆன நெய் தெளித்து நான நீவி" என விதித்த பொருட்புணர்ச்சிக்கண்; "உருபின்முடிபவையொக்கு மப் பொருளினும்" என்ற மாட்டேற்றால் அமைந்த னகரமெய்ச்சாரியையன்றி, அகரச்சாரியையும உடன் வந்தது.

(2.) இனி விதியாதொழிந்தவற்றின்கண், பாட்டின் பொருள் எனக் குற்றியலுகரத்திற்கு இன்சாரியை வந்தது.

(3) தன்கை, என்கை எனச் சாரியையின்றி இயல்பாக வந்தன.

இப்படியே மூவகைப்புணர்ச்சிகளையும் பகுத்துணர்ந்து கொள்க. (14)

[நான்கு புணர்ச்சிக்கும் புறனடை.]

254 விகுதி பதஞ்சா ரியையுரு பனைத்தினும்
உரைத்த விதியினோர்ந் தொப்பன கொளலே.

இ - ள். விகுதி பதம் சாரியை உருபு அனைத்திலும் - விகுதியும் பதமுஞ் சாரியையும் உருபும் ஆகிய நான்கின் புணர்ச்சியினிடத்தும்—உரைத்த விதியின் ஓர்ந்து-பொதுப் படச் சொல்லப்பட்ட விதிகளுள் இவ்விதி இதற்குப் பொருந்தும் இவ்விதி இதற்குப் பொருந்தாது என உய்த் துணர்ந்து—ஒப்பன கொளல் - எவ்விதி எதற்குப் பொருந் துமோ அவ்விதியை அதற்குக் கொள்க. எ - று.

உ - ம். (1.) விகுதிப்புணர்ச்சியுள்; "றவ்வொடு கர வும்மை நிகழ் பல்லவும்" எனப் பொதுப்பட விதித்தாரேனும், விதியுள தென்று நினைந்து, இவ்விகுதி வந்தவிடத்

தெல்லாம் இவ்விரண்டு காலமும் பொருந்தும் என்று கொள்ளற்க; சென்று, சென்றும் என்றவிடத்து இறந்தகாலமும், சேறு, சேறும் என்றவிடத்து எதிர் காலமும் பொருந்தும் என்று கொள்க.

(2.) பதப்புணர்ச்சியுள், "அல்வழி இ ஐம் முன்னராயி னியல்பு மிகலும் விகற்பமு மாகும்" எனப் பொதுப் பட விதித்தாரேனும், விதியுளதென்று நினைந்து ஆடி திங்கள், குவளைகண், என இயல்பாமென்றும், பருத்திக்குறிது. யானைக்குதிரை என மிகுமென்றுங் கொள்ளற்க; பருத்திகுறிது என எழுவாய்க்கண் ணும், யானை குதிரை என உம்மைத்தொகைக் கண் ணும் இயல்பாமெனவும், ஆடித்திங்கள் எனப் பண் புத் தொகைக்கண்ணும், குவளைக்கண் என உவ மைத் தொகைக்கண்ணும் மிகுமெனவுங் கொள்க.

(3.) சாரியைப் புணர்ச்சியுள்: "பதமுன் விகுதியும் பதமு முருபும் புணர்வழியொன்றும் பலவுஞ் சாரியை வருதலுந் தவிர்தலும் விகற்பமுமாகும்" என பொதுப்பட விதித்தாரேனும், விதியுளதென்று நினைந்து, நாட்டினினீங்கினான் என இன்னுருபிற்கு இன்சாரியை வருமென்றும், நாட்டுக்கணிருந்தான் எனக் கண்ணுருபிற்கு இன்சாரியை வாராதென்றுங் கொள்ளற்க; நாட்டின்கணிருந்தான் எனக் கண் ணுருபிற்கு இன்சாரியை வருமென்றும் நாட்டி னீங்கினான் என இன்னுருபிற்கு இன்சாரியை வாரா தென்றுங் கொள்க.

(4.) உருபுபுணர்ச்சியுள்: "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே" எனப் பொதுப்பட விதித்தாரேனும் விதியுளதென்று நினைந்து, நம்பிகு என உயிரீற்று உயர்திணைப் பெயர்முன்வந்த குவ்வுருபு மிகாதென் றும், நம்பிக்கண் என மன்னென்றமையாற் கண் ணுருபு மிகுமென்றுங் கொள்ளற்க; நம்பிகண் என

கணனுருபு மிகாதென்றும், நம்பிக்கு எனக் குவ்வுருபு மன்னென்றமையான் மிகுமென்றுங் கொள்க. மற்றவைகளும் இப்படியே காண்க. (15)

[வேற்றுமைப்புணர்ச்சிக்குப் புறனடை.]

**255.** **இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்**
**உயர்திணையிடத்து விரிந்துந் தொக்கும்**
**விரவுப் பெயரின் விரிந்து நின்றும்**
**அன்ன பிறவு மாகுமை யுருபே.**

**இ - ள்.** இயல்பின் விகாரமும் விகாரத்து இயல்பும் - வேற்றுமைப்புணர்ச்சிக்கு விதித்த பொதுவிதியோடு தானும் ஒருங்கு முடிதலேயன்றி யப்படி விதித்த இயல்பிலே விகாரமாகியும் விகாரத்திலே இயல்பாகியும்—உயர்திணையிடத்து விரிந்துந்தொக்கும் - உயர்திணைப்பெயரிடத்து வெளிப்பட்டும் மறைந்தும்—விரவுப்பெயரின் விரிந்தும் நின்றும் - பொதுப்பெயரிடத்து வெளிப்பட்டும் மறைந்தும்—அன்ன பிறவும் ஆகும் - அவைபோல்வன பிறவேறுபாடுகளாகியும் வரும்—ஐயுருபு - இரண்டாம்வேற்றுமைப் புணர்ச்சி. எ - று.

**வ - று.** (1.) வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப. எ-ம். மகட்கொடுத்தான், தலைவற்புகழ்ந்தான், தாய்க்கொலை, ஒன்னலர்ச் செகுத்தான். எ - ம் இயல்பாகவேண்டியவிடத்து விகாரமாயிற்று.

(2.) கனிதின்றான், வரைபிளந்தான், பந்துதந்தான். எ-ம் மண்சுமந்தான், பொன்கொடுத்தான். எ - ம். காய்தின்றான், தேர்செய்தான், தமிழ்படித்தான். எ - ம். பால்குடித்தான், வாள்பிடித்தான். எ - ம். வரம்பெற்றான், செயமுற்றான், மரம்வெட்டினன். எ-ம். விகாரமாக வேண்டியதுவிடத்து இயல்பாயிற்று. இவ்விகாரத்து இயல்பு வருமொழி வினையாயவிடத்தெனக் கொள்க.

வருமொழி வினையாகாது பெயரேயாக இரண்டனுருபும் பயனும் உடன்றொக்க தொகையிலே வேற்றுமைக்கென விதித்த பொதுவிதியோடு ஒருங்கொத்து விகாரத்தால் விகாரமாகும். கண்கூடையுண்கை என ணகரவீறு, இரண்டனுருபும் பயனும் உடன்றொக்க தொகையினும், இயல்பாம். மண்சுமந்தான் என்பது, மண்ணைச் சுமந்தான் என விரிதலால், இரண்டனுருபுமாத்திரர் தொக்கதொகை. மண்கூடை என்பது, மண்ணையுடைய கூடை என விரிதலால், உருபும் பயனும் உடன்றொக்க தொகை. கற்கறித்தான், கட்குடித்தான் எனத் தனிக்குறிலைச் சார்ந்த லகர ளகரம், வருமொழிவினையாயவிடத்தும் வேற்றுமைப்பொதுவிதியேற்றல் காண்க.

(3.) நம்பியைக் கொணர்ந்தான், அரசனை வணங்கினான் என உயர்திணைப்பெயரிடத்தே விரிந்தது. ஆடூஉவறிசொல், மகடூஉவறிசொல், பல்லோரறியுஞ்சொல், நான்முகற்றொழுது என உயர்திணைப் பெயரிடத்தே தொக்கது.

(4.) கொற்றனைக் கொணர்ந்தான் எனப்பொதுப்பெயரிடத்தே விரிந்தது. ஆண்பெற்றாள், பெண்பெற்றாள் எனப் பொதுப்பெயரிடத்தே தொக்கது.

அன்னபிறவும் என்றதனால், தற்கொண்டான், எற்பணியாள் என உறழவேண்டியவிடத்துத்திரிந்தே வருதலும், விளக்குறைத்தான் என இனமெல்லெழுத்து மிக வேண்டியவிடத்து வல்லெழுத்து மிகுதலும், மரங்குறைத்தான் என மவ்வீறு கெட்டு வல்லெழுத்து மிகவேண்டியவிடத்து மகரம் இனமெல்லெழுத்தாகத் திரிதலும், மாடுகொண்டான், பயறுதின்றான்; என ட ற ஒற்றிரட்டவேண்டியவிடத்து இரட்டாமையும், மருந்து தின்றான் என மென்றொடர் வன்றொடராக வேண்டியவிடத்து அங்ஙனமாகாமையும், வேறொட்டான், தாடொழு

தான் என லகர ளகரந் தகரம் வரத் திரியவேண்டியவிடத்துக் கெடுதலும், குரிசிற்றடிந்தான், அவட்டொடர்ந்தான் என உயர்திணைக்கட்கெடாது திரிந்து நிற்றலும், பிறவுங்கொள்க.

இன்னும், எண்ணின்கணின்ற இறந்ததழீஇய இழிவு சிறப்பும்மைகளால், வேற்றுமைக்கென விதித்த பொதுவிதியோடொருங்கொத்து, தென்குபிடித்தான், எஃகுதொடுத்தான், நாகு கட்டினான், வரகு தந்தான் என இயல்பில் இயல்பாகியும், மகப்பெற்றான், பலாக்குறைத்தான், வடுப்பெற்றான், சுக்குத்தின்றான், பூத்தொடுத்தான், சேப்பெற்றான், கோக்கறந்தான் என வருமொழி வினையாயவிடத்தும் விகாரத்தில் விகாரமாகியும் வருதலே பெரும்பாலனவென்க. (16)

**256.** **புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்**
**றம்மி னாகிய தொழின்மொழி வரினே**
**வல்லினம் விகற்பமு மியல்பு மாகும்.**

இ - ள். புள்ளியும் உயிரும் ஆய் இறு சொன்முன் - மூன்றும் வேற்றுமைப் புணர்ச்சியுள் ஒற்றும் உயிரும் இறுதியாக நின்ற சொற்களின் முன்—தம்மின் ஆகிய தொழில்மொழி வரின் - கருவி கருத்தா உடனிகழ்ச்சி என்பவற்றுட் கருத்தாவாகிய நிலைமொழிப் பொருள்களாலாகிய தொழிற்சொல் வந்தால்—வல்லினம் விகற்பமும் இயல்பும் ஆகும் - அவ்விடத்து வரும் வல்லினம் வேற்றுமைப் பொதுமுடிபேலாது உறழ்ச்சியும் இயல்பும் ஆகும். எ - று.

இவ்விதியும் இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சிபோல ஒப்பன கொள்க.

உ - ம். (1.) பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான்; சூர்கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான்; புலிகோட்

பட்டான், புலிக்கோட்பட்டான் என வல்லினம் ஒருகான்மிகுந்தும் ஒருகாலியல்பாயும் விகற்பித்தன.

(2.) பேய்பிடிக்கப்பட்டான், புலிகடிக்கப்பட்டான் என வல்லினம் இயல்பாயின.

உம்மையால் அராத்தீண்டப்பட்டான், சுறுப்பாயப்பட்டான் என வேற்றுமைப்பொதுவிதியான் மிக்குமுடிவனவே பெரும்பாலனவென்க. (17)

[எழுத்ததிகாரத்துக்குப் புறனடை.]

**257.** **இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்**
**விதிப்பன வின்மையின் விதித்தவற் றியலான்**
**வருத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.**

**இ - ள்.** இதற்கு இது முடிபு என்று - இதற்கு இது முடிபென்று—யாவும் எஞ்சாது விதிப்ப-இவ்வதிகாரத்துள் விதிக்கத் தகுவனவற்றையெல்லாங் குறையாமல் தனித் தனி அளவுசெய்து விதிக்கப்புகின் - அளவு இன்மையின் - அதற்கு ஓரளவில்லாமையால்—விதித்தவற்று இயலான் - வகுத்து விதித்தவற்றினுடைய இலக்கணங்களை ஏதுவாகக் கொண்டு—வகுத்து உரையாதவும் வகுத்தனர் கொளல் - வகுத்து விதியுரையாதனவற்றையுங் கருதலளவையால் வகுத்து விதியுரைத்துக் கொள்க. எ - று.

விதிப்ப எனற்பாலது அகரங் குறைந்து நின்றது.

**வ - று.** (1.) எழுத்தியலுள், "மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி யெழுத்து" என உரைத்தமையால், "கட்புலனில்லாக் கடவுளைக் காட்டுஞ் சட்டகம்போலச் செவிப்புல வொலியை யுட்கொளற் கிடுமுரு பாம் வடிவெழுத்தே" எனப் பிறர்கூறியவாறு, இவ்வொலிவடிவைக் காட்டுதற்கு ஒருகருவியாக எழுதிக்கொள்ளப்பட்டது வரிவடிவெழுத்தெனக் கொள்க.

(2.) பதவியலுள், "அன் ஆன் அள் ஆள்" என்னுஞ் சூத்திரத்திலே முறையே அன ஆன் விகுதி ஆண்பாற்கென உரைத்தமையால், பெருமாள் என்னும் பதம் பெருமையையுடையானென்னும் பொருள் தோன்ற நின்ற பெருமான் என்னும் பதத்தினது ஆன்விகுதி ஆள் விகுதியாக ஒரோவிடத்தே திரிந்து ஆண்பாலையே புணர்த்திநின்றதெனக் கொள்க.

(3.) உயிரீற்றுப்புணரியலுள், "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் க ச த ப மிகும்" என்று சொன்னமையால், "ணனவல் லினம்வரட் டறவும்" என்றவிடத்து டகரமும் வல்லினமாதலின் மிகுந்ததெனக் கொள்க.

(4.) மெய்யீற்றுப்புணரியலுள், "நுந்தம் எம் நம் மீறு மவ் வரு ஞநவே" உரைத்தமையால், அம்மென்னுஞ் சொல்லிறுதி மகரமும் குற்றொற்றாதலின் தன்னொடு மயங்காத மெல்லினம் வரின் அதுவாய்த் திரிந்து அந்நலம் என அழகினது நலமென்னும் பொருளதாய் வருமெனக் கொள்க.

(5.) உருபுபுணரியலுள், வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழிதே" என உரைத்தமையால், அதுபோலும் விறுவும் எவற்றை என அற்றுச்சாரியை பெறுமெனவும், இரண்டாம் வேற்றுமைக்கும் மூன்றாம்வேற்றுமைக்கும் புறனடையுரைத்தமையால், ஏழாம்வேற்றுமையும் வரைபாய் வருடை, "மண்புகுந்தும் விண் பறந்து மாலுமயனுங்காணாவொருபொருள்" என வேற்றுமைப் பொதுவிதியேலாத சிறுபான்மை வரு மெனவுங்கொள்க.

இன்னும், இவ்வைந்தியலுள்ளும் வகுத்துரையாதனவற்றை யெல்லாந் துன்பப்படாது இதுவே இடமாக முடித்துக்கொள்க

**பரீக்ஷை வினாக்கள்:**—14. விகுதிமுதலிய புணர்ச்சிகளிலே சாரியைப் பேறு தனித்தனி சொல்லாதது என்னை? அளவுபடா

வெனின் யாது செய்தல்வேண்டும்? 15. விகுதிமுதலிய நான்கின் புணர்ச்சிகளிடத்தும் பொதுப்படச் சொல்லப்பட்ட விதிகளை எவ்வாறமைத்தல்வேண்டும்? 16. வேற்றுமைப்புணர்ச்சிக்கென மேற்கூறிய பொதுவிதி பெறாது இரண்டாம்வேற்றுமைப் புணர்ச்சியில் வேறுபட்டு வருவனவும் உளவோ? இரண்டாம் வேற்றுமைப்புணர்ச்சியில் விகாரத்தியல்பு எவ்விடத்துக் கொள்ளப்படும்? விகாரத்தியல்புக்கு இங்கே காட்டிய ஈற்றுட் சில இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகையிலும் இயல்பாதலில்லையோ? இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சியில் வருமொழி வினையாயவிடத்தும் விகாரத்தில் விகாரமாய்வரும் மெய்யீறு உண்டோ? வேற்றுமைப்புணர்ச்சியுள் உறழவேண்டியன இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சியில் எவ்வாறும்? வேற்றுமைப் புணர்ச்சியில் இயல்பாமென விதிக்கப்பட்ட குற்றுகரங்கள் இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சியில் எவ்வாறும்? உயிரீற்றுப்புணர்ச்சியில் வருமொழி வினையாயவிடத்தும் விகாரத்தில் விகாரமடைவன எவை? இரண்டனுருபு உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்களிடத்து எவ்வாறு நிற்பது தகுதி? தொகுதல் எவ்விடத்தே தகுதியாயும் எவ்விடத்தே வலிந்துகோடலாயும் வரும்? 17. வேற்றுமைப்புணர்ச்சிக்கென மேற்கூறிய விதிபெறாது மூன்றும் வேற்றுமைப்புணர்ச்சியுள் வேறுபட்டு வருவனவும் உளவோ? 18. இவ்வெழுத்ததிகாரத்தில் வகுத்து விதியுரையாதவைகளுக்கு யாது செய்யலாம்?

உருபு புணரியல் முற்றிற்று.

---

எழுத்ததிகாரம் முற்றுப்பெற்றது.

---

இரண்டாவது

# சொல்லதிகாரம்

[சொல்லினது அதிகரித்தலையுடைய படலம்]

## 1. பெயரியல்

[கடவுள்வணக்கமும் அதிகாரமும்]

258 முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுத னடிதொழு தறைகுவன் சொல்லே.

இ - ள். முச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை அச்சுதன் அடி தொழுது - மூன்றுலகத்திற்கும் நிழலைச் செய்யும் நிறைந்த மதிபோலும் மூன்றுகுடையையுடைய அழியாத கடவுளுடைய அடிகளை வணங்கி—அறைகுவன் சொல் - சொல்லுவேன் முன்னதிகாரத்துட் சொல்லிய எழுத்தினாலாகிய சொல்லிலக்கணத்தை. எ - று.

ஏகாரம் ஈற்றசை. (1)

---

### சொல்லின் பொதுவிலக்கணம்

[சொல் இன்னதென்பது.]

259. ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி யென்று
இருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.

இ - ள். ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி என்று - ஒருமொழியுந் தொடர்மொழியும் பொதுமொழியும் என மூன்று பிரிவினதாகி— இருதிணை ஐம்பாற் பொருளையும் தன்னையும் - இருதிணையாகிய ஐம்பாற்பொருளையும் அப்பொருளையன்றித் தன்னையும்—மூவகையிடத்தும் - மூன்றிடத்திலும்—வழக்கொடு செய்யுளின் - வழக்கினிடத்தும் செய்யுளிடத்தும்—வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல் - வெளிப்படையாலுங் குறிப்பினாலும் விளக்குவது சொல்லாகும். எ - று.

பொருளையுந் தன்னையுமென்றதனால், உயிர்க்கு அறிவானது கருவியாய் நின்று தன்னையும் பொருளையும் உணர்த்துமாறுபோல, ஒருவருக்குச் சொல்லான கருவியாய் நின்று தன்னையும் இருதிணை ஐம்பாற்பொருளையும் உணர்த்துமென்பது பெற்றாம். (2)

[மூவகை மொழி.]

**260. ஒருமொழி யொருபொரு ளனவாந் தொடர்மொழி**
**பலபொரு ளனபொது விருமையு மேற்பன.**

இ - ள். ஒருமொழி ஒருபொருளன ஆம் - ஒருமொழிகளாவன பகாப்பதமேனும் பகுபதமேனும் ஒன்று நின்று தத்தமொருபொருளைத் தருவனவாம்—தொடர்மொழி பலபொருளன - தொடர்மொழிகளாவன அவ்விருவகைப் பதங்களுந் தன்னோடும் பிறிதோடும் அல்வழி வேற்றுமைப் பொருளோக்கத்தால் இரண்டு முதலியவாகத் தொடர்ந்து நின்று இரண்டு முதலிய பலபொருளைத் தருவனவாம்— பொது (மொழி) இருமையும் ஏற்பன - பொதுமொழிகளாவன ஒன்றாய்நின்று ஒருபொருளைத் தந்தும் அதுவே தொடர்ந்து நின்று பலபொருளைத் தந்தும் இவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்பனவாம். எ - று.

வ - று.1(1.) நிலம், நிலத்தன். நட, நடந்தான், தில், மன், தவ, நனி என வருவன ஒருமொழிகள்.

(2.) நிலம்வலிது, அதுகொல், சாலப்பகை, நிலங்கடந் தான், நிலத்தைக் கடந்தான், நிலத்தைக்கடந்த நெடு மால் என வருவன தொடர்மொழிகள்.

(3.) எட்டு, தாமரை, வேங்கை, எழுந்திருந்தான் என வருவன பொதுமொழிகள். இவை, ஒருமொழிக ளாய் ஒருபொருளைத் தருவதன்றி, எள்ளைத்து. தாவு கின்ற மரை, வேகின்ற கை, எழுந்து பின் இருந் தான் எனத் தொடர்மொழிகளாய்ப் பலபொருளைத் தருதலுங் காண்க. [து-உண்ணென்னும் ஏவல் வினை.] (3)

[இருதிணை.]

**261.** மக்க டேவர் நரக ருயர்திணை
மற்றுயி ருள்ளவு மில்லவு மஃறிணை.

இ - ள். மக்கள் தேவர் நரகர் உயர்திணை - மக்களுந் தேவரும் நரகரும் உயர்திணையாகும்—மற்று உயிர் உள்ள வும் இல்லவும் அஃறிணை - அவரையொழிந்த விலங்கு முதலாகிய உயிருள்ளவையும் நிலம் நீர் முதலாகிய உயிரில் லாதவையும் அஃறிணையாகும். எ - று.

இம்மூவகையோருடைய உடமையையும் உயிரையும் வேறாகக் குறிக்கும்போது, அவையும் அஃறிணையாம்.

திணை சாதி. உயர்திணை உயர்வாகிய சாதி; அஃறிணை அல் லாத சாதி. (4)

[ஐம்பால்.]

**262.** ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

இ - ள். ஆண் பெண் பலர் என முப்பாற்று உயர் திணை - ஆண்பாலும் பெண்பாலும் பலர்பாலும் என்று மூன்றுபாலினை யுடைத்தாகும் உயர்திணை. எ - று.

ஆடவர், காளையர் என்பன முதலிய ஆண்பன்மையையும் பெண்டிர், மங்கையர் என்பன முதலிய பெண்பன்மையையும், மக்கள், அவர் என்பன முதலிய அவ்விருவர்பன்மையையும் அடக்கிப் பலர்பால் என்றார். பின் பலவின்பால் என்பதும் அது. (5)

**263. ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.**

இ - ள். ஒன்று பல என்று இருபாற்று அஃறிணை - ஒன்றன்பாலும் பலவின்பாலும் என்று இரண்டு பாலினை யுடைத்தாகும் அஃறிணை. எ - று.

அஃறிணையுள்ளும், களிறு, சேவல் என்பன முதலிய ஆண் பாலும், பிடி பேடை என்பன முதலிய பெண்பாலும் உளவெனி னும், அவ்வாண்பாலும் பெண்பாலும், உயிருள்ளனவற்றுள், புழு மாமுதலிய சிலவற்றிற்கும், உயிரில்லாதனவற்றிற்கும், இல்லா மையால், அப்பகுப்பொழித்து எல்லாவற்றிற்கும் பொருந்த ஒன்றன்பாலென்றார். (6)

[திணைபால்களுக்குப் புறனடை.]

**264. பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்**
**ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்**
**இருமையு மஃறிணை யன்னவு மாகும்.**

இ - ள். பெண்மைவிட்டு ஆண் அவாவுவ பேடு ஆண் பால் - பெண்டன்மையை விட்டு ஆண்டன்மையை அவாவு வனவாகிய பேடுகள் உயர்திணையாண்பாலாகும்—ஆண்மை விட்டு அல்லது அவாவுவ (பேடு) பெண்பால் - ஆண்டன் மையை விட்டுப் பெண்டன்மையை அவாவுவனவாகிய பேடு கள் உயர்திணைப்பெண்பாலாகும்—இருமையும் அஃறிணை அன்னவும் ஆகும் - இவ்விருவகைப் பேடுகளும் உயர்திணையா மன்றி அஃறிணையை ஒப்பனவும் ஆகும். எ - று.

வ - று "பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ - கண்ணவா தக்ககலம்" எனப் பெண்ணிலக்கணஞ் சிறந்த மையினாலே பெண்பாற்பட்டது. ஆண்பாற்பட்டதற்

கும் அஃறிணையை ஒத்து நின்றதற்கும் இலக்கியம் வந்தவழிக் காண்க. (7)

[ மூன்றிடத்துஞ் சொற்றன்னையும் பொருளையும் உணர்த்துதல். ]

265. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
யிடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே.

இ - ள். படர்க்கை வினைமுற்று (படர்க்கை) நாமம் குறிப்பின் - படர்க்கை வினைமுற்றுச்சொல்லையும் படர்க்கைப் பெயர்ச்சொல்லையும் முன் குறித்தால்—திணை பால் அனைத்தும் பெறப்படும் - பின் அவ்விருவகைச்சொல்லுங் கருவியாக இருதிணையும் ஐம்பாலும் பெறப்படும்—ஏனை இடத்து (வினைமுற்று நாமம் குறிப்பின்) - ஒழிந்த தன்மை முன்னிலைகளின் வினைமுற்றுச்சொல்லையும் பெயர்ச்சொல்லையும் முன்குறித்தால்—அவற்று ஒருமைப் (பால்) பன்மைப் பால் (பெறப்படும்) - பின் அந்நால்வகைச்சொல்லுங் கருவியாக இருதிணையைம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப் பாலும் பெறப்படும். எ. று.

உ - று. (1.) நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன. எ - ம். அவன், அவள், அவர், அது, அவை. எ - ம். படர்க்கை வினைமுற்றுச்சொல்லும், படர்க்கைப் பெயர்ச்சொல்லும், முன்பு தம்மையுணர்த்திப், பின்பு இருதிணையைம்பாற் பொருளையும் உணர்த்தின.

(2.) நடந்தேன், நடந்தேம். எ - ம். யான், யாம். எ - ம். தன்மைவினைமுற்றுச்சொல்லும் தன்மைப் பெயர்ச் சொல்லும், நடந்தாய், நடந்தீர். எ - ம். நீ, நீர். எ - ம் முன்னிலை வினைமுற்றுச்சொல்லும் முன்னிலைப் பெயர்ச்சொல்லும், முன்னே தம்மையுணர்த்திப்,

பின்பு இருதிணையைம்பாலுள் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் உணர்த்தின.

மூவிடங்களுள் ஒன்றற்குரிய வினைமுற்றும் பெயருந் தம்மையும் பொருளையும் இப்படியுணர்த்துமெனவே, இவ்விடங்களுக்குப் பொதுவாகிய வினைமுற்றுக்களும் பெயர்களும் பொதுமை நீங்கி ஓரிடத்திற்கு உரியவாகியும், எச்சவினை முதலியனவும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினைகளைச் சார்ந்தும் இப்படியே தம்மையும் பொருளையும் உணர்த்துமெனக் கொள்க.

[மூவிடம்.]

**266. தன்மை முன்னிலை படர்க்கை மூவிடனே.**

இ-ள். மூவிடன் தன்மை முன்னிலை படர்க்கை - மூவிடமான தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமாம் எ-று.

உ-ம். யான், நீ, அவன். எ-ம். வந்தேன், வந்தாய், வந்தான் எ-ம். வரும். (9)

[வழக்கு இன்னதென்பது.]

**267. இலக்கண முடைய திலக்கணப் போலி**
**மரூஉவென் றாகு மூவகை யியல்பும்**
**இடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி**
**எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.**

இ-ள். இலக்கணமுடையது இலக்கணப்போலி மரூஉ என்று ஆகும் மூவகை இயல்பும் - இலக்கணமுடையதென்றும் இலக்கணப்போலியென்றும் மரூஉவென்றும் வழங்கும் மூவகை யியல்புவழக்கும் — இடக்கரடக்கல் மங்கலம் குழூஉக்குறி எனும் முத்தகுதியோடு - இடக்கரடக்கலென்றும் மங்கலமென்றுங் குழூஉக்குறியென்றும் வழங்கும் மூன்று தகுதி வழக்குடனே கூட— ஆறு ஆம் வழக்கு இயல் - அறுவகைப்படும் வழக்கிலக்கணம். எ-று.

## 1. இயல்புவழக்கு.

இலக்கணமுடையதென்பது, இலக்கணநெறியால் வருவது. இலக்கணப்போலியென்பது, இலக்கணமில்லையாயினும், இலக்கணமுடையதுபோல் அடிப்பட்ட சான்றோராலே தொன்றுதொட்டு வழங்கப்பட்டு வருவது. மரூஉவென்பது, தொன்றுதொட்டு வருதலின்றி, இடையிலே, சிலவெழுத்துக் கெட்டும், சிலவெழுத்துத் திரிந்தும், சிலவெழுத்துத் தோன்றியும், இலக்கணத்திற் சிதைந்து, தானே மருவி வழங்குவது. இம்மூன்றும், எப்பொருட்கு எச்சொல் அமைந்ததோ அப்பொருளை அச்சொல்லாற் கூறுதலால், இயல்புவழக்கு எனப்பட்டன.

வ - று (1.) நிலம், நீர், தீ, காற்று, வானம், நன்னிலம், தண்ணீர், வெந்நீர் இவை முதலானவை இலக்கணமுடையன.

(2.) இன்முன் என்பதை முன்றில் என்றும், நகர்ப்புறம் என்பதைப் புறநகர் என்றும், புறவுலா என்பதை உலாப்புறம் என்றும், கண்மீ என்பதை மீகண் என்றும், கோவில் என்பதைக் கோயில் என்றும், பொதுவில் என்பதைப் பொதியில் என்றும் வழங்கும் இவை முதலானவை இலக்கணப்போலி.

(3.) அருமருந்தன்னபிள்ளை என்பதை அருமந்தபிள்ளை என்றும், மலையமானாடு என்பதை மலாடு என்றும், சோழனாடு என்பதைச் சோணாடு என்றும், பாண்டியனாடு என்பதைப் பாண்டிநாடு என்றும், தொண்டைமானாடு என்பதைத் தொண்டைநாடு என்றும், அ இ என்னுஞ் சுட்டுக்களை அந்த இந்த என்றும், மரவடி என்பதை மராடி என்றும், குளவாம்பல் என்பதைக் குளாம்பல் என்றும், யாவர் என்னும் வினாப்பெயரை யார், ஆர் என்றும், யார் என்னுங் குறிப்புவினையை ஆர் என்றும், எவன் என்னுங் குறிப்புவினையை என், என்னை, என்ன என்றும், தஞ்சாவூர் என்பதைத் தஞ்சை என்றும் வழங்கும். இவை முதலானவை மரூஉ.

## 2. தகுதிவழக்கு.

இடக்கரடக்கலென்பது, நன்மக்களிடத்தே சொல்லத்தகாத சொல்லை, அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் சொல்வது. மங்கலமென்பது, மங்கலமில்லாததை யொழித்து மங்கலமாகச்சொல்வது. குழூஉக்குறியென்பது, ஒவ்வொரு கூட்டத்தார் யாதாயினும் ஒரு காரணம்பற்றி ஒருபொருளினது சொற்குறியை யொழித்து வேறொரு சொற்குறியாற் சொல்வது. இம்மூன்றும், இப்பொருளை யறிதற்கு அமைந்து கிடந்த இச்சொல்லாற் சொல்வது தகுதியன்று வேறொரு சொல்லாற் சொல்வது தகுதியென்று நினைந்து கூறுதலால், தகுதிவழக்கெனப்பட்டன.

வ - று (1.) மலங்கழீஇ வருதும் என்பதைக் கால் கழீஇ வருதும் என்றும், பீ என்பதைப் பகரவீ என்றும், பவ்வீ என்றும் வழங்கும் இவைமுதலானவை இடக்கரடக்கல்.

(2.) செத்தாரைத் துஞ்சினார் என்றும், ஓலையைத் திருமுகம் என்றும், காராட்டை வெள்ளாடு என்றும், இடுகாட்டை நன்காடு என்றும் வழங்கும் இவை முதலானவை மங்கலம்.

(3.) பொற்கொல்லர் பொன்னைப் பறி என்றும், யானைப் பாகர் ஆடையைக் காரை என்றும், வேடர் கள்ளைச் சொல்விளம்பி என்றும் வழங்கும் இவை முதலானவை குழூஉக்குறி. (10)

[செய்யுள் இன்னதென்பது.]

**268. பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல**
**சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்**
**வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்.**

இ - ள். பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போல்- தோல் இரத்தம் இறைச்சி மேதைஎலும்பு மச்சை சுவேத நீர் என்னும் எழுவகைத் தாதுக்களினால் உயிர்க்கு இடமாக

இயற்றப்பட்ட உடம்புபோல—பல சொல்லால் பொருட்கு இடன் ஆக - இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வட சொல் என்னும் நால்வகைச் சொற்களாற் பொருளுக்கு இடமாக—உணர்வினின் வல்லோர் அணி பெறச் செய்வன செய்யுள் - கல்வியறிவினாற் செய்யுள் செய்ய வல்லவர் அலங்காரம் பெறச் செய்வன செய்யுளாம். எ - று.

இப்படிச் சொல்லவே, எழுத்தாலானது சொல்லாதலால், எழுத்துச்சொற் பொருள் அணி நான்கினாலும் உண்டாவது செய்யுளென்பதாயிற்று.

வ - று. "வருங்குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்—திருங்குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தவெம்மூர்ப்— பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்—கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே." இக்கட்டளைக்கலித்துறை, இடமணித்தென்னும் பொருளுக்கிடமாகித், தன்மையுவமை யுருவக அணிகளும் பிறவுமுடைத்தாய் வருதல் காண்க. (11)

[வெளிப்படை குறிப்பு.]

**269.** ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி
ஆகு பெயரன் மொழிவினைக் குறிப்பே
முதலொகை குறிப்போ டின்ன பிறவுங்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.

இ - ள். ஒன்றொழி பொதுச்சொல் - இருதிணையாண் பெண்ணுள் ஒன்றனையொழிக்கும் பொதுச்சொல்லும்—விகாரம் - வலித்தன் முதலாகிய ஒன்பது விகாரச்சொல்லும்—தகுதி - மூவகைத் தகுதிவழக்குச் சொல்லும்—ஆகு பெயர்- ஆகுபெயர்ச்சொல்லும்—அன்மொழி- அன்மொழித் தொகைச்சொல்லும் — வினைக்குறிப்பு - வினைக்குறிப்புச் சொல்லும்—முதல்-முதற்குறிப்புச் சொல்லும்—தொகை- தொகைக்குறிப்புச்சொல்லும்—குறிப்பு-இம்முதல்தொகை

யல்லாத பலவழியாலும் வருங் குறிப்புச்சொல்லும் — இன்ன பிறவும் - இவைபோல்வன பிறவும்—குறிப்பின் தருமொழி - குறிப்பினால் இருதிணையைம்பாற் பொருள்களைத் தருஞ்சொற்களாம்—அல்லன வெளிப்படை (தருமொழி) - இவையல்லனவெல்லாம் வெளிப்படையால் அப்பொருள்களைத் தருஞ்சொற்களாம். எ - று.

**வ - று.** (1.) ஆயிரமக்கள் பொருதார் என்றவிடத்து, மக்கள் என்னும் பொதுப்பெயரும், பொருதார் என்னும் பொதுவினையும், உயர்திணைப்பெண்பாலையொழித்து, ஆண்பாலைக் குறிப்பாலுணர்த்தின.

(2.) குறுத்தாட்பூதம், மரைமலர் என்றவிடத்து, இவ்விகாரசொற்கள், குறுந்தாள், தாமரை என்பனவற்றைக் குறிப்பாலுணர்த்தின.

(3.) கால்கழீஇ, வருதும், திருமுகம், பறி என்றவிடத்து இத்தகுதிவழக்குச் சொற்கள், மலங்கழுவி வருதும்; ஓலை, பொன் என்பனவற்றைக் குறிப்பாலுணர்த்தின.

(4.) புளிதின்றான், கடுத்தின்றான் என்றவிடத்து, இவ்வாகுபெயர்கள், அவற்றின் பழத்தைக் குறிப்பாலுணர்த்தின.

(5.) பொற்றொடிதந்த புனைமடல், அறற்கூந்தற்கில்லையருள் என்றவிடத்து, இவ்வன்மொழித்தொகைகள், அவற்றையுடைய மகளிரைக் குறிப்பாலுணர்த்தின.

(6.) இவனிப்போது பொன்னன் என்றவிடத்துப், பொன்னன் என்பது பெயர்ப்பொருளை யொழித்து, வினைக்குறிப்புப்பொருளைக் குறிப்பாலுணர்த்திற்று.

(7.) அறத்தாறிதுவென வெள்ளைக் கிழிபு" என்றவிடத்து இம்முதற்குறிப்புச்சொற்கள், "அறத்தாறிதுவென வேண்டா சிவிகை - பொறுத்தானோ டூர்ந்தானிடை" என்னும் பாட்டைக் குறிப்பாலுணர்த்தின.

(8.) "அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ" என்ற இடத்து ஐவர் என்னுந் தொகைக்குறிப்புச்சொற் பாண்டவரைக் குறிப்பாலுணர்த்திற்று.

(9.) கற்கறித்து நன்கட்டாய், நீயிர் பெரிது மறிதிர், பாயாவேங்கை, "உவர்க்கடலன்ன செல்வருமுளரே கிணற்றூற்றன்ன நீயுமாருளையே;" "பல்சான்றீரே பல்சான்றீரே கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட் பயனின் மூப்பிற் பல்சான் றீரே" இவை முதலானவை யெல்லாம் பலவழியாலும் வருங் குறிப்புச்சொற்கள்.

இன்ன பிறவும் என்றதனால், தெரிநிலைவினை குறிப்பு வினையாலணையும் பெயர்களும், தெரிநிலைவினை முற்றாலுங் குறிப்புவினைமுற்றாலும் வருமெச்சங்களும், செய்யுமென்னும் முற்றும், "கேட்குநபோல" முதலியவாக அஃறிணையிடத்துச் சொல்லப்படுவனவும், ஆகிய இவை முதலானவை குறிப்பாற் பொருளுணர்த்துமெனக் கொள்க.

இப்படியன்றி, நிலம், நீர், தீ, காற்று, வானம் என வருவன, வெளிப்படையாற் பொருளுணர்த்துவனவாம்.

**சோதனை வினாக்கள்:**—2. சொல்லாவது யாது? 3. ஒருமொழிகளாவன யாவை? தொடர்மொழிகளாவன யாவை? பொதுமொழிகளாவன யாவை? 4. இருதிணையென்பன யாவை? உயர்திணையாவன யாவை? அஃறிணையாவன யாவை? உயர்திணையென்பதற்குப் பொருளென்னை? அஃறிணையென்பதற்குப் பொருளென்னை? 5. ஐம்பாலென்பன யாவை? உயர்திணை எத்தனை பாலையுடையது? 6. அஃறிணை எத்தனை பாலையுடையது? 7. பேடு எத்திணையில் அடங்கும்? 8. இருதிணையும் ஐம்பாலும் எல்லாச்சொற்களாலும் அறியப்படுமோ? தன்மைமுன்னிலை வினைமுற்றுக்களாலுந் தன்மைமுன்னிலைப்பெயர்களாலும் அறியப்படுவன எவை? மூவிடங்களுக்கும் பொதுவாகிய வினைமுற்றுக்களும் பெயர்களும் இருதிணையைம்பாற்பொருளை எப்படியுணர்த்தும்? எச்ச

வினைமுதலியனவும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் எப்படிப் பொருளுணர்த்தும்? 9. மூவிடமென்பன யாவை? 10. வழக்குச் செய்யுள் என்னும் இரண்டனுள், வழக்காவன யாவை? இலக்கணமுடையதென்பது யாது? இலக்கணப் போலியென்பதுயாது? மரூஉவென்பதுயாது? இம்மூன்றும் யாதுகாரணம்பற்றி இயல்புவழக்கெனப்பட்டன? இடக்கரடக்கலென்பது யாது? மங்கலமென்பது யாது? குழூஉக்குறியென்பது யாது? இம்மூன்றும் யாதுகாரணம்பற்றித் தகுதிவழக்கெனப்பட்டன? 11. செய்யுளாவன யாவை? எழுவகைத்தாதுக்களென்பன எவை? 12. இருதிணையைம்பாற் பொருளைக் குறிப்பால் உணர்த்துவன எவை? இருதிணையைம்பாற்பொருளை வெளிப்படையால் உணர்த்துவன எவை?

## சொற்பாகுபாடு

[சொல் இத்தனை வகைப்படுமென்பது.]

**270.** அதுவே,—
இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை
எனவிரண் டாகு மிடையுரி யடுத்து
நான்கு மாந்திசை வடசொல ணுகாவழி.

இ - ள். அது இயற்சொல் திரிசொல் இயல்பின பெயர்வினை என இரண்டு ஆகும் - மேற்காட்டிய சொல் இயற்சொல்லுந் திரிசொல்லுமென்னுந் தன்மையையுடைய பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் என்று இரண்டாகும்— இடை உரி அடுத்து நான்கும் ஆம் - இவற்றுடன் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் அடுத்து நான்குமாகும்— திசை வடசொல் அணுகாவழி - இவற்றுடன் திசைச்சொல்லும் வடசொல்லும் சேராவிடத்து. எ - று.

எனவே, அதுவேயெனக் குறித்த சொல், பெயரியற்சொல், பெயர்த்திரிசொல், வினையியற்சொல், வினைத்திரிசொல், இடை-

இயற்சொல், இடைத்திரிசொல், உரியியற்சொல், உரித்திரிசொல் என எண்வகைப்படுமென்பதும், திசைச்சொல்லும் வடசொல்லுஞ் சேர்ந்தவிடத்துப் பத்துவகைப்படுமென்பதும் பெற்றாம். (13)

[இயற் சொல்.]

**271. செந்தமி ழாகித் திரியா தியார்க்குந்**
**தம்பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல்.**

**இ - ள்.** செந்தமிழ் ஆகி - செந்தமிழ்நிலத்து மொழியாகி—திரியாது யார்க்கும் தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல் - திரிசொற்போலாது கற்றோருக்கும் கல்லாதோருக்கும் ஒப்பத் தம்பொருளை விளக்குந் தன்மையையுடைய உலகவழக்கே இயற்சொல்லாகும். எ - று.

இயற்சொல் இயல்பாற் பொருளுணருஞ் சொல்.

**வ - று.** (1.) மண், பொன் என்பன பெயரியற்சொல்.

(2.) நடந்தான், வந்தான் என்பன வினையியற்சொல்.

(3.) அவனை, அவனால் என்பவற்றன், ஐ ஆல் என்பன இடையியற்சொல்.

(4.) அழகு, அன்பு என்பன உரியியற்சொல்.

செந்தமிழ் நாடாவது பாண்டிவளநாடு; தமிழ் முனிவராகிய அகத்தியருக்கும், தமிழைவளர்த்த பாண்டியர்களுக்கும், சங்கப் புலவர்களுக்கும் உறைவிடம் அதுவாதலென்றறிக. (14)

[திரிசொல்.]

**272. ஒருபொருள் குறித்த பலசொல் லாகியும்**
**பலபொருள் குறித்த வொருசொல் லாகியும்**
**அரிதுணர் பொருளன திரிசொல் லாகும்.**

**இ - ள்.** ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும் - ஒருபொருளைக்கருதிய பலசொற்களாகியுப்—பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும் - பலபொருள்களைக் கருதிய ஒருசொல்லாகியும்—அரிது உணர் பொருளன திரிசொல்

லாகும் - அரிதாகக் கற்றோர் அறியும் பொருளனவாய் வருவன திரிசொல்லாகும். எ - று.

அரிதுணர் பொருளன என்றதனால், ஒருபொருள் குறித்த பல சொற்களுள்ளும், பலபொருள் குறித்த ஒரு சொல்லுள்ளும், இயற்சொல்லொழியக் கொள்க.

திரிசொல் இயற்சொல்லின் வேறுபட்ட சொல். திரிதல் - வேறுபடுதல். வேறுபடுதலென்றது இயற்சொற்போல இயல்பால் உணரப்படாது அரிதின் உணரப்படுதலை.

உ - று. (1.) கிள்ளை, சுகம், தத்தை என்பன, கிளி என்னும் ஒரு பொருள் குறித்த பலபெயர்த் திரிசொல். வாரணம் என்பது, யானையுங் கோழியுஞ் சங்கு முதலாகிய பல பொருள் குறித்த ஒருபெயர்த் திரிசொல்.

(2.) படர்ந்தான், சென்றான் என்பன, போயினான் என்னும் ஒருபொருள் குறித்த பலவினைத் திரிசொல். வரைந்தான் என்பது, நீக்கினான், கொண்டான் என்னும் பலபொருள் குறித்த ஒருவினைத் திரிசொல்.

(3.) சேறும், வருதும் என்பவற்றுள், றும். தும் என்னும் ஒருபொருள் குறித்த பல இடைத்திரிசொல். கொல் என்பது, ஐயமும் அசைநிலையுமாகிய பலபொருள் குறித்த ஓரிடைத்திரிசொல்.

(4.) சால, உறு, தவ, நனி, கூர், கழி என்பன, மிகுதி என்னும் ஒருபொருள்குறித்த பல உரித்திரிசொல். கடி என்பது காப்பு, கூர்மை, அச்சம், கரிப்பு, விளக்கம், சிறப்பு, மணம் முதலிய பலபொருள் குறித்த ஒருரித்திரிசொல். (15)

[திசைச்சொல்.]

**273.** **செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்**
**ஒன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினுந்**
**தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.**

இ - ள். செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்- செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலங்களினும்—ஒன்பதிற்றிரண்டினில் தமிழ் ஒழி நிலத்தினும் - பதினெண் மொழிகளுள்ளே தமிழ்நிலமொழிந்த நிலங்களினுமுள்ளோர்—தங்குறிப்பின திசைச்சொல் என்ப- தங்குறிப்பினவாய் அத்திசைகளினின்றுஞ் செந்தமிழ் நிலத்து வந்து வழங்குவன திசைச்சொல்லென்று சொல்லுவர் புலவர். எ - று.

கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டையும் "தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி—பன்றி யருவா வதன்வடக்கு - நன்றாய—சீதமலாடு புனனாடு செந்தமிழ்சே—ரேதமில் பன்னிரு நாட்டெண்." என்னும் வெண்பாவாலறிக. புனனாடென்றது சோழநாட்டை.

இவற்றுட் செந்தமிழ்ப்பாண்டிநாட்டுக்குத் தென்றிசையிலுள்ள தென்பாண்டிநாட்டார் ஆவினைப் பெற்றமென்றும், சோற்றைச் சொன்றியென்றும், குட்டநாட்டார் தாயைத் தள்ளையென்றும், குடநாட்டார் தந்தையை அச்சனென்றும், கற்காநாட்டார் வஞ்சரைக் கையரென்றும், வேணாட்டார் தோட்டத்தைக் கிழாரென்றும், பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழியென்றும், அருவாநாட்டார் செய்யைச் செறுவென்றும், சிறுகுளத்தைக் கேணியென்றும், அருவாவடதலையார் புளியை எகினென்றும், சீதநாட்டார் தோழனை எலுவனென்றும், தோழியை இகுளையென்றும் வழங்குவர். பிறவும் வந்தவிடத்துக் காண்க.

இனி தமிழ்நிலத்தைச் சூழ்ந்த பதினேழ்நிலத்தையும்: "சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகங்—கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கம்—கங்க மகதங் கடாரங் கவுடங் கடுங்குசலந்—தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி

னேழ்புவி தாமிவையே" என்னுங் கட்டளைக் கலித்துறையா லறிக. சிங்களம் என்றது ஈழநாட்டை.

அந்தோ என்பது சிங்களச்சொல். எருத்தைப் பாண்டில் என்பது தெலுங்குச்சொல். மாமரத்தைக் கொக்கு என்பது துளுவச்சொல். ஒழிந்தன வந்தவிடங்களிற் காண்க. (16)

[வடசொல்.]

**274.** **பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்.**

இ - ள். பொது எழுத்தானும் - ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொது எழுத்தாலும்—சிறப்பு எழுத்தானும் - ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துத் திரிந்த எழுத்தாலும் — ஈரெழுத்தானும் - இவ்விரண்டெழுத்தினாலும் — இயைவன வடசொல் - செந்தமிழ்ச் சொல்லை ஒப்பனவாகி வடதிசையிலிருந்து செந்தமிழ்நிலத்து வந்து வழங்குவன வடசொல். எ - று.

வ - று. (1.) அமலம், கமலம், மேரு, காரணம், காரியம் என்பன பொதுவெழுத்தால் இயைந்தன.

(2.) சுகி, போகி, சுத்தி என்பன சிறப்பெழுத்தால் இயைந்தன.

(3.) அரன், அரி, கடினம், சலம் என்பன ஈரெழுத்தாலும் இயைந்தன. (17)

**பரீக்ஷை வினாக்கள்:**—13. சொல் எத்தனை வகைப்படும்? இயற்சொல் எத்தனை வகைப்படும்? திரிசொல் எத்தனை வகைப்படும்? 14. இயற்சொல்லாவன யாவை? இயற்சொல்லென்பதற்குப் பொருளென்னை? செந்தமிழ்நாடெனப்படுவது யாது? 15. திரிசொல்லாவன யாவை? திரிசொல்லென்பதற்குப் பொருளென்னை? 16. திசைச்சொல்லாவன யாவை? கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டென்பன யாவை? தமிழ்நிலத்தைச் சூழ்ந்த பதினேழ் நிலமென்பன எவை? 17. வடசொல்லாவன யாவை?

## பெயர்ச்சொல்

[பெயரின் பொது விலக்கணம்.]

**275.** இடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்று
வேற்றுமைக் கிடனாய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாவன பெயரே.

இ - ள். இடுகுறி காரணம் மரபு ஆக்கம் தொடர்ந்து - இடுகுறியுங் காரணக்குறியும் மரபினையும் ஆக்கப்பாட்டினையுந் தொடர்ந்து—தொழில் அல காலம் தோற்று - வினையாலணையுங் காரணக்குறிபொன்றுங் காலங்காட்ட, அல்லாதன காலங் காட்டாதனவாகி—வேற்றுமைக்கு இடன் ஆய் - எட்டு வேற்றுமையுஞ் சார்தற்கு இடமாகி—திணை பால் இடத்து ஒன்று ஏற்பவும் - இருதிணையிலும் ஐம்பாலிலும் மூவிடத்திலும் ஒன்றனையேற்பனவும்—பொதுவும்- பலவற்றினை ஏற்பனவும்—ஆவன பெயர் - ஆகிவருவன பெயர்களாம். எ - று.

உ - ம். (1.) மரம், விள, பனை என்பன இடுகுறிமரபு.

(2.) அவன், அவள், விலங்கு, பறவை என்பன காரணக் குறிமரபு.

(3.) "பொன்போலுங் கள்ளிப்பொறிபறக்குங் கானவிலே—யென்பேதை செல்லத் துணிந்தனளே-மின்போலு—மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்—கானவேன் முட்டைக்குங் காடு" என்னும் பொய்யா மொழிப்புலவர் பாட்டில், வேட்டுக்குமரன் தன்பெயர் முட்டையென்றது இடுகுறியாக்கம்.

(4.) பொன்னன், பூணன், "மலைமகண் மானே மாற்றோர் கூற்றே" என்பன காரணக்குறியாக்கம்.

(5.) நடந்தவனை, நடந்தோனை என்பன, வினையாலணையுங் காரணக்குறி காலங்காட்டின.

மரம் பனை முதலாகிய இடுகுறிப்பெயரும், அவன் அவள் முதலாகிய காரணப்பெயரும், அவ்விலக்கணங்களோடு தோற்றிய பொருள்களுக்கெல்லாந் தொன்று தொட்டு மரபு பற்றி வருவன. முட்டை முதலாகிய இடுகுறிப்பெயரும், பொன்னன் முதலாகிய காரணப்பெயரும், மரபு போலத் தொன்று தொட்டு வருதலின்றி நடுவிலே ஒருவரால் ஆக்கப்பட்டு வருவன (18)

[உயர்திணையாண்பாற்பெயர்.]

**276.** **அவற்றுள்,—**
**கிளையெண் குழூஉமுதற் பல்பொரு டிணைதேம்**
**ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்**
**டிருது மதிநா ளாதிக் காலந்**
**தோள்குழன் மார்புகண் காது முதலுறுப்**
**பளவறி வொப்பு வடிவு நிறங்கதி**
**சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்**
**ஒத லீத லாதிப் பல்வினை**
**இவையடை சுட்டு வினுப்பிற மற்றோ**
**டுற்ற னவ்வீறு நம்பி யாடூஉ**
**விடலை கோவேள் குரிசி றோன்றல்**
**இன்னன வாண்பெய ராகு மென்ப.**

இ-ள். அவற்றுள் - மேற் பெயரே யென்றவற்றுள்—கிளை எண் குழூஉ முதல் பல்பொரு(ளோடு) - சுற்றமும் எண்ணுங் கூட்டமும் முதலாகிய பல்பொருள்களோடு—திணை தேம் ஊர் வான் அகம் புறம் முதல நில(ேனாடு) - ஐந்திணையும் தேயமும் ஊரும் வானும் அகமும் புறமும் முதலியனவாகிய இடங்களோடும்—யாண்டு இருது மதி நாள் ஆதிக் கால(மோடு) - வருடமும் பருவமும் மாதமும் நாண்மீனும் முதலாகிய காலங்களோடும்—தோள் குழல் மார்பு கண் காது முதல் உறுப்(பேோடு) - புயமும் மயிரும் மார்புங்

கண்ணுங் காதும் முதலாகிய அவயவங்களோடும்—அளவு, அறிவு ஒப்பு வடிவு நிறம் கதி சாதி குடி சிறப்பு ஆதிப் பல் குண (மோடு) - அளவும் அறிவும் ஒப்பும் வடிவும் நிறமும் நாற்கதியுஞ் சாதியுங் குடியுஞ் சிறப்பும் முதலாகிய பல குணங்களோடும்—ஓதல் ஈதல் ஆதிப் பல்வினை(யோடு)-ஓதுதலுங் கொடுத்தலும் முதலாகிய பலதொழில்களோடும்—இவை அடை சுட்டு வினாப்பிற மற்றோடு-இவற்றையடைந்த சுட்டும் வினாவும் பிறவும் மற்றுமாகிய நான்கனோடும்—உற்றனவ்வீறு - பொருந்திய னகரமெய்யீற்றுப் பெயர்களும்—நம்பி ஆடூஉ விடலை கோ வேள் குரிசில் தோன்றல்-நம்பி முதலாகச் சொல்லப்பட்ட இப்பெயர்களும்—இன்னன-இவை போல்வனபிறவும்—ஆண்பெயர் ஆகும் என்ப-உயர்திணையாண்பாற் பெயர்களாகும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

### வரலாறு.

(1.) பொருளால் வரு பெயர்களாவன:—

தமன், நமன், நுமன், எமன் என்பன கிளையால் வருபெயர். ஒருவன் என்பது எண்ணால் வருபெயர்.

அவையத்தான், அத்திகோசத்தான் என்பன குழூஉவால் வருபெயர்.

பொருளன், பொன்னன், முடியன் என்பன முதலென்றதனால் வருபெயர்.

(2) இடத்தால் வரு பெயர்களாவன:—

வெற்பன், பொருப்பன் என்பன குறிஞ்சித்திணையால் வருபெயர்.

மறவன், எயினன் என்பன பாலைத்திணையால் வருபெயர்.

இடையன், ஆயன் என்பன முல்லைத்திணையால் வருபெயர்.

ஊரன், மகிழ்நன் என்பன மருதத்திணையால் வருபெயர்.

சேர்ப்பன், துறைவன், என்பன செய்தற்றிணையால் வருபெயர்.

சோழியன், கொங்கன் என்பன தேயத்தால் வருபெயர்.

கருவூரான், மதுரையான் என்பன ஊரால் வருபெயர்.

வானத்தான், அகத்தான், புறத்தான் என்பன வான் முதலிய மூன்றாலும் வருபெயர்.

மண்ணகத்தான், பாதலத்தான் என்பன முதல என்றதனால் வருபெயர்.

(3.) காலத்தால் வரு பெயர்களாவன:—

மூவாட்டையான், பிரபவன் என்பன வருடத்தால் வருபெயர்.

வேனிலான், காரான் என்பன பருவத்தால் வருபெயர்.

தையான், மாசியான் என்பன மாதத்தால் வருபெயர்.

ஆதிரையான், ஓணத்தான் என்பன நாண்மீனால் வருபெயர்.

நெருநலான், காலையான் என்பன ஆதியென்றதனால் வருபெயர்.

(4.) சினையால் வரு பெயர்களாவன:—

திணிதோளன், செங்குஞ்சியன், வரைமார்பன், செங்கண்ணன், குழைக்காதன் என்பன தோண்முதலிய ஐந்துறுப்பாலும் வருபெயர்.

குறுந்தாளன், நெடுங்கையன் என்பன முதலென்றதனால் வருபெயர்.

(5.) குணத்தால் வரு பெயர்களாவன:—

பெரியன், சிறியன் என்பன அளவால் வருபெயர்.

அறிஞன், புலவன் என்பன அறிவால் வருபெயர்.

பொன்னனைப்பான், மணியனையான் என்பன ஒப்பால் வருபெயர்.

கூனன், குறளன் என்பன வடிவால் வருபெயர்.

கரியன், செய்யன் என்பன நிறத்தால் வருபெயர்.

மானுடன், தேவன் என்பன கதியால் வருபெயர்.

அந்தணன், வேளாளன் என்பன சாதியால் வருபெயர்.

சேரன், சோழன், பாண்டியன் என்பன குடியால் வருபெயர்.

ஆசிரியன், படைத்தலைவன் என்பன சிறப்பால் வருபெயர்.

நல்லன், தீயன் என்பன ஆதியென்றதனால் வருபெயர்.

(6.) தொழிலால் வரு பெயர்களாவன.—

ஓதுவான், ஈவான் என்பன ஓதன் முதலாகிய இரண்டாலும் வருபெயர்.

கணக்கன், தச்சன் என்பன ஆதியென்றதனால் வருபெயர்.

(7.) சுட்டால் வருபெயர் முதலானவை:—

அவன், இவன், உவன் என்பன சுட்டிடைச்சொல்லால் வருபெயர்.

எவன், ஏவன், யாவன் என்பன வினாவிடைச்சொல்லால் வருபெயர்.

பிறன், மற்றையான் என்பன பிற மற்று என்பவற்றால் வருபெயர்.

(8.) நம்பி முதலாகிய ஏழுபெயர்களும் உரைக்கிடையிற் காண்க.

இன்னன என்றதனால், வில்லி, வாளி, கிள்ளி, சென்னி, ஏந்தல், செம்மல், ஏனாதி, காவிதி, குடுமி, அண்ணல் என உயர்திணையாண்பாற்பொருள் குறித்து வருவன எல்லாங்கொள்க.

சுட்டு, வினா, பிற, மற்று என்னும் இந்நான்கிடைச்சொல்லையும் பற்றி வரும் பெயர்கள், பொருளாதியாறனுள்ளே, சொல்லுவான் குறிப்பின்படி, ஒன்றில் அடங்கும். (19)

[உயர்திணைப்பெண்பாற் பெயர்.]

**277.** கிளைமுத லாகக் கிளந்த பொருள்களு
ளெவ்வொற் றிகரக் கேற்ற விற்றவுந்

தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

இ - ள். கிளை முதல் ஆகக் கிளந்த பொருள்களுள் - மேலைச் சூத்திரத்துச் சுற்றமுதலாகப் பகுத்துச்சொல்லப்பட்ட அறுவகைப் பொருள்களுள்—எவ்வொற்று இகரக்கு ஏற்ற ஈற்றவும் - ளகரமெய்யும் இகரவுயிரும் பொருந்துதற்கு ஏற்ற அவ்விரண்டீற்றுப் பெயர்களும்—தோழி செவிலி மகடூஉ நங்கை தையலோடு - தோழி முதலாக எடுத்துச் சொல்லப்பட்ட பெயர்களுமாகிய இவற்றுடனே — இன்னன - இவை போல்வன பிறவும்—பெண்பாற் பெயர் - உயர்திணைப் பெண்பாற் பெயர்களாம். எ - று.

வரலாறு.

(1.) பொருளால் வருபெயர்:—

தமள், நமள், நுமள், எமள். எ - ம். ஒருத்தி. எ - ம். அவையத்தாள், அவையத்தி. எ - ம். பொன்னாள், பொன்னி. எ - ம். வரும்.

(2.) இடத்தால் வருபெயர்:—

குறத்தி, எயிற்றி, ஆய்ச்சி, உழத்தி, பரத்தி. எ - ம். மலையாட்டி, சோழிச்சி. எ - ம். கருவூராள், கருவூரி. எ - ம். வானத்தாள், வானத்தி. எ - ம். அகத்தாள், அகத்தி எ - ம். புறத்தாள், புறத்தி. எ - ம். மண்ணகத்தாள் மண்ணகத்தி. எ - ம். வரும்.

(3.) காலத்தால் வருபெயர்:—

மூவாட்டையாள். எ - ம். வேனிலாள். எ - ம். தையாள். எ - ம். ஆதிரையாள். எ - ம். செருநலாள். எ - ம். வரும்.

(4.) சினையால் வருபெயர்:—

திணிதோளாள், திணிதோளி. எ - ம். சுரிகுழலாள், சுரிகுழலி. எ-ம். செடுமார்பாள்; செடுமார்பி. எ - ம். தடங்

கண்ணாள், தடங்கண்ணி. எ-ம். குழைக்காதாள், குழைக்காதி. எ-ம். குறுந்தாளாள், குறுந்தாளி. எ-ம். வரும்.

(5.) குணத்தால் வருபெயர்:—

பெரியள். எ-ம். புலமையள். எ-ம். பொன்னொப்பாள். எ-ம் கூனள், கூனி. எ-ம். கரியள். எ-ம். மானுடத்தி. எ-ம். பார்ப்பனி. எ-ம். படைத்தலைவி. எ-ம். நல்லள். எ-ம். வரும்.

(6.) தொழிலால் வருபெயர்:—

ஓதுவாள். எ-ம். ஈவாள். எ-ம். தச்சிச்சி. எ-ம். வரும்.

(7.) சுட்டால் வருபெயர் முதலானவை:—

அவள், இவள், உவள். எ-ம். எவள், ஏவள், யாவள். எ-ம். பிறள். எ-ம். மற்றையாள். எ-ம். வரும்.

(8.) தோழி முதலிய ஐந்து பெயரும் உரைக்கிடையிற் காண்க.

இன்னன என்றதனால், பேதை, பெதும்பை, இருளை, மடந்தை, மாது, பாங்கி, பெண்டு, பெண்டாட்டி என உயர்திணைப்பெண்பால் குறித்து வருவனவெல்லாங் கொள்க. (20)

[உயர்திணைப்பலர்பாற் பெயர்.]

278. கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவுங்
கள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும்.

இ-ள். கிளந்த கிளை முதல் உற்ற ரவ்வீற்றவும் - முன்னே சொல்லப்பட்ட சுற்றமுதலாகிய அறுவகைப் பொருளையும் பொருந்திய ரகரமெய்யீற்றுப்பெயர்களும்—கள் என் ஈற்றின் ஏற்பவும் - கள்ளென்னும் விகுதியை ஈறாக வுடைய பெயர்களுள் இவ்விடத்துக்குப் பொருந்தி வருவனவும்—பிறவும் - இவை போல்வன பிறவும்—பல்லோ

பெயரின் பகுதி ஆகும் - உயர்திணைப்பலர்பாற் பெயர்களாம். எ - று.

கள் விகுதி அஃறிணைப்பன்மைக்கும் வருதலால், எற்பவுமென்றார்.

உ - ம். தமர், நமர், நுமர், எமர், இருவர், மூவர் எனப் பொருளாதியாறனோடும் ஒட்டுக.

கோக்கள், மனுக்கள், என்றற்றொடக்கத்தன பகுதிப் பொருள் விகுதியீற்றுப்பெயர்கள்.

தமர்கள், நமர்கள் என்றற்றொடக்கத்தன விகுதிமேல் விகுதியீற்றுப்பெயர்கள்.

பிற என்றமையால், மாந்தர், மக்கள், மகார், சிறார், வேளிர் எனப் பலர்பாலைக் குறித்து வருவனவெல்லாங்கொள்க

[அஃறிணையொன்றன்பாற் பெயர்.]

**279.** வினச்சுட் டுடனும் வேறு மாம்பொருள்
ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம்
ஒன்றெனெண் ணின்னன வொன்றன் பெயரே.

இ - ள். வினச் சுட்டு உடனும் - வினவிலுஞ் சுட்டிலும் மறைந்து அவற்றுடனாகியும்—வேறும் ஆம் - வினவவுஞ் சுட்டவும் படாது வேறாகியும் வரும்—பொருள் ஆதி உறு து - பொருளாதியாறனையும் பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும்—சுட்டு அணை ஆய்தம் - சுட்டோடுகூடிய ஆய்தத்தைப் பொருந்திய துவ்விகுதியீற்றுப் பெயரும்—ஒன்று என் எண் - ஒன்றென்னும் எண்ணுகுபெயரும்—இன்னன - இவைபோல்வன பிறவும்—ஒன்றன்பெயர் - அஃறிணை யொருமைப்பாற் பெயராகும். எ - று.

உ - ம். (1.) எது ஏது, யாது. எ-ம். அது, இது, உது. எ-ம். வினவிலுஞ் சுட்டிலும் மறைந்து அவற்றுடனாகிப் பொருளாதியாறையும் பொருந்தி துவ்விகுதி யீற்றுப் பெயர்கள் வரும்.

(2.) குழையது, நிலத்தது, மூலத்தது, கோட்டது, குறியது, ஆடலது என வினாவுஞ் சுட்டவும்படாது வேறாகிப் பொருளாதியாறையும் பொருந்திய துவ் விகுதியீற்றுப் பெயர்கள் வரும்.

(3.) அஃது, இஃது, உஃது எனச் சுட்டோடு கூடிய ஆய்தத்தைப் பொருந்திய துவ்விகுதி யீற்றுப் பெயர்கள் வரும்.

(4.) ஒன்று என எண்ணுப்பெயர் வரும்.

இன்னன என்றமையால், பிறிது, மற்றையது என அஃறிணை ஒருமைப்பொருள் குறித்து வருவனவெல்லாங் கொள்க. (22)

[அஃறிணைப் பலவின்பாற் பெயர்.]

280. முன்ன ரவ்வொடு வருவை யவ்வுஞ்
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும்
ஒன்ற லெண்ணு முள்ள வில்ல
பல்ல சில்ல வுளவில பலசில
இன்னவும் பலவின் பெயரா கும்மே.

இ - ள். முன்னர் அவ்வொடு வரு வை அவ்வும் - முன்னே சொல்லப்பட்ட வினாச்சுட்டுடனும் வேறுமாம் பொருளாதியாறனோடும் ஏற்றபடி வரும் வை விகுதி யீற்றுப்பெயர்களும் அகரவீற்றுப்பெயர்களும்—சுட்டு இறு வவ்வும் - வகரமெய்யீற்றுச் சுட்டுப்பெயர்களும்—கள் இறு மொழியும் - கள்ளென்னும் பகுதிப்பொருள் விகுதியீற்றுப் பெயர்களும்—ஒன்று அல் எண்ணும் - இரண்டு முதலாகிய எண்ணுப்பெயர்களும்—உள்ள இல்ல பல்ல சில்ல உள இல பல சில - உள்ள வென்பது முதலாகிய குறிப்புவினையாலணைந்த எட்டும் பெயர்களும்—இன்னவும் - இவை போல்வன பிறவும்—பலவின்பெயர் ஆகும் - அஃறிணைப்பன்மைப் பாற் பெயர்களாகும். எ - று.

வ - று. (1.) எவை, ஏவை, யாவை. எ-ம். அவை, இவை, உவை எ-ம். நெடியவை, கரியவை. எ-ம். வைவிகுதிப்பெயர்கள் வரும்.

(2.) பொருள, பொருளன; அகத்த, அகத்தன; மூலத்த, மூலத்தன; கோட்ட, கோட்டன; கரிய, கரியன, ஓதுவ, ஓதுவன என அன்சாரியை பெற்றும் பெறாதும் அகரவிகுதிப் பெயர்கள் வரும்.

(3.) அவ், இவ், உவ் என வகர மெய்யீற்றுச் சுட்டுப் பெயர்கள் வரும்.

(4.) யானைகள், குதிரைகள் எனக் கள்விகுதிப் பெயர்கள் வரும்.

(5.) இரண்டு, மூன்று, பத்து, நூறு என எண்ணுப்பெயர்கள் வரும்.

(6.) உள்ள முதலாகிய எட்டும் உரைக்கிடையிற் காண்க. இன்னவும் என்றமையால் யா, பிற, மற்றைய என அஃறிணைப்பன்மைப்பொருள் குறித்து வருவனவெல்லாங் கொள்க.

இவ்வைம்பாற்பெயர்களுள், ஆண்பாற்பெயர்க்கு "னவ்வீறு" எனவே, அன், ஆன். மன், மான், ன் இவ்வைந்தும், பெண்பாற்பெயர்க்கு "ளவ்வொற்று" எனவே, அள், ஆள், ள் இம்மூன்றும் பலர்பாற்பெயர்க்கு "ரவ்வீற்ற" எனவே அர், ஆர், மார், ர் இந் நான்கும், அடங்குதலறிக. (280)

[அஃறிணையிருபாற் பொதுப்பெயர்]

## 281. பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.

இ - ள். அஃறிணைப பால்பகாப் பெயர்கள் - அஃறிணைப் பெயர்களுள் இப்படிப் பால் பகுக்கப்படாத பெயர்களனைத்தும் — பாற்பொதுமைய - அத்திணையிருபாற்கும் பொதுப்பெயர்களாம். எ - று.

பால்பகாவஃறிணைப் பெயரெனினும் அஃறிணை யியற்பெயரெனினும் பொருந்தும்.

வ - று. பறவை வந்தது, பறவை வந்தன; மரம் வளர்ந்தது, மரம் வளர்ந்தன என வரும். இவை, பறவை, அலரி எனப் பகுபதமும், மரம், பனை எனப் பகாப்பதமுமாக வரும். (24)

[இருதிணைப் பொதுப்பெயர்.]

**282.** **முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்குஞ்
சினைமுதற் பெயரொரு நான்குமுறை யிரண்டுந்
தன்மை நான்கு முன்னிலை யைந்தும்
எல்லாந் தாந்தா னின்னன பொதுப்பெயர்.**

இ - ள். முதற்பெயர் நான்கும் - முதற்பெயராகிய நான்கு பெயரும்—சினைப்பெயர் நான்கும் - சினைப்பெயராகிய நான்குபெயரும்—சினைமுதற்பெயர் ஒருநான்கும்- சினைமுதற்பெயராகிய நான்குபெயரும்—முறை இரண்டும் - முறைப்பெயராகிய இரண்டு பெயரும்—தன்மைப் (பெயர்) நான்கும் - தன்மைப்பெயராகிய நான்குபெயரும்—முன்னிலைப் (பெயர்) ஐந்தும் - முன்னிலைப்பெயராகிய ஐந்துபெயரும்—எல்லாம் தாம் தான் - எல்லாம் தாம் தான் என்னு மூன்று பெயரும்—இன்னன - இவைபோல்வன பிறவும்—பொதுப்பெயர் - இருதிணைக்கும பொதுப்பெயர்களாம். எ - று.

இன்னன என்றமையால், சூரியனுதித்தான், சூரியனுதித்தது; சந்திரனுதித்தான், சந்திரனுதித்தது என ஒருபொருளையே உயர்திணைப் பொருளாக்கியும் அஃறிணைப்பொருளாக்கியுங் கூறும் பொதுப்பெயர் முதலானவையும், ஊமைவந்தான், ஊமை வந்தாள், என உயர்திணையிருபாலையும் உணர்த்தும் பொதுப்பெயர் முதலானவையும் தன்மை முன்னிலை வினையாலணையும் பெயர்களும் பிறவுங்கொள்க. (25)

[முதற்பெயர் முதலிய நான்கையும் வகுத்தல்.]

**283.** **ஆண்மை பெண்மை யொருமை பன்மையின்
ஆமந் நான்மைக ளாண்பெண் முறைப்பெயர்.**

இ - ள். ஆண்மை பெண்மை ஒருமை பன்மையின் - ஆண்மை முதலாகிய இந்நான்குபாலுங் காரணமாக—அந்நான்மைகள் ஆம் - அம் முதற்பெயர் சினைப்பெயர் சினைமுதற்பெயர் என்னுமூன்றும் ஒவ்வொன்று நந்நான்காகும்—ஆண் பெண் முறைப்பெயர் - ஆண்மை பெண்மை என்னும் இருபாலுங் காரணமாக முறைப்பெயர் இரண்டாகும். எ-று.

வ - று. (1.) சாத்தன் ஆண்மை முதற்பெயர். சாத்தி பெண்மை முதற்பெயர். கோதை ஒருமைமுதற்பெயர். கோதைகள் பன்மை முதற்பெயர். ஆக 4.

(2.) முடவன் ஆண்மைச் சினைப்பெயர். முடத்தி பெண்மைச் சினைப்பெயர். செவியிலி ஒருமைச் சினைப்பெயர். செவியிலிகள் பன்மைச் சினைப்பெயர். ஆக 4.

(3.) முடக்கொற்றன் ஆண்மைச் சினைமுதற்பெயர். முடக்கொற்றி பெண்மைச் சினைமுதற்பெயர். கொடும்புறமருதி ஒருமைச சினைமுதற்பெயர். கொடும்புறமருதிகள் பன்மைச் சினைமுதற்பெயர். ஆக 4.

(4.) தந்தை ஆண்மை முறைப்பெயர். தாய் பெண்மை முறைப்பெயர். ஆக 2. (26)

[திணைப்பொதுப்பெயர்பாற்பொதுவாதல்.]

**284.** அவற்றுள்,—

ஒன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்.

இ - ள். அவற்றுள் - முதற்பெயர் முதலாகச் சொல்லப்படும் இருபத்தாறும் பிறவுமாகிய பொதுப்பெயர்களுள்—ஒன்றே இருதிணைத் தன்பால் ஏற்கும்-ஒவ்வொன்றே இருதிணையிலுந் தன்றன்பால்களை ஏற்று வரும். எ - று.

எனவே, ஆண்மைப்பொதுப்பெயர் உயர்திணையாண்பாலையும் அஃறிணையாண்பாலையும், பெண்மைப்பொதுப்பெயர் உயர்திணைப் பெண்பாலையும் அஃறிணைப்பெண்பாலையும், ஒருமைப் பொதுப்பெயர் உயர்திணையாணொருமை பெண்ணொருமைகளை

யும் அஃறிணை யொருமையையும், பன்மைப் பொதுப்பெயர் உயர்திணைப் பன்மையையும் அஃறிணைப்பன்மையையும் ஏற்கு மென்பதாயிற்று.

வரலாறு.

(1.) முதற்பெயர் நான்கு:—

சாத்தனிவன், சாத்தனிவ்வெருது என ஆண்மை முதற் பெயர் இருதிணையாண்பாற்கும் பொதுவாயிற்று.

சாத்தியிவள், சாத்தியிப்பசு எனப் பெண்மை முதற் பெயர் இருதிணைப் பெண்பாற்கும் பொதுவாயிற்று.

கோதையிவன், கோதையிவள், கோதையிது என ஒருமை முதற்பெயர் இருதிணையொருமை மூன்றற்கும் பொது வாயிற்று.

கோதைகளிவர், கோதைகளிவை எனப் பன்மை முதற் பெயர் இருதிணைப்பன்மைக்கும் பொதுவாயிற்று.

(2.) சினைப்பெயர் நான்கு:—

முடவனிவன், முடவனிவ்வெருது என ஆண்மைச் சினைப் பெயர் இருதிணையாண்பாற்கும் பொதுவாயிற்று.

முடத்தியிவள், முடத்தியிப்பசு எனப் பெண்மைச் சினைப் பெயர் இருதிணைப்பெண்பாற்கும் பொதுவாயிற்று.

செவியிலியிவன், செவியிலியிவள், செவியிலியிது என ஒருமைச் சினைப்பெயர் இருதிணையொருமை மூன்றற்கும் பொதுவாயிற்று.

செவியிலிகளிவர், செவியிலிகளிவை எனப் பன்மைச் சினைப்பெயர் இருதிணைப்பன்மைக்கும்பொதுவாயிற்று.

(3.) சினைமுதற்பெயர் நான்கு:—

முடக்கொற்றனிவன், முடக்கொற்றனிவ்வெருது என ஆண்மைச் சினைமுதற்பெயர் இருதிணை யாண்பாற்கும் பொதுவாயிற்று.

முடக்கொற்றியிவள், முடக்கொற்றியிப்பசு எனப் பெண் மைச் சினைமுதற்பெயர் இருதிணைப்பெண்பாற்கும் பொதுவாயிற்று.

கொடும்புறமருதியிவன், கொடும்புறமருதியிவள், கொடும்புறமருதியிது என ஒருமைச் சினைமுதற்பெயர் இருதிணையொருமை மூன்றற்கும் பொதுவாயிற்று.

கொடும்புறமருதிகளிவர், கொடும்புறமருதிகளிவை எனப் பன்மைச் சினைமுதற்பெயர் இருதிணைப் பன்மைக்கும் பொதுவாயிற்று.

(4.) முறைப்பெயரிரண்டு:—

தந்தையிவன், தந்தையிவ்வெருது என ஆண்மை முறைப்பெயர் இருதிணையாண்பாற்கும் பொதுவாயிற்று.

தாயிவள், தாயிப்பசு எனப் பெண்மை முறைப்பெயர் இருதிணைப்பெண்பாற்கும் பொதுவாயிற்று.

(5.) தன்மைப்பெயர் நான்கு:—

யானம்பி, யானங்கை, யான்பூதம் என யானென்னுந் தன்மைப்பெயர் இருதிணை யொருமை மூன்றற்கும் பொதுவாயிற்று. நானென்பதனோடும் இவ்வாறொட்டுக.

யாமக்கள், யாம்பூதங்கள் என யாமென்னுந் தன்மைப்பெயர் இருதிணைப்பன்மைக்கும் பொதுவாயிற்று. நாமென்பதனோடும் இவ்வாறொட்டுக.

(6.) முன்னிலைப்பெயர் ஐந்து:—

நீநம்பி, நீநங்கை, நீபூதம் என நீயென்னு முன்னிலைப்பெயர் இருதிணையொருமை மூன்றற்கும் பொதுவாயிற்று.

நீர்மக்கள், நீர்பூதங்கள் என நீரென்னு முன்னிலைப்பெயர் இருதிணைப் பன்மைக்கும் பொதுவாயிற்று. எல்லீர், நீயிர், நீவிர் என்பவற்றோடும் இவ்வாறொட்டுக.

(7.) எல்லாம் தாம் தான்:—

அவரெல்லாம், அவையெல்லாம் என எல்லாமென்பது இருதிணைப்பன்மைக்கும் பொதுவாயிற்று.

அவர்தாம், அவைதாம் எனத் தாமென்பது இருதிணைப் பன்மைக்கும் பொதுவாயிற்று.

அவன்றான், அவடான், அதுதான் எனத் தானென்பது இருதிணையொருமை மூன்றற்கும் பொதுவாயிற்று. (27)

[தன்மை முன்னிலை படர்க்கைப் பெயர்கள்.]

**285.** **தன்மை யானுன் யாநா முன்னிலை**
**எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ**
**அல்லன படர்க்கை யெல்லா மெனல்பொது.**

**இ - ள்.** தன்மை யான் நான் யாம் நாம் - தன்மைப் பெயர் நான்காவன: யான் நான் யாம் நாம் என்பனவாம்—முன்னிலை எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ - முன்னிலைப்பெயரைந்தாவன: எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ என்பனவாம்—அல்லன படர்க்கை - இவ்வொன்பது மல்லாத பெயர்களெல்லாம் படர்க்கையிடத்திற் குரியனவாம்—எல்லாம் எனல் பொது - அவற்றுள் எல்லாமென்னும் பெயரொன்றும் மூவிடத்திற்கு முரித்தாம் எ - று.

எல்லாமென்பது மூவிடத்தும் வருமாறு:—யாமெல்லாம் நீரெல்லாம், அவரெல்லாம், அவையெல்லாம் என வரும். (28)

[தொழிற் பெயர்க்கும் வினையாலணையும் பெயர்க்கும் இடம் வகுத்தல்.]

**286.** **வினையின் பெயரே படர்க்கை வினையா**
**லணையும் பெயரே யாண்டு மாகும்.**

**இ - ள்** வினையின் பெயர் படர்க்கையே - வினைப் பெயர்கள் படர்க்கையிடத்திற்கே உரியவாகும்—வினையாலணையும் பெயர் யாண்டும் ஆகும் - வினையாலணையும் பெயர்கள் தனித்தனி மூவிடத்திற்கு முரியவாகும். எ - று.

வினைப்பெயரெனினுந் தொழிற்பெயரெனினும் ஒக்கும்.

**வ - று.** யானுணல், நீயுணல், அவனுணல். எ - ம். உண்டேனை, உண்டாயை, உண்டானை. எ - ம். வரும்.

வினையாலணையும் பெயரே யாண்டுமாகும் என்றது வினையாலணையும் பெயருக்கு "அல்லன படர்க்கை" என்றதனால் எய்தியது விலக்கி இடம் வகுத்தது; வினையின் பெயரே படர்க்கை என்றது சிலவினைப்பெயருக்கு "அல்லன படர்க்கை" என்றதனால் எய்திய இடம் இங்கே யாண்டுமாகும் என்பதனால் இகந்துபடாமற் காத்தது. இங்கே வினையின்பெயரென்றது எல்லா வினைப்பெயரையுமன்று. யானுணல், நீயுணல், அவனுணல் என், புழி வரும் வினைப்பெயர், யானுண்டேன், நீயுண்டாய், அவனுண்டான் என்புழி வரும் முற்றுவினைபோல, யான், நீ அவன் என்னு மூவிடப்பெயர்களுக்குப் பயனிலையாகி அவ்வப்பெயரோடும் ஒன்றுபட்டு நிற்றலினால், அவ்வவ்விடத்திற்குரியவாம் எனக் கொள்ளக்கிடக்கும்; ஆதலால் இவ்வினைப்பெயருக்கு எய்திய இடம் இகந்துபடும் என்பதுபற்றி, அப்படியிகந்துபடாமற் காக்க வேண்டிற்று. எனதுணல், நினதுணல், அவனதுணல் என்றும், உணல் என்றும், வேறுபட்டு நிற்கும் வினைப்பெயர்கட்கு எய்திய விடம் இகந்துபடுதலில்லையென அறிக. (29)

[பன்னிரண்டு பொதுப்பெயர்]

**287. தான்யா னுனீ யொருமை பன்மைதாம்**
**யாநா மெலாமெலீர் நீயிர்நீர் நீவிர்.**

இ - ள். தான் யான் நான் நீ ஒருமை - தான் யான் நான் நீ என்னு நான்கும் இருதிணைமுக்கூற் றொருமைப் பெயர்களாம்—தாம் யாம் நாம் எலாம் எலீர் நீயிர் நீர் நீவிர் பன்மை — தாம் யாம் நாம் எல்லாம் எல்லீர் நீயிர் நீர் நீவிர் என்னு மெட்டும் இருதிணையிருகூற்றுப் பன்மைப் பெயர்களாம். எ - று.

இருதிணை முக்கூற்றொருமையென்றது உயர்திணையாணொருமை உயர்திணைப்பெண்ணொருமை அஃறிணையொருமைகளை. இருதிணையிருகூற்றுப் பன்மையென்றது உயர்திணைப்பன்மை அஃறிணைப்பன்மைகளை. (30)

[எண்ணுல் வரும் உயர்திணைப்பெயருக்குப் புறனடை.]

**288.** ஒருவ னொருத்திப் பெயர்மே லெண்ணில.

இ - ள். ஒருவன் ஒருத்தி - ஒன்றென்னு மெண்ணுல் ஒருவன் ஒருத்தி என வருவனவன்றி—மேல் எண் பெயர் இல - இவற்றின்மேல் இரண்டு முதலாகிய எண்களால் இவ் வாண்பாற் பெயரும் பெண்பாற்பெயரும் வருவனவில்லவாம. எ - று. (31)

**289.** ஒருவ ரென்ப துயரிரு பாற்ருய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.

இ - ள். ஒருவர் என்பது உயர் இரு பாற்று ஆய் - ஒருவரென வழங்குஞ் சொல் உயர்திணை யாண்பெண் ணிவ் விருபாற்கும் பொதுவாய்—பன்மை வினை கொளும் பாங்கிற்று என்ப - அத்திணைப்பன்மை வாய்பாட்டு வினையைக் கொண்டு முடியும் பாங்கினை யுடைத்தாகும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். ஆடவருளொருவரறத்தின்வழி நிற்பார்; பெண்டிருளொருவர் கொழுநன் வழி நிற்பார் என வரும். இங்கே ஒருவர் நிற்பான் நிற்பாள் எனப் பகுதிக் கேற்ப ஒருமைச் சொல்லைக் கொள்ளாது, ஒருவர் நிற்பார் என விகுதிக் கேற்பப் பன்மைச் சொல்லையே கொண்டு முடிதல் காண்க.

இனி உரையிற்கோடலென்னும் உத்தியால், உயர்த்தற் பொருட்டு ஆரென்னும் இடைச்சொல்லை ஈற்றிற் பெற்ற இரு திணைப் பொதுப்பெயரும், பால்பகாவஃறிணைப்பெயரும், சிறு பான்மை உயர்திணைப் பெயரும் பன்மைச் சொல்லோடு முடியும்.

உ - ம். (1.) சாத்தனார் வந்தார், முடவனார் வந்தார். முடக்கொற்றனார் வந்தார், தந்தையார் வந்தார் என இருதிணைப் பொதுப்பெயர்கள் பன்மைச் சொல்லோடு முடிந்தன.

(2.) நரியார் வந்தார் எனப் பால்பகாவஃறிணைப் பொதுப் பெயர் பன்மைச் சொல்லோடு முடிந்தது.

(3.) நம்பியார் வந்தார், நங்கையார் வந்தார், இறைவனார் வந்தார், அகத்தியனார் வந்தார், தொல்காப்பியனார் வந்தார் என உயர்திணைப் பெயர்கள் பன்மைச் சொல்லோடு முடிந்தன. (32)

[ஆகுபெயர்.]

**290.** **பொருண்முத லாறோ டளவைசொற் றானி**
**கருவி காரியங் கருத்த னாதியுள்**
**ஒன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்**
**தொன்முறை யுரைப்பன வாகு பெயரே.**

**இ - ள்.** பொருள் முதல் ஆறோடு - பொருளிடங் காலஞ் சினைகுணந்தொழிலென்னும் ஆறுடனே—அளவை- இவற்றின் பகுதியவாகிய நால்வகையளவையும்—சொல் - சொல்லும்—தானி - தானியும்—கருவி - காரணமும்—காரி யம் - காரியமும்—கருத்தன் - வினைமுதலும்—ஆதியுள் - ஆதியாகவரும் பொருள்களுள்—ஒன்றன் பெயரான் அதற்கு இயை பிறிதை - ஒருபொருளினது இயற்பெயரால் அப்பொருளினுக்கு இயைந்த பிறிதொருபொருளை— தொன்முறை உரைப்பன ஆகுபெயர் - தொன்று தொட்டு வருமுறையே சொல்லப்பட்டு வருவன ஆகுபெயர்களாம். எ - று.

**வரலாறு.**

(1.) "தாமரை புரையுங் காமர் சேவடி" என்புழித் தாமரை யென்னு முதற்பொருளின் பெயர் அதன் சினைப்பொரு ளாகிய மலருக்காதலாற் பொருளாகுபெயர்.

(2.) "அகனமர்ந்து செய்யா ளுறையும்" என்புழி அகமென் னும் உள்ளிடப்பெயர் அங்கிருக்கின்ற மனசிற்காதலால் இடவாகுபெயர்.

(3.) காரறுத்தது என்புழிக் காரென்னும் மழைக்காலப்பெயர் அக்காலத்துவிளையும் பயிருக்காதலாற் காலவாகுபெயர்.

(4.) வெற்றிலை நட்டான் என்புழி வெற்றிலை என்னுஞ் சினைப் பெயர் அதன்முதலாகிய கொடிக்காதலாற் சினையாகு பெயர்.

(5.) நீலஞ்சூடினாள் என்புழி நீலமென்னும் நிறக்குணப்பெயர் அதனையுடைய குவளை மலருக்காதலாற் குணவாகுபெயர்.

(6.) வற்றலோடுண்டான் என்புழி வற்றலென்னுந் தொழிற் பெயர் அதனைப் பொருந்திய உணவிற்காதலாற் றொழி லாகுபெயர்.

(7.) காலாலே நடந்தான் என்புழிக் காலென்னும் எண்ணலள வைப் பெயர் அவ்வளவைக்கொண்ட உறுப்பிற்காதலால் எண்ணலளவை யாகுபெயர்.

இரண்டுவீசை தந்தான் என்புழி வீசையென்னும் எடுத்த லளவைப் பெயர் அவ்வளவைக்கொண்ட பொருட்காத லால் எடுத்தலளவை யாகுபெயர்.

நாழியுடைந்தது என்புழி நாழியென்னும் முகத்தலள வைப் பெயர் அவ்வளவு கருவிக்காதலான் முகத்தலள வையாகுபெயர்.

கிழைத்தடிவிளைந்தது என்புழித் தடியென்னும் நீட்ட லளவைப்பெயர் அதனால் அளக்கப்பட்ட கழனிக்காத லால் நீட்டலளவையாகு பெயர்.

(8.) இந்நூற்குரை செய்தான் என்புழி உரையென்னுஞ்சொல் லின்பெயர் அதன்பொருளுக்காதலாற் சொல்லாகுபெயர்.

(9.) விளக்கு முரிந்தது என்புழி விளக்கென்னுந் தானியின் பெயர் அதற்குத் தானமாகிய தண்டிற்காதலாற் றானி யாகுபெயர். [விளக்கு-விளக்குமொளியையுடைய பிழம்பு. தானி - தானத்தையுடையது. தானம் - இடம்.]

(10.) திருவாசகம் என்புழி அடையடுத்த வாசகமென்னு முதற் கருவியின் பெயர் அதன்காரியமாகிய ஒருநூலிற்காதலாற் கருவியாகுபெயர்.

(11.) இந்நூலலங்காரம் என்புழி அலங்காரமென்னும் காரியத்தின்பெயர் அதனை யுணர்த்துதற்குக் கருவியாகிய நூலிற்காதலாற் காரியவாகுபெயர்.

(12.) இந்நூறிருவள்ளுவர் என்புழித் திருவள்ளுவரென்னுங் கருத்தாவின் பெயர் அவராற் செய்யப்பட்ட நூலிற்காதலாற் கருத்தாவாகுபெயர்.

ஆதியென்றதனால், காளைவந்தான், பாவைவந்தாள் எனவரும் உவமையாகுபெயர் முதலானவையும், தேவர் முதலியோர் பெயரை மக்களுக்கு இட்டு வழங்குவனவுங் கொள்க.

இன்னும் இவ்வாகுபெயர், விடாதவாகுபெயர், விட்டவாகுபெயர். எ-ம். இருமடியாகுபெயர், மும்மடியாகுபெயர், நான்மடியாகுபெயர். எ-ம். அடையடுத்தவாகுபெயர். எ-ம். இருபெயரொட்டாகுபெயர். எ-ம். பெயர் பெற்று வழங்கும்.

வ - று. (1.) கடுத்தின்றான், புளிதின்றான் என்புழிக், கடுவும் புளியுஞ், சுவையாகிய தத்தம் பொருளை விடாது நின்று தம்பொருளின் வேறல்லாத காய் கனியென்னும் பொருளை உணர்த்தலால், விடாதவாகுபெயர். அவ்வூர் வந்தது என்புழி, ஊரென்பது, இடமாகிய தன் பொருளைவிட்டுத் தன்னிடத்துள்ள மனிதரை யுணர்த்தலால் விட்டவாகுபெயர்.

(2.) புளி தின்றான் என்புழிப், புளியென்னுஞ் சுவைப் பெயர் அதனையுடைய பழத்திற்காதலால் ஆகுபெயர். புளிமுளைத்தது என்புழிப், புளியென்பது, சுவைப் பெயர் பழத்திற்காய், அப் பழத்தின்பெயர் மரத்திற்காதலால், இருமடியாகுபெயர். கார்நிகர் வண்கை என்புழிக், காரென்னும் நிறப்பெயர் அதனையுடைய மேகத்திற்காதலால் ஆகுபெயர். கார் வந்தது என்புழிக், காரென்பது, நிறப்பெயர் மேகத்திற்காய், மேகத்தின்பெயர் அது பெய்யும்பருவத்திற்காதலால், இருமடியாகுபெயர். காரறுத்தது என்புழிக், காரென்பது, நிறப்பெயர் மேகத்திற்காய், மேகத்

தின்பெயர் பருவத்திற்காய், அப்பருவத்தின் பெயர் அதில் விளையும்பயிருக்காதலால், மும்மடியாகுபெயர். நான்மடியாகுபெயர் வந்தவழிக் கண்டுகொள்க.

(3.) வெற்றிலை நட்டான். மருக்கொழுந்து நட்டான், அறுபதமுமாலும் என்புழி, இலை, கொழுந்து, பதம் என்னுஞ் சினைப்பெயர்கள், முறையே வெறுமை, மரு, ஆறு என்னும் அடையடுத்து, முதற்பொருள்களுக்காதலால், அடையடுத்தவாகுபெயர்.

(4) வகரக்கிளவி, மக்கட்சுட்டு என்பன, ஒருபொருட்கு இருபெயரொட்டி நிற்க, அவற்றுள் ஒருபெயர் ஆகுபெயராக நிற்றலால், இருபெயரொட்டாகுபெயர். வகரக்கிளவி யென்பதிற் கிளவியென்பது சொல்லையுணர்த்தும்போது இயற்பெயர்; சொற்குக் கருவியாகிய எழுத்தை யுணர்த்தும்போது ஆகுபெயர். வகரக்கிளவி வகரமாகிய எழுத்து எனப்பொருள்படும். மக்கட்சுட்டென்பது சுட்டென்பது நன்குமதிப்பை யுணர்த்தும்போது இயற்பெயர்; நன்குமதிக்கப்படுதலையுடைய பொருளையுணர்த்தும்போது ஆகுபெயர். மக்கட்சுட்டு மக்களாகிய நன்குமதிக்கப்படுபொருள் எனப் பொருள்படும்.

வெற்றிலை முதலியனவற்றைப் பொற்றொடி முதலியன போல அன்மொழித்தொகைப் பெயரென்று கொள்ளலாகாதோ எனின்;—அன்மொழித்தொகைப்பெயர், செய்யுள் செய்யும் புலவன் ஒருவரை வியப்புமுதலிய காரணத்தினாலே தன்கூற்றாக வேனும் பிறர் கூற்றாகவேனும் பாடுமிடத்து ஆங்காங்கே வருவதன்றி, ஆகுபெயர்போல நியதிப்பெயராய் வருவதன்று; ஆதலால், ஆகுபெயரும் அன்மொழித்தொகையும் ஒன்றெனக் கொள்ளலாகாது. அங்ஙனமாயினும், ஆகுபெயரும் அன்மொழித்தொகைப் பெயரும் தம் பொருளுணர்த்தாது பிறிதுபொருளுணர்த்தலால் ஒக்குமாதலின், அவை தம்முள் வேற்றுமையாதோ எனின்:—ஆதபெயர் ஒன்றன்பெயரால் அதனோடியைபு

பற்றிய பிறிதொன்றைபுணர்த்தி ஒருமொழியிடத்து வருவதாம்; அன்மொழித்தொகை இயைபுவேண்டாது இருமொழியுந்தொக்க தொகையாற்றலினாலே பிறிதுபொருளுணர்த்தி இருமொழியிடத்துவருவதாம்; இவை தம்முள் வேற்றுமையென்க. இருபெயரொட்டாகுபெயர் இருமொழியிடத்து வந்ததன்றோ எனின்:—வகரக்கிளவி, மக்கட்சுட்டு என்னும் இருபெயரொட்டாகுபெயர்களுள் வகரமும் மக்களுமாகிய அடைமொழிகள், கிளவி, சுட்டு என்னும் இயற்பெயர்ப்பொருளை விசேடித்து நில்லாது, எழுத்தும் பொருளுமாகிய ஆகுபெயர்ப்பொருளை விசேடித்து நிற்கக், கிளவி, சுட்டென்பனவே ஆகுபெயர்ப்பொருளை புணர்த்த, இருபெயரும் ஒட்டிநிற்கும்; ஆதலால், இருபெயரொட்டாகுபெயர் இருமொழியிடத்து வந்ததன்றென்க. இனிப் பொற்றொடி என்னும் அன்மொழித்தொகையிலே, பொன்னென்னும் அடைமொழி, அப்படி அன்மொழித்தொகைப் பொருளாகிய பெண்ணை விசேடித்து நில்லாது, தொடியையே விசேடித்து நிற்க, அவ்விருமொழியுந் தொக்க தொகையாற்றலினாலே அன்மொழித்தொகைப் பொருளையுணர்த்துதலும் அறிக. இருகருத்தேபற்றி மக்கட்சுட்டு முதலியவற்றைப் பின்மொழியாகு பெயரென்பாருமுளர்.

**பரீக்ஷை வினாக்கள்:**—18. பெயர்ச்சொல்லாவதியாது? இடுகுறி மரபாவன யாவை? காரணக்குறி மரபாவன யாவை? இடுகுறி யாக்கமாவன யாவை? காரணக்குறி யாக்கமாவன யாவை? 19. திணைபாலிடங்களுள் ஒவ்வொன்றற்கேயுரியவாய் வரும் என்ற பெயர்களுள், உயர்திணையாண்பாற்குரிய பெயர்கள் யாவை? சுட்டு, வினா, பிற, மற்று என்னும் இந்நான்கிடைச் சொற்களையும்பற்றி வரும் பெயர்கள் பொருளாதியாறனுள் அடங்காவோ? 20. உயர்திணைப் பெண்பாற்குரிய பெயர்கள் யாவை? 21. உயர்திணைப் பலர்பாற்குரிய பெயர்கள் யாவை? 22. அஃறிணையொன்றன்பாற்குரிய பெயர்கள் யாவை? 23. அஃறிணைப்பலவின்பாற்குரிய பெயர்கள் யாவை? ஐம்பாற் பெயர்களுள் ஆண்பாற்பெயருக்கு னவ்வீறு என்றதனால் எவ் விகுதிகள் அடங்கும்? பெண்பாற் பெயருக்கு ளவ்வொற்று

என்றதனால் எவ்விகுதிகள் அடங்கும்? பலர்பாற்பெயருக்கு ரவ்வீறு என்றதனால் எவ்விகுதிகள் அடங்கும்? 24. திணைபா லிடங்களுட் பலவற்றிற்குப் பொதுவாய் வரும் என்ற பெயர்க ளுள், அஃறிணையிற் பாற்பொதுவாய் வரும்பெயர்கள் யாவை? 25. இருதிணைக்கும் பொதுவாய்வரும் பெயர்கள் யாவை? சூரியன் சந்திரன் என்றாற்போல வருந் தெய்வப்பெயர்கள் அஃறிணைச் சொல்லைக்கொண்டு முடிதலுமுண்டோ? 26. முதற் பெயர் நான்காவன எவை? சினைப்பெயர் நான்காவன எவை? சினைமுதற்பெயர் நான்காவன எவை? முறைப்பெயரிரண்டா வன எவை? 27. திணைப்பொதுவாய்நின்ற பெயர்கள் எப்படிப் பாற்பொதுவாய் நிற்கும்? 28 தன்மைப்பெயர் நான்காவன எவை? முன்னிலைப்பெயர் ஐந்தாவன எவை? படர்க்கைப் பெயர்கள் எவை? மூவிடத்திற்கும் பொதுவாய் வரும் பெயர் எது? 29. வினையாலணையும் பெயர்கள் எவ்விடத்திற்குரியன வாம்? மூவிடத்தெழுவாய்கட்குப் பயனிலையாய் வருந்தொழிற் பெயர் அவ்வவ்விடத்திற்கே உரியவாமோ? 30. தான் முதலா கிய பன்னிரண்டு பொதுப்பெயர்களுள்ளும், இருதிணை முக் கூற்றொருமைப்பெயர்கள் எவை? இருதிணையிருகூற்றுப் பன் மைப்பெயர்கள் எவை? 31. உயர்திணையில் ஆண்பாற்பெயரும் பெண்பாற்பெயரும் எவ்வெண்ணால் வரும்? எவ்வெண்ணால் வாரா? 32. உயர்திணையிற் பாற்பொதுவாய் வரும் பெயர் யாது? ஒருவரென்னும் பாற்பொதுப்பெயர் ஒருமைச்சொற் கொண்டு முடியுமோ பன்மைச்சொற்கொண்டு முடியுமோ? ஒருமைப்பெயர் உயர்த்தற்பொருட்டு எதனைப் பெற்று வரும்? உயர்த்தற்பொருட்டு ஆரென்னும் இடைச்சொல்லை யீற்றிற் பெற்றுவரும் பெயர்கள் ஒருமைச் சொல்லோடு முடியுமோ பன்மைச்சொல்லோடு முடியுமோ? 33. ஆகுபெயராவன எவை? அவ்வாகுபெயர் எத்தனை வகைப்படும்? ஆகுபெயர்கள் இன் னும் எவ்வெவ்வகையிற் பெயர்பெற்று வழங்கும்? விடாதவாகு பெயராவதியாது? விட்டவாகுபெயராவதியாது? இருமடியாகு பெயராவதியாது? மும்மடியாகுபெயராவதியாது? அடை யடுத்தவாகுபெயராவதியாது? இருபெயரொட்டாகு பெயரா வதியாது? அன்மொழித்தொகைப் பெயருக்கும் அடையடுத்த

வாகுபெயருக்கும் வேறுபாடியாதோ? இருபெயரொட்டாகு பெயருக்கும் அன்மொழித்தொகைப் பெயருக்கும் வேறுபாடியாதோ?

---

## வேற்றுமை

[வேற்றுமை இனைய என்பதும் இத்துணைய என்பதும்.]

**291.** ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறாய்ப் பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை.

**இ - ள்.** ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறு ஆய் தம்மை யேற்றுக்கொள்ளுதற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும் இறுதியாய்—பொருள் வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே - அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவனவாகிய வேற்றுமைகள் எட்டேயாகும். எ - று.

தன்னையேற்ற பெயர்ப்பொருளுக்கு வேற்றுமையென்னும் காரியத்தைச் செய்யுங் கருத்தாவாகிய உருபை வேற்றுமையென்றது காரியவாகுபெயர். வேற்றுமையென்னும் பண்புப்பெயர் பண்புக்காகாமையாற் பண்பாகுபெயரென்றுமாயிற்று. (34)

[வேற்றுமையின் பெயரு முறையும்.]

**292.** பெயரே ஐ ஆல் கு இன் அது கண்
விளியென் றாகு மவற்றின் பெயர் முறை.

**இ - ள்.** அவற்றின் பெயர் முறை - முன்னே எட்டு வேற்றுமை யெனப்பட்டவைகளினுடைய பெயர்களுங் கிடக்கை முறையுமாவன—பெயர் ஐ ஆல் கு இன் அது கண் விளி என்று ஆகும் - பெயரும் ஐயும் ஆலுங் குவ்வும் இன்னும் அதுவுங் கண்ணும் விளியும் என்றிப்படிச் சொல்லப்பட்டவையாகும். எ - று. (35)

[எழுவாயுருபு மற்றையுருபுகளையேற்றல்.]

**293.** ஆற னுருபு மேற்குமவ் வுருபே.

இ - ள். அவ்வுருபே - பெயராய் நிற்கும் அவ் வெழுவாயுருபே—ஆறனுருபும் ஏற்கும் - ஐம்முதலாகிய ஆறு வேற்றுமையுருபுகளையும் ஏற்கும். எ - று. (36)

[ஐ முதலிய உருபேலாப் பெயர்கள்.]

**294.** நீயிர் நீவிர் நா னெழுவா யலபெறா.

இ - ள். நீயிர் நீவிர் நான் - நீயிர் முதலாகிய இம் மூன்று பெயர்களும்—எழுவாய் அல பெறா - எழுவாயல்லாத வேற்றுமைகளை ஏலாவாம். எ - று. (37)

[பெயர் வேற்றுமை.]

**295.** அவற்றுள்:
எழுவா யுருபு திரிபில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.

இ - ள். அவற்றுள் - முன்சொல்லபபட்ட எட்டு வேற்றுமைகளுள்—எழுவாய் உருபு திரிபு இல் பெயரே - முதல் வேற்றுமையினுருபாவது ஐ முதலிய உருபேற்றுத திரிதலில்லாத பெயரேயாம்—வினை பெயர் வினாக் கொளல் அதன் பயனிலை - வினையையும் பெயரையும் வினாவையுங் கொள்ள வருதல் அவ்வுருபினது பொருணிலையாய் வருதலாம். எ - று.

எனவே, அத்திரிபில்லாத பெயர்தானே தன்பொருளை வினைமுதற்பொருளாக வேற்றுமை செய்யுமென்பதாயிற்று.

இவ்வெழுவாய் கொள்ளும் பெயர், இன்னது, இவ்வளவிற்று என்னும் பொருள்பட வரும் பெயராம்.

உ - ம். (1.) சாத்தன் வந்தான்; கொற்றன் வாழ்க இவைதெரிநிலை வினைகொள வந்தன. அவன் பெரியன், ஆவுண்டு இவை குறிப்புவினை கொள வந்தன.

(2.) சாத்தனிவன், கொற்றனவன் இவை இன்னது என்னும் பொருள்பட வரும் பெயர்கொள வந்தன. ஆவொன்று; யானை நூறு இவை இவ்வளவிற்று என்னும் பொருள்பட வரும் பெயர்கொள வந்தன.

(3.) அவன் யார்; ஆ யாது இவை வினைக்கொள வந்தன.

வினைமுதற்பொருளாவது ஒரு தொழினிகழ்ச்சியிலே தன் வயத்ததாகக் குறிக்கப்படும் பொருளாம். வினைமுதல், செய்பவன், கருத்தா என்பன ஒருபொருட் சொற்கள்.

உ - ம். சாத்தன் வந்தான் என்புழித் தொழினிகழ்ச்சி வருதல், அத்தொழினிகழ்ச்சியிலே தன்வயத்ததாகக் குறிக்கப்படும் பொருள் சாத்தனாதலாற் சாத்தன் வினைமுதற்பொருள்.

இவ்வெழுவாய்க்கு, ஐ முதலியன போன்ற உருபில்லையாயினும், உரையிற்கோடலென்னும் உத்தியினாலே சிறுபான்மை, ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்பவன் முதலிய ஐம்பாற் சொற்களுஞ் சொல்லுருபுகளாக வருமெனக் கொள்க.

உ - ம். சாத்தனானவன் வந்தான்; சாத்தியானவள் வந்தாள்; சாத்தரானவர் வந்தார்; யானையானது வந்தது; யானையானவை வந்தன என வரும். பிறவுமன்ன.

இன்னும், இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப்படுஞ் சொல்லுருபுகளுக்கெல்லாங் கொள்க. (38)

[இரண்டாம் வேற்றுமை.]

**296.** **இரண்டா வதனுரு பையே யதன்பொருள்**
**ஆக்க லழித்த லடைத னீத்தல்**
**ஒத்த லுடைமை யாதி யாகும்.**

இ - ள். இரண்டாவதன் உருபு ஐயே - இரண்டாம் வேற்றுமையினதுருபு முன்சொல்லப்பட்ட ஐ யொன்றுமேயாம்—அதன்பொருள் - அதன் பொருள்களாவன—ஆக்கல் - ஆக்கப்படுபொருளும்—அழித்தல் - அழிக்கப்படுபொருளும் - அடைதல் - அடையப்படுபொருளும்—நீத்தல் - துறக்கப்

படுபொருளும் — ஒத்தல் - ஒக்கப்படுபொருளும் — உடைமை - உடைமைப்பொருளும் — ஆதி ஆகும் - முதலியனவாக அவ்வுருபையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட செயப்படு பொருள்களாம். எ - று.

**உதாரணம்.**

| | | |
|---|---|---|
| குடத்தைவனைந்தான் | ... | ஆக்கப்படுபொருள். |
| கோட்டையையிடித்தான் | ... | அழிக்கப்படுபொருள். |
| ஊரையடைந்தான் | ... | அடையப்படுபொருள். |
| மனைவியைத் துறந்தான் | ... | துறக்கப்படுபொருள். |
| புலியையொத்தான் | ... | ஒக்கப்படுபொருள். |
| பொன்னையுடையான் | ... | உடைமைப்பொருள். |

செயப்படு பொருளாவது வினைமுதற்றொழிற்பயனுறுவது. செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட் சொற்கள்.

உ - ம். குடத்தை வனைந்தான் என்புழி மண் கூட்டுகை திரிகை சுழற்றுகை முதலியன வினைமுதலினது தொழில்; குடத்தினது தோன்றுதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது குடமாதலாற் குடஞ் செயப்படுபொருள். கோட்டையை யிடித்தான் என்புழிக் கோட்டையை யிடித்தல் வினைமுதலினது தொழில்; அதனது வடிவு குலைதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது கோட்டையாதலாற் கோட்டை செயப்படுபொருள். ஊரையடைந்தான் என்புழி நடந்து செல்லுதல் வினைமுதலினது தொழில்; ஊரைச்சேர்தல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது ஊராதலால் ஊர் செயப்படுபொருள். மனைவியைத் துறந்தான் என்புழி வெறுத்துவிடுதல் வினைமுதலினது தொழில்; உரிமைக்கேடு அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது மனைவியாதலான் மனைவி செயப்படுபொருள். புலியை யொத்தான் என்புழி அஞ்சாது பாய்ந்து கொல்லுதலாற் புலியை உவமானமாகக் கொள்ளுதல் வினைமுதலினது தொழில்; உவமானமாகக் கொள்ளப்

படுதல் அத்தொழிலின்பயன். அப்பயனுறுவது புலியாத லாற் புலி செயப்படுபொருள். பொன்னையுடையான் என்புழிச் சம்பாதித்தல் வினைமுதலினது தொழில், தனதாகுகை அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது பொன்னாதலாற் பொன் செயப்படுபொருள்.

ஆதி என்றதனால், வீட்டை விரும்பினான், நூற்பொருளையறிந்தான் என விரும்புதலும் அறிதலுமாகிய வினைமுதற்றொழில்களுக்கு இடமாகிய வீடும் நூற்பொருளுஞ் செயப்படுபொருளாகுகை முதலானவையுங் கொள்க.

அச்செயப்படுபொருள் கருத்திற் செயப்படுவதும், கருத்தின்றிச் செயப்படுவதும், இருமையிற் செயப்படுவதும் என மூவகைப்படும்.

உ-ம். (1.) சோற்றையுண்டான் என்புழிச், சோறு, உண்ணப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட, செயப்படுபொருள்.

(2.) சோற்றைக் குழைத்தான் என்புழி, சோறு, குழைக்கப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத செயப்படுபொருள்.

(3.) பதரையு நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் என்புழிப், பதர், கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத, செயப்படுபொருள்; நெல், கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட செயப்படுபொருள்.

செயப்படுபொருள் குன்றாத முதனிலைகளின்மேல் வி பி முதலிய விகுதிகள் புணர்ந்து வருவனவாகிய பிறவினைகளுள்ளே சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல் இரண்டாம் வேற்றுமையில் வருதலால், இரண்டு செயப்படுபொருள் வரும்; சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல் மூன்றும் வேற்றுமையில் வருதலால், செயப்படுபொருள் ஒன்றே வரும், இரண்டு வாராவாம்.

உ-ம். (1.) பகைவரைச் சிறைச்சாலையை யடைவித்தான், சாத்தனைச் சோற்றையுண்பித்தான்.

(2.) கொற்றனாற் பூதனைக் கொல்வித்தான், சாத்தனாற் பசுவைப் புரப்பித்தான்.

செயப்படுபொருள் குன்றாத தன்வினைகளுள்ளே, கறத்தல், குறைத்தல் முதலிய சிலவினைகளுக்கு இரண்டு செயப்படு பொருள்கள் வருதலுமுண்டு; வரினும் முன்னின்ற செயப்படு பொருள் சிறப்புடைத்தன்றெனக் கொள்க.

உ-ம். பசுவைப் பாலைக்கறந்தான், யானையைக் கோட்டைக் குறைத்தான் என வரும். இவற்றுள், கறத்தலாவது உள்ளிருக்கும் நெகிழ்ச்சிப் பொருட்பிரிவை யுண்டாக்குந் தொழிலையுண்டாக்குந் தொழில்; ஆதலால், வினைமுதற் றொழிற்பயன் இரண்டாகவே அப்பயனுறுவதாகிய செயப்படுபொருளும் இரண்டாயின. எங்ஙனமெனின்;— உள்ளிருக்கும் நெகிழ்ச்சிப் பொருள் பால்; அப்பாற்கும் பசுவிற்கும் பிரிவை யுண்டாக்குந் தொழில் பாலிலிருக்கும் வீழ்ச்சி; அவ்வீழ்ச்சியையுண்டாக்குந் தொழில் முலைபற்றியுருவல்; இவற்றுள் வீழ்ச்சித்தொழிலானிகழும் பிரிவாகிய பயனுறுவது பசுவெனவும், முலைபற்றி யுருவற் றொழிலானிகழும் வீழச்சியாகிய பயனுறுவது பாலெனவும் அறிக. மற்றை யுதாரணமும் இப்படியே காண்க. குறைத்தலாவது, இங்கே பிரிவையுண்டாக்குந் தொழிலை யுண்டாக்குந் தொழில். இப்பசுவையும் யானையையுஞ் செயப்படுபொருளாகக் கருதாது நீக்கப் பொருளாகக் கருதின், பசுவினின்றும் பாலைக்கறந்தான், யானையினின்றுங் கோட்டைக் குறைத்தான் என ஐந்தனுருபும், சம்பந்தப் பொருளாகக்கருதின் பசுவினது பாலைக்கறந்தான், யானையினது கோட்டைக்குறைத்தான் என ஆறனுருபும், வருமெனக் கொள்க.

இன்னும் அச்செயப்படுபொருள்; அகநிலையாகவும், தானே கருத்தாவாகவும் வரும்.

உ-ம். (1.) நடத்தலைச் செய்தான்; உண்டலைச்செய்தான் எனத் தெரிநிலைவினைகளை விரித்துரைக்குமிடத்துச் செயப்படுபொருள் அகநிலையாய் வந்தது.

(2.) தன்னைக் குத்தினான்; தன்னைப் புகழ்ந்தான் எனச் செயப்படுபொருளே கருத்தாவு மாயிற்று. (39)

[மூன்றாம் வேற்றுமை.]

**297. மூன்றா வதனுரு பாலா னோடொடு**
**கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.**

**இ - ள்.** மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஓடு - மூன்றாம் வேற்றுமையினுருபு முன்சொல்லப்பட்ட ஆலே யன்றி ஆனும் ஓடும் ஒடுவுமாம்—அதன்பொருள் - அவ் வுருபுகளின் பொருள்களாவன—கருவி - கருவிப்பொரு ளும்—கருத்தா வினைமுதற்பொருளும்— உடனிகழ்வு - உடனிகழ்ச்சிப் பொருளும் ஆகிய அவ்வுருபுகளேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட மூன்றுமாகும். எ - று.

இந்நான்கு உருபுகளுக்கும் மூன்று பொருள்களுமாமெனக் கூட்டிச் சொன்னாராயினும், ஏற்புழிக்கோடலென்னும் உத்தி யால், அவ்வுருபுகளுள் ஆல் ஆன் உருபுகளுக்குக் கருவியும் வினைமுதலும், ஒடு ஓடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சியுஞ் சிறந்தன எனக்கொள்க.

உதாரணம்.

| | |
|---|---|
| வாளால் வெட்டினான்................<br>வாளான் வெட்டினான்.............. | கருவி. |
| அரசனாலாகிய கோயில்.............<br>அரசனானாகிய கோயில்.............. | கருத்தா. |
| மைந்தனோடு தந்தை வந்தான்......<br>மைந்தனொடு தந்தை வந்தான்...... | உடனிகழ்ச்சி. |

கருவியாவது வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படுபொரு ளிற் சேர்ப்பது. கருவி, காரணம், ஏது என்பன ஒருபொருட் சொற்கள்.

உ - ம். வாளாற் பகைவனை வெட்டினான் என்புழி, வாளைப்பற்றி வீசுதல் வினைமுதலினது தொழில்; பகைவனுடம் பறுதல்

அத்தொழிற்குப் பயன்; அப்பயனைப் பகைவனுகிய செயப்படுபொருளிலே சேர்ப்பது வாளாதலால் வாள் கருவிப்பொருள்.

அக்கருவிப்பொருள் முதற்கருவியுந் துணைக்கருவியுமென இருவகைப்படும். அவற்றுள், முதற்கருவியாவது செயப்படுபொருளோடொற்றுமையுடையது. முதற்காரணம், ஆதிகாரணம், சமவாயிகாரணம் என்பன ஒருபொருட்சொற்கள். துணைக்கருவியாவது முதற்கருவிக்குத் துணையாய் அது காரியப்படுமளவும் உடனிகழ்வது.

உ-ம். (1.) மண்ணாற்குடத்தை வனைந்தான் என்புழிக், குடமாகிய காரியத்தோடு ஒற்றுமையுடையது மண்ணுதலான் மண் முதற்கருவி.

(2.) திரிகையாற்குடத்தை வனைந்தான் என்புழி, குடமாகிய முதற்கருவிக்குத் துணையாய் அது குடமாகக் காரியப்படுமளவும் உடனிகழ்வது திரிகையாதலால் திரிகை துணைக்கருவி.

இக்கருவிப்பொருள் அகக்கருவி, புறக்கருவி, ஒற்றுமைக் கருவி என மூன்றாயும் வருமெனக்கொள்க.

உ-ம். மனத்தா னினைந்தான்; வாளால் வெட்டினான்; அறிவாலறிந்தான் என வரும்.

வினைமுதல் இன்னதென்பது முன்னே எழுவாய்ச்சூத்திரவுரையிற் காட்டப்பட்டது. அவ்வெழுவாய் வேற்றுமையில் வரும் வினைமுதற்பெயர் தன் விகுதிவினையினுலே முடியும்; இம்மூன்றாம் வேற்றுமையில் வரும் வினைமுதற்பெயர் செயப்படுபொருள் விகுதி வினையினுலே முடியும்; இதுவே அவ்விரண்டிற்கும் வேறுபாடாம்.

உ-ம். (1.) குயவன் குடத்தைவனைந்தான் என்புழிக், குயவனென்னும் எழுவாய்க்கருத்தாத் தனக்குரிய ஆன் விகுதி வினையினுலே முடிந்தது.

(2) குயவனாற் பானை வனையப்பட்டது என்புழிக், குயவனென்னும் மூன்றனுருபின் கருத்தாத் தனக்குரிய

ஆன்விகுதி வினையினாலே முடியாது, செயப்படு பொருட்குரிய தவ்விகுதி வினையினாலே முடிந்தது.

அவ்விருவகை வினைமுதலும், தனித்தனியே, இயற்றும் வினை முதலும் ஏவும் வினைமுதலும் என, இருவகைப்படும். அவற்றுள், இயற்றும் வினைமுதலாவது கருவியைத் தொழிற் படுத்துவது. ஏவும் வினைமுதலாவது அவ்வியற்றும் வினைமுதலி னது தொழிலையுண்டாக்குந் தொழிலுடையது.

உ-ம். (1.) தச்சன் கோயில் கட்டினான்; தச்சனாற் கோயில் கட்டப்பட்டது என்புழித் தச்சன் இயற்றுதற் கருத்தா.

(2.) அரசன் கோயில் கட்டுவித்தான்; அரசனாற் கோயில் கட்டுவிக்கப்பட்டது என்புழி அரசன் ஏவுதற் கருத்தா.

உடனிகழ்ச்சிப்பொருளாவது வினை கொண்டு முடியும் பொருளின்றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாகவுடைய பொருளாம்.

உ-ம். மைந்தனோடு தந்தை வந்தான் என்புழித் தந்தை வினை கொண்டு முடியும் பொருள்; வருதல் அப்பொருளின் தொழில்; அவ்வருதற்றொழிலைத் தன்னிடத்தும் உட னிகழ்வதாகவுடைய பொருள் மைந்தனாதலால் மைந்தன் உடனிகழ்ச்சிப் பொருள்.

அவ்வுடனிகழ்ச்சிப்பொருள், தலைமைப்பொருளும், தலைமை யில் பொருளும் என, இருவகைப்படும். அவற்றுள், தலைமைப் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளினுயர்வுடையது. தலைமையில் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளி னிழிவுடையது.

உ-ம். (1.) மன்னவனோடு மந்திரி வந்தான் என்புழி, வினை கொண்டு முடியும் பொருள் மந்திரி; அப்பொருளி னுயர்வுடைய பொருள் மன்னவனாதலால், உட னிகழ்ச்சிப்பொருள் தலைமையில் பொருளாயிற்று.

(2.) மாணாக்கனோடாசிரியன் வந்தான் என்புழி, வினை கொண்டு முடியும் பொருள் ஆசிரியன்; அப்பொருளி

னிழிவுடைய பொருள் மாணுக்கனுதலால், உட னிகழ்ச்சிப்பொருள் தலைமையில் பொருளாயிற்று.

ஆல் ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளினும், ஓடு ஒடு உருபுகள் வினைமுதற்பொருள் கருவிப்பொருள்களினும் ஒரோ விடத்து அருகி வரும்.

உ-ம். (1.) "தூங்குகையானோங்குநடைய;" "உறழ்மணியானுயர் மருப்பின." என ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது காண்க. இவற்றிற்குத் தூங்குகையோடு என்றும், உறழ்மணியோடு என்றும், பொருள் கொள்க. தூங்குகையானோங்குநடைய என்புழி, நடத்தலாலாகிய வேறிடப்புணர்ச்சி கைக்கும் யானைக்கும் உளதாத லறிக உறழ்மணியானுயர் மருப்பின என்புழி, யானையினது உடைமை மணிக்கும் மருப்பிற்கும் உளதாதலறிக.

(2.) "கொடியொடு துவக்குண்டான்;" "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்புழிக், கொடியொடு, ஊசியொடு என்பன கொடியால், ஊசியால் எனப் பொருள்படுதலும், கொடி, ஊசி என்பன முறையே வினைமுதற்பொருள் கருவிப்பொருளாதலுங் காண்க.

சிறுபான்மை ஆல் ஆன் உருபுகள், முதற்பொருண்மேலேற்றிச் சொல்லப்படும் விகாரத்தையுடைய சினைப்பொருளினும், தொறுப் பொருளினும் வரும்.

உ-ம். (1.) கண்ணாற் குருடன், காலான் முடவன் என்புழிக் குருடன் முடவன் முதற்பொருள்கள்; அவைகளின் மேலேற்றிச் சொல்லப்படும் விகாரங் குருட்டுத் தன்மையும் முடத்தன்மையும்; அவ்விகாரத்தையுடைய சினைப்பொருள்கள் கண்ணுங்காலுமாதல் காண்க.

(2.) "ஊரானோர் தேவகுலம்" என்புழி, ஊர்தோறு மொவ்வொரு தேவகுலம் எனப் பொருள்கொள்ளப் படும். தொறுவென்பது தன்னையேற்ற பெயர்ப்

பொருளெங்கும் அப்பெயர்ப் பொருளோடியையும் பொருளிருக்கை.

சிறுபான்மை ஓடு ஒடு உருபுகள், வேறுவினையுடனிகழ்ச்சிப் பொருளிலும், வினையில்பொருளிலும், கலப்புறு பொருளிலும், ஒப்புப்பொருளிலும், ஒப்பலொப்புப் பொருளிலும், ஒற்றுமைப் பொருளிலும், அடைமொழிப்பொருளிலும், வரும்.

உ - ம். (1) "தொடியொடு தொல்கவின் வாடியதோள்." என்புழி, வினைகொண்டு முடியும் பொருள் கவின்; அதனது தொழில் வாடல்; அத்தொழில் நிகழுங்காலையில் நிகழும் வேறுதொழில் சோர்தல்; அதனையுடையது தொடியாதலால், தொடி வேறுவினையுடனிகழ்ச்சிப் பொருள்.

(2.) "மலையொடு பொருத மால்யானை" என்புழிப் பொருதல் யானைக்கல்லது மலைக்கில்லாமையால், மலை வினையில்பொருள்.

(3.) "பாலொடுதேன் கலந்தற்றே" என்புழித் தேனைக் கலக்கப்படுதலாற் பால் கலப்புறுபொருள்.

(4.) மதியொடொக்கு முகம் என்புழி, முகத்துக்கு உவமானமாகுகையால், மதி ஒப்புப்பொருள்.

(5.) "விலங்கொடு மக்களனையர்" என்புழி, ஒப்பல்லாத விலங்கு ஒப்பாகச் சொல்லப்படுவதால், விலங்கு ஒப்பலொப்புப் பொருள்

(6.) எழுத்தொடு புணர்ந்த சொல்" என்புழி, உருபைத் தொடர்ந்த சொல்லென்னும் பொருளோடு ஒற்றுமையுடையதாதலால், எழுத்து ஒற்றுமைப்பொருள்.

(7.) கோபத்தோடு வந்தான் என்புழி, வருதற்கு விசேடணமாதலால், கோபம் அடைமொழிப் பொருள்.

ஆல் ஆன் உருபுகள் நிற்றற்குரியவிடத்துக் கொண்டென்பதும், ஓடு ஒடு உருபுகள் நிற்றற்குரியவிடத்து உடனென்பதும், சொல்லுருபுகளாக வரும்.

உ-ம். வாள்கொண்டுவெட்டினான். தந்தையுடன் மைந்தன் வந்தான் என வரும். (40)

[நான்காம் வேற்றுமை.]

**298.** **நான்கா வதற்குரு பாகுங் குவ்வே**
**கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்**
**பொருட்டு முறை யாதியி னிதற்கிதெனல் பொருளே.**

இ-ள். நான்காவதற்கு உருபு குவ்வே ஆகும் - நான்காம்வேற்றுமைக்குருபு முன் சொல்லப்பட்ட குவ்வொன்றுமேயாம்—பொருள் - அவ்வுருபின் பொருள்களாவன — கொடை-கொடையும்—பகை-பகையும்—நேர்ச்சி - நட்பும்—தகவு - தகுதியும்—அது ஆதல் - முதற்காரணமும்—பொருட்டு - நிமித்தகாரணமும்—முறை ஆதியின் - முறையும் முதலான பொருட்சொற்களின் புணர்ச்சியில்—இதற்கு இது எனல் - இதற்கு இதுவென்பது பட வருவனவாகிய அவ்வுருபேற்ற பெயர்ப்பொருள் வேறுபட்ட பலவுமாம். எ - று.

கொடையெனவே கோடற்பொருளும், பகை நேர்ச்சியெனவே பகைதொடர்பொருளும் நட்புத்தொடர்பொருளும் தகுதியெனவே தகுதியுடைப்பொருளும், அதுவாதலெனவே முதற்காரண காரியப்பொருளும், பொருட்டெனவே நிமித்த காரணகாரியப்பொருளும், முறையெனவே முறைக்கிளை பொருளும், குவ்வுருபின் பொருள்களாமென்பது பெற்றாம்.

**உதாரணம்**

இரவலர்க்குப்பொன்னைக்கொடுத்தான்...கோடற்பொருள்.
பாம்புக்குப் பகை கருடன்..............பகைதொடர்பொருள்.
சாத்தனுக்குநட்பாளன் கொற்றன்......நட்புத்தொடர்பொருள்.
அரசர்க் குரித் தருங்கலம்...............தகுதியுடைப்பொருள்.
குண்டலத்திற்குப் பொன்......முதற்காரண காரியப்பொருள்.

கூலிக்கு வேலை செய்தான்......நிமித்தகாரண காரியப்பொருள்.
சாத்தனுக்கு மகன் கொற்றன்............முறைக்கிழமைப்பொருள்.

கோடற்பொருளாவது கொடுத்தற்றொழிலின் செயப்படு பொருளைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருளாம். கோடற்பொருள், கோளிப்பொருள் என்பன ஒருபொருட் சொற்கள்.

உ-ம். இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான் என்புழிக் கொடுத்தலின் செயப்படுபொருள் பொன்; அதனைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருள் இரவலராதலால், இரவலர் கோடற்பொருள்.

இன்னும், மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்புழி, அறிவாகிய செயப்படுபொருள் கொடுப்போன் பொருளாய்க் கொள்வோனிடத்துச் செல்லாது ஆண்டுத் தோன்றினும் அதனைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலால், மாணாக்கன் கோடற் பொருள். அன்றியும், மாணாக்கனுக்கு நூற்பொருளுரைத்தான் என்புழிச் சொல்லுதலின் செயப்படுபொருளாகிய நூற்பொருளை அறிதலையுடைய பொருளாகிய மாணாக்கனுங் கோடற்பொருளேயாம். இன்னும், அவர் கொடுத்தற்குடம்பட்டார் என உடம்படுதற்கு விடயமான பொருளும் ஒரு கோடற்பொருளாகவே வரும்.

கோடல் பலவகைப்படும்; அவை:— கேளாதேற்றல், கேட்டேயேற்றல், எலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின் றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் முதலியன.

உ-ம். ஆவிற்கு நீர் விட்டான் என்பது கேளாதேற்றல். வறியார்க்கீந்தான் என்பது கேட்டேயேற்றல். மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்பது எலாதேற்றல். தனக்குச் சோறிட்டான் என்பது ஈவோனேற்றல். அரசனுக்குக் கண்ணலர் கொடுத்தானரி என்பது உயர்ந்தோனேற்றல். அரிக்குச் சங்கரங்கொடுத்தானரன் என்பது இழிந்தோனேற்றல். சோழனுக்கு விருந்திட்டான் சேரன் என்பது

ஒப்போனேற்றல். சோற்றிற்கு நெய் விட்டான் என்பது உணர்வின்றேற்றல். மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தானாசிரியன் என்பது விருப்பாயேற்றல். கள்ள னுக்குக் கசையடி கொடுத்தானரசன் என்பது வெறுப்பா யேற்றல். [கசை - குதிரைச்சம்மட்டி.]

கொடுத்தலும் பலவகைப்படும்; அவை: வழக்கத்திற் கொடுத்தல், உரிமையிற் கொடுத்தல், அச்சத்திற் கொடுத்தல், பாவனையிற் கொடுத்தல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற் கொடுத்தல், அவலத்திற் கொடுத்தல் முதலியன.

உ - ம். மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என்பது வழக்கத் திற் கொடுத்தல். மகனுக்கு அரசுகொடுத்தான் என்பது உரிமையிற் கொடுத்தல். அரசற்குத் திறை கொடுத்தான் என்பது அச்சத்திற்கொடுத்தல். தந்தைதாய்க்குத் திதி கொடுத்தான் என்பது பாவனையிற்கொடுத்தல். அவனுக் குப்பரிசு கொடுத்தான் என்பது உவகையிற்கொடுத்தல். அவனுக்குத் தண்டனை கொடுத்தான் என்பது வெகுளி யிற்கொடுத்தல். வாய்க்கரிசியிட்டான் என்பது அவலத் திற் கொடுத்தல்.

பகை தொடர் பொருளாவது ஒரு பொருளினிடத்துள்ள பகை தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

உ - ம். பாம்புக்குப் பகை கருடன் என்புழிக், கருடனிடத்துள்ள பகை தொடர்தற்கு இடம் பாம்பாதலாற் பாம்பு பகை தொடர்பொருள்.

நட்புத்தொடர்பொருளாவது ஒருபொருளினிடத்துள்ள நட் புத்தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

உ - ம். சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன் என்புழிக் கொற்ற னிடத்துள்ள நட்புத் தொடர்தற்கு இடஞ் சாத்தனாத லாற் சாத்தன் நட்புத்தொடர்பொருள்.

வைவின் தீமை தொடர்பொருளும் வாழ்த்தின் நன்மை தொடர் பொருளும் பகைநேர்ச்சிகளில் அடங்குமெனக்

கொள்க. அவை: தீயோர்க்குக் கேடுண்டாகுக, நல்லோர்க்குச் செல்வமுண்டாகுக எனவரும்.

தகுதியுடைப்பொருளாவது தன்னோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருளையுடைய பொருளாம்.

உ-ம். அரசர்க்குரித்தருங்கலம் என்புழி, அரசரோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருள் அருங்கலம்; அப்பொருளையுடைய பொருள் அரசராதலால் அரசர் தகுதியுடைப் பொருள்.

முதற்காரணகாரியப் பொருளாவது முதற்காரணத்தாலாகும் பொருளாம்.

உ-ம். குண்டலத்திற்குப் பொன் என்புழிப், பொன்முதற்காரணம்; அதனாலாகிய காரியங் குண்டலமாதலாற் குண்டலம் முதற்காரணகாரியப் பொருள்.

நிமித்தகாரண காரியப்பொருளாவது நிமித்தகாரணத்தால் ஆகும் பொருளாம்.

உ-ம். கூலிக்கு வேலைசெய்தான் என்புழி, வேலை நிமித்தகாரணம்; அதனாலாகிய காரியம் கூலியாதலாற் கூலி நிமித்தகாரண காரியப்பொருள்.

முறைக்கியை பொருளாவது பிறப்பினால் ஒருபொருளின் முறைக்குத் தான் இயைந்து நிற்கும் பொருளாம்.

உ-ம். சாத்தனுக்கு மகன் கொற்றன் என்புழிக், கொற்றனிடத்துள்ள மகனென்னுமுறைக்குத் தானியைந்து நிற்கும் பொருள் சாத்தனாதலாற் சாத்தன் முறைக்கியை பொருள்.

ஆதி என்றதனால், மழைக்கு மின்னல் என உற்பாதத்தாற் குறிக்கப்படுவதும், அவனுக்கிதுபோதும் எனக் குறைவின்மையைக் கொள்வதும், பிறவுங் கொள்க. [உற்பாதம் - மேல்விளையும் நன்மை தீமையை யறிவிக்குங் குறி.]

குவ்வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே, பொருட்டு நிமித்தம் என்பனவும், குவ்வுருபின்மேல் ஆக வென்பதும் சொல்லுருபுகளாக வரும்.

உ - ம். கூழின்பொருட்டு வேலை செய்தான்: கூலியினிமித்தம் வேலை யெய்தான்; கூலிக்காக வேலை செய்தான் என வரும். (41)

[ஐந்தாம் வேற்றுமை.]

**299. ஐந்தா வதனுரு பில்லு மின்னும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.**

இ - ள். ஐந்தாவதன் உருபு இல்லும் இன்னும் - ஐந்தாம்வேற்றுமையின் உருபாவன இல்லும் முன் சொல்லப்பட்ட இன்னுமாம்--பொருள்-அவ்வுருபுகளின் பொருள்களாவன—நீங்கல் - நீக்கப்பொருளும்—ஒப்பு - ஒப்புப் பொருளும்—எல்லை - எல்லைப்பொருளும்—ஏது - ஏதுப் பொருளுமாகிய அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இந்நான்குமாம். எ - று.

**உதாரணம்**

மலையின் வீழருவி......................நீக்கப்பொருள்.
காக்கையிற்கரிது களம்பழம்..........ஒப்புப்பொருள்.
மதுரையின் வடக்குச் சிதம்பரம்......எல்லைப்பொருள்,
கல்வியிற் பெரியன் கம்பன்...........ஏதுப்பொருள்.

நீக்கப்பொருளாவது பிரிவையுண்டாக்குந் தொழிலின்றிப் பிரிவைமாத்திரந் தன்னிடத்துடைய பொருளாம்.

உ - ம். மலையின் வீழருவி என்புழி, அருவியின் வீழ்ச்சி பிரிவை யுண்டாக்குந் தொழில்; அது தன்னிடத்தில்லாமல் அவ் வீழ்ச்சியாலாகிய பிரிவொன்றையே தன்னிடத்துடை யது மலையாதலால், மலை நீக்கப்பொருள்.

ஒப்புப்பொருளாவது உவமேயப்பொருளிலும் தன்னிலு மிருக்கின்ற பொதுத்தன்மையால் உவமானமாகும் பொருளாம். உவமேயம், புகழ்பொருள் என்பன ஒருபொருட்சொற்கள்.

உ - ம். காக்கையிற்கரிது களம்பழம் என்புழிக், களம்பழம் உவமேயம்; உவமேயத்திலுந் தன்னிலுமுள்ள பொதுத்

தன்மை கருமை; அதனால் உவமானமாகிய பொருள் காக்கையாதலாற் காக்கை ஒப்புப்பொருள்.

எல்லைப்பொருளாவது அறியப்படாத பொருளினது திசையளவு வழியளவு காலவளவு பண்பு முதலியவற்றைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம்.

உ-ம். (1.) மதுரையின் வடக்குச் சிதம்பரம் என்புழி, அறியப்படாத சிதம்பரத்தினது திசையைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்ட பொருளாகிய மதுரையாதலால், மதுரை எல்லைப்பொருள்.

(2.) கச்சியிற் றிருத்தணிகை முக்காவதம் என்புழி, அறியப்படாத திருத்தணிகையினது வழியளவை அறிவித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்ட பொருளாகிய கச்சியாதலால், கச்சி எல்லைப்பொருள்.

(3.) சாத்தனின் இரண்டாண்டு மூத்தவன் கொற்றன் என்புழி, அறியப்படாத கொற்றனுடைய பிராயத்தைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள் அறியப்பட்ட சாத்தனாதலாற் சாத்தன் எல்லைப்பொருள்.

(4.) அரசரிற்பெரியரந்தணர்; ஆவினிழிந்தது எருமை என்புழி, அறியப்படாத அந்தணரும் மேதியுமாகிய பொருள்களின் உயர்வு தாழ்வுகளைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள்கள் அறியப்பட்ட அரசரும் ஆவுமாதலால், அரசரும் ஆவும் எல்லைப்பொருள்கள். இவ்வுயர்வு தாழ்வுகளை நீக்கப்பொருளென்பாருமுளர்.

ஏதுப்பொருளாவது ஒருபொருளின் பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகும் பொருளாம்.

உ-ம். கல்வியிற் பெரியன் கம்பன் என்புழிக், கம்பனுடைய பெருமைக்கு ஏதுக் கல்வியாதலாற் கல்வி ஏதுப்பொருள்.

இன்னும், மாயையிற் றோன்றியதுலகம் என முதற்காரணப் பொருளிலும், மண்ணுலகின் வேறு விண்ணுலகம் என

வேற்றுமைக்கு எதிர்பொருளிலும், பாவத்தின் வெறுக்கின்றான் என விடயப்பொருளிலும், ஐந்தனுருபு வருமெனக் கொள்க.

நீக்கப்பொருளிலும், எல்லைப்பொருளிலும், இன் இல் உருபுகளின்மேல், நின்று, இருந்து என்பவை, உம் பெற்றும் பெறாதுஞ் சொல்லுருபுகளாக வரும்.

உ - ம். (1.) ஊரினின்றும் போயினான், ஊரினின்று போயினான்; ஊரிலிருந்தும் போயினான், ஊரிலிருந்து போயினான். இவை நீக்கப்பொருள்.

(2.) காட்டினின்றுமூர்காவதம், காட்டினின்றூர்காவதம்; காட்டிலிருந்துமூர்காவதம், காட்டிலிருந்தூர்காவதம். இவை எல்லைப்பொருள். (42)

[ஆறும் வேற்றுமை]

300. ஆற னொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னாக்க மாந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

இ - ள். ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்-ஆறும் வேற்றுமையினது வருமொழியினொருமைப் பொருண்மைக்கு முன்சொல்லப்பட்ட அதுவேயன்றி ஆதுவும்—பன்மைக்கு அவ்வும் உருபு ஆம் - வருமொழியின் பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம்—பொருள் - அவற்றின் பொருள்களாவன—பண்பு - குணமுந்தொழிலுமாகிய பண்பும்—உறுப்பு - அவயமும்—ஒன்றன்கூட்டம் - ஒருபொருட்கூட்டமும்—பலவின் ஈட்டம் - பலபொருட்கூட்டமும்—திரிபின் ஆக்கம் - ஒன்றுதிரிந்தொன்றாதலும்—ஆம் தற்கிழமையும் - ஆகிய ஐந்துதற்கிழமைப் பொருள்களையும்—பிறிதின் கிழமையும் - அவையல்லாத பிறிதின்கிழமைப்

பொருள்களையும்—பேணுதல் - உடையனவாக அவ்வுருபு களையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இவ்விரு வகைச் சம்பந்தப் பொருள்களுமாம். எ - று.

தற்கிழமைப்பொருளாவது தன்னோடொற்றுமையுடையது. பிறிதின்கிழமைப்பொருளாவது தன்னின் வேறாயது. தற்கிழமைப்பொருள் இவையெனவே, இவையல்லாதபொருளும் இடமுங் காலமுமாகிய மூன்றும் பிறிதின்கிழமைப் பொருளென்றாகும். ஆகவே, இப்படிப் பலவகையாலும் வரும் சம்பந்தப் பொருளே இவ்வேற்றுமையுருபுகளின் பொருளென்பதாயிற்று.

உ - ம்.

## 1. தற்கிழமை.

| | |
|---|---|
| சாத்தனது கருமை. [குணம்.]<br>சாத்தனது வரவு—[தொழில்.] | பண்புத்தற்கிழமை. |
| சாத்தனது கை ................<br>புலியது வால் .................... | உறுப்புத்தற்கிழமை. |
| மாந்தரது தொகுதி.............<br>நெல்லது குப்பை.............. | ஒன்றன்கூட்டத் தற்கிழமை. |
| படைகளது தொகுதி ..........<br>பறவைகளது கூட்டம் ......... | பலவின்கூட்டத் தற்கிழமை. |
| நெல்லினது பொரி.......... ..<br>மஞ்சளது பொடி... .......... | ஒன்றுதிரிந்தொன்றாயதன் தற்கிழமை |

## 2. பிறிதின்கிழமை.

| | |
|---|---|
| சாத்தனது பசு.....................<br>முருகனது வேல்................. | பொருட்பிறிதின்கிழமை. |
| சாத்தனது வீடு......................<br>முருகனது குறிஞ்சி ............. | இடப்பிறிதின்கிழமை. |
| சாத்தனது நாள் ...................<br>மாரனது வேனில்... ............ | காலப்பிறிதின்கிழமை. |

எனது கை, நினது தலை, தனது புறம் ...ஆதுருபு.
என கைகள், தன தாள்கள்......... .....அகரவுருபு.

இராகுவினது தலை, எனதுயிர் என ஆறனுருபு, உடையதும் உடைமைப்பொருளும் வேறாகாத ஒற்றுமைப்பொருளில்

வருதலுங்கொள்க. இராகுவேதலையாதலாலும்,நானெனப்பட்டது உயிரேயாதலாலும், ஒற்றுமைப்பொருளாயின. ஒற்றுமையென்பது அபேதம்.

அஃறிணை யொருமை பன்மைகளுக்கு இயைந்த உருபுகள் இங்ஙனங் கூறவே, உயர்திணையொருமை பன்மையாகிய கிழமைப் பொருளுக்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம். உயர்திணைப் பெயர் வரும்போது, சாத்தனுக்கு மகன் எனக்குவ்வுருபு வருமென்றறிக. சிறுபான்மை, அரனது தோழன்;" "குன்றவர் தமது செம்மல்" என உயர்திணைபொருமைப் பொருண்மைக்கும், "நினதடியாரொடல்லால்" என உயர்திணைப் பன்மைப்பொருண்மைக்கும், எனது கைகள் என அஃறிணைப் பன்மைப் பொருண்மைக்கும் அதுவுருபும் வரும்.

இவ்வாறனுருபுகளுள் ஒன்று நிற்றற்குரியவிடத்தே உடைய என்பது சொல்லுருபாக வரும்.

உ-ம். சாத்தனுடைய புதல்வன், சாத்தனுடைய புதல்வர்; சாத்தனுடைய வீடு, சாத்தனுடைய வீடுகள் எனவரும்.

இவ்வீடெனது, அத்தோட்டமவனது என வருவனவற்றில், எனது, அவனது என்பன, துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று நின்ற குறிப்புவினைமுற்று. எனது போயிற்று, அவனதை வாங்கினேன் என வருவனவற்றில், எனது, அவனது என்பன, மேற்கூறியபடி வந்த குறிப்புவினையாலணையும் பெயர். இங்ஙனமன்றி, இவ்விடங்களில் வரும் அது என்பது ஆறும் வேற்றுமையுருபன்று. (43)

[ஏழாம் வேற்றுமை.]

**301.** **ஏழ னுருபு கண்ணாதி யாகும்**
**பொருண்முத லாறு மோரிரு கிழமையின்**
**இடனாய் நிற்ற லிதன்பொரு ளென்ப.**

இ-ள். ஏழன் உருபு கண் ஆதி ஆகும் - ஏழாம் வேற்றுமையினுருபு முன் சொல்லப்பட்ட கண்ணேயன்றி

அது முதலாகிய பிறவுமாம்—இதன் பொருள் - இவ்வுருபு களின் பொருளாவது—பொருள் முதல் ஆறும் ஓரிரு கிழமையின் இடன் ஆய் நிற்றல் என்ப - பொருளாதியாகிய ஆறும் ஆறும்வேற்றுமைச் சூத்திரத்திலே சொல்லப்பட்ட இரு கிழமைப் பொருள்களுக்கும் இடமாய் நிற்கும் உரு பேற்ற பெயர்ப்பொருள் வேறுபட்ட அவ்விடப்பொருளாம் என்று சொல்லுவர் புலவர். எ - று.

உதாரணம்.

| | |
|---|---|
| மணியின்கணிருக்கின்றதொளி................தற். <br> மனையின்கண்வாழ்கின்றதன்றில்...........பிறி. | பொருளிட மாயிற்று |
| ஊரின்கணிருக்குமில்லம்......................தற். <br> ஆகாயத்தின்கட்பறக்கின்றபருந்து .........பிறி. | இடமிடமா மாயிற்று. |
| நாளின்கணுழிகையுள்ளது....................தற். <br> வேனிற்கட்பாதிரிபூக்கும்.......................பிறி. | காலமிட மாயிற்று. |
| கையின்கணுள்ளது விரல்....................தற். <br> கையின்கண்விளங்குகின்றது கடகம்......பிறி. | சினையிட மாயிற்று. |
| கறுப்பின்கண்மிக்குள்ளதழகு...............தற். <br> இளமையின்கண் வாய்த்தது செல்வம்.....பிறி. | குணமிட மாயிற்று. |
| ஆடற்கண்ணுளது சதி.........................தற். <br> ஆடற்கட்பாடப்பட்டது பாட்டு.............பிறி. | தொழிலிட மாயிற்று. |

வினைமுதல்வழியாக வினைமுதற்றொழிற்காயினும், செயப் படுபொருள் வழியாகச் செயப்படுபொருளிலிருக்கின்ற பயனுக் காயினும் இடமாகும்பொருள் இடப்பொருளென்பர் வடநூலார்.

உ - ம். (1.) மணியின்கணிருக்கின்றதொளி என்புழி, ஒளியென் னும் வினைமுதலின் வழியாக அதனது இருத்தற் றொழிற்கு மணி இடமாயிற்று.

(2.) கழுவின்கட்கள்ளனை யேற்றினான் என்புழிக் கள்ள னென்னுஞ் செயப்படுபொருளின் வழியாக அச் செயப்படுபொருளிருக்கின்ற உயிர்ப்பிரிவாகிய பய னுக்குக் கழு இடமாயிற்று.

இடப்பொருள் தன்னிற்சிறிதிடமாவதும், தான்முழுதுமிட மாவதும், விடயமாவதும் என மூவகைப்படும்.

உ - ம். (1.) ஊர்க்கணிருந்தான், பாயிலிருக்கின்றான். ஒரோவழி மேவல்.

(2.) மணியின்கணொளி, உயிரின்கணுணர்வு, பாலின்கட் சுவை, தீயின்கட் சூடு, நீரின்கட் சீதம். எங்கும் வியாபகம்.

(3.) கல்வியின்கணாசை வைத்தான், குருவின்கணன்பு செய்தான். விடயம்.

சிறுபான்மை ஏழனுருபுகள், கூட்டிப் பிரித்தற்கெல்லை யாகும் பொருளிலும், பிரித்துக் கூட்டலிற் குழுவாகும் பொருளி லும், ஒரு தொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழிலாகும் பொருளிலும், வரும்.

உ - ம். (1.) மக்களிலுயர்ந்தோரந்தணர்; குறிலைந்தனுள் அஇஉ இம் மூன்றும் சுட்டு. கூட்டிப்பிரிக்குமெல்லைப் பொருள்.

(2.) அறஞ்செயுமகன் தேவருள் வைக்கப்படுவான்; கல்வி யறிவில்லாதவன் விலங்கினுள் வைத்தெண்ணப்படு வான். பிரித்துக்கூட்டுங் குழுப்பொருள்.

(3.) பால்கறக்கையில் வந்தான்; பொருதற்கண் மழை பெய்தது. ஒருதொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழில். (44)

[கண்முதலிய உருபுகள்.]

**302.** கண்கால் கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதே முறைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே.

இ - ள். கண்***இல் - கண் முதலாக இல்லீறாகச் சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும் — இடப்பொருள்

உருபு - தம்மையேற்ற பெயர்ப்பொருளை இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம். எ - று.

(கண்ணொழிந்த உருபுகளுக்கு உதாரணம்.)

கால்——"ஊர்க்காணிவந்த பொதும்பர்."
கடை——"வேலின்கடை மணிபோற்றிண்ணியான்."
இடை——"நல்லாரிடைப் புக்கு."
தலை——"வலைத்தலை மானன்ன நோக்கியர்."
வாய்——"குரைகடல்வாயமுதென்கோ."
திசை——"தேர்த்திசையிருந்தான்."
வயின்——"அவர்வயிற்செல்லாய்."
முன்——"கற்றார்முற்றோன்றா கழிவிரக்கம்."
சார்——"காட்டுச்சாரோடுங் குறுமுயால்."
வலம்——"கைவலத்துள்ளது கொடுக்கும்."
இடம்——"இல்லிடப்பரத்தை."
மேல்——"தன்மேற்கடுவரைநீரிற்கடுத்து வரக்கண்டும்." [கடுப்பு-
கீழ்——"பிண்டிக் கண்ணார் நிழற்கீ ழெழுந்தமடிகள்." விரைவு.]
புடை——"எயிற்புடைநின்றான்."
முதல்——"சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை." [சுரன்-பாலை
பின்——"காதலிபின் சென்றதம்ம." [நிலம்.
பாடு——"நம்பாடணையாத நாள்."
அளை——"கல்லளைச் சுனைநீர்."
தேம்——"தோழிக்குரியவைகோடாய்தேத்து." [கோடாய்-கைத்
உழை——"அவனுழைவந்தான்." தாய்]
வழி——"நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன."
உழி——"உரைப்புழியோலைபோல."
உளி——"குயில்சேர்குளிர்காவுளிசேர்புறையும்."
உள்——"முல்லைபங்குவட்டுள் வாழும்."
அகம்——"பயன்சாராப் பண்பில்சொற்பல்லாரகத்து."
புறம்——"செல்லுமென்னுயிர்ப்புறத்திறுத்த மருண்மாலை."
இல்——"ஊரிலிருந்தார்."

இனிக், கண் கால் முதலியன, இடவேறுபாடுகளை புணர்த்தும்போது ஒருதிறத்தனவாகிய உருபாகாது, பலதிறத்தனவாகிய இடங்களையுணர்த்தும் பெயர்களாம்.

உ - ம். கண்ணகன் ஞாலம், அகத்திலிருந்தான், வீட்டின் புறத்திலிருந்தான், மேலிடத்திருந்தான், முன்னிருந்தான், கடைநாள், இடைச்சுரம், தலையாயார், தென்றிசை. என வரும். பிறவுமன்ன. (45)

[எட்டாம் வேற்றுமை.]

**303.** **எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்**
**றிரிபு குன்றன் மிகுத லியல்பயற்**
**றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்**
**தன்முக மாகத் தானழைப் பதுவே.**

இ - ள். எட்டன் உருபு - எட்டாம்வேற்றுமையினுருபுகளாவன—எய்து பெயர் ஈற்றின் திரிபு - விளியடைந்த பெயரீற்றினுடைய திரிதலும்—குன்றல் - கெடுதலும்—மிகுதல் - மிகுதலும்—இயல்பு - இயல்பாதலும்—அயற்றிரிபும் ஆம் - ஈற்றயலெழுத்துத் திரிதலுமாகும்—பொருள் படர்க்கையோரைத் தன்முகம் ஆக அழைப்பது - அவற்றின் பொருளாவது படர்க்கைப்பெயர்ப் பொருளைத் தனக்கெதிர்முகமாக அழைப்பதாலாகிய விளிக்கப்படு பொருளாம். எ - று.

தான் அசைநிலை. விளித்தற்குக் கருவியாகிய உருபை விளியென்றது காரியவாகுபெயர். (46)

[விளிக்கப்படு பெயர்கள்.]

**304.** **இ உ ஊவோ டையோ ன ள ர ல**
**யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு**
**ணஃகா னுவீ ருகும் பொதுப்பெயர்**
**ஞநவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன.**

இ - ள். இ உ ஊவோடு ஐ ஒ ன ள ர ல ய ஈற்று உயர்திணைப் (பெயர்)- இகரமும் உகரமும் ஊகாரமும் ஐகாரமும் ஒகாரமும் என்னுமுயிர்களும் ன ள ர ல ய என்னுமெய்களும் ஆகிய பத்தெழுத்துக்களையும் இறுதியிலுடைய உயர்திணைப்பெயர்களும்—ஒ ர அல் இவற்றோடு ணஃகான் ஆ ஈறு ஆகும் பொதுப்பெயர் - இவற்றுள் ஒகாரவுயிரும் ரகரமெய்யுமாகிய இரண்டுமொழித்து நின்ற எட்டுடனே ணகரமும் ஆகாரமுமாகிய இரண்டுங்கூடிய பத்தெழுத்துக்களும் இறுதியாகிய பொதுப்பெயர்களும்—ஞ ந ஒழி அனைத்து ஈற்று அஃறிணைப் (பெயர்) - ஞகர நகரங்களும் (ஈறுகாத எகாரமு) மொழிந்த இருபத்தோரெழுத்துக்களையும் ஈற்றிலுடைய அஃறிணைப்பெயர்களும்—விளிப்பன - அழைக்கப்படுவன. எ - று. (47)

[பொதுவாகிய விளியுருபு.]

**305. இம்முப் பெயர்க்கண் ணியல்பு மேயும்**
**இகர நீட்சியு முருபா மன்னே.**

இ - ள். இம்முப்பெயர்க்கண் - முன் விளிக்கப்படுமென்ற மூவகைப் பெயர்களிடத்தும்—இயல்பும் ஏயும் இகர நீட்சியும் உருபு ஆம் மன் - இயல்பாதலும் ஏகாரமிருதலும் இகரம் ஈகாரமாதலும் பெரும்பாலும் விளியுருபுகளாகும். எ - று.

உ - ம். (1.) முனி கூறாய், வேந்து கூறாய், ஆடூஉக்கூறாய், விடலை கூறாய், கோக் கூறாய், கோன் கூறாய், வேள் கூறாய், மாந்தர் கூறீர், தோன்றல் கூறாய், சேய் கூறாய். எ-ம். முனியே கூறாய், வேந்தே கூறாய். எ-ம். நம்பீ கூறாய். எ-ம். உயர்திணைப்பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன.

(2.) பிதாக் கூறாய், ஆண் கூறாய். எ-ம். பிதாவே கூறாய். ஆணே கூறாய். எ-ம். சாத்தீ கூறாய் எ-ம். பொதுப் பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன.

(3.) விளக்கொடியை, புல்வாய் கொடியை. எ-ம். விளவே கொடியை, புல்வாயே கொடியை. எ-ம். மந்தீ கொடியை. எ-ம். அஃறிணைப்பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன. காட்டாதொழிந்த பெயர்களும் இப்படியே வரும். (48)

பெரும்பாலும் என்றதனால், இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமையுளவேற் கொள்க.

[விளியுருபுக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி.]

**306.** ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும்
உருபா மல்லவற் றாயு மாகும்.

இ - ள். ஐ இறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் - ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்குப் பொதுவிதியால் இயல்பும் ஏகாரமிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவு மாகத் திரிதலும்—அல்லவற்று ஆயும் - உயர்திணை யஃறிணைப்பெயர்களுக்கு அவ்விரண்டுருபுகளன்றி ஐகாரம் ஆயெனத் திரிதலும்—உருபு ஆகும் - விளியுருபுகளாம். எ - று.

உ - ம். (1.) அன்னை-அன்னாய், அன்னா பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் வந்தன.

(2.) விடலை - விடலாய். எ-ம். நாரை - நாராய். எ-ம். உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப்பெயர்க்கும் ஆய் வந்தது.

உரையிற்கோடலென்னும் உத்தியால், "அன்னே யுன்னை யல்லா லினியாரை நினைக்கேனே." எனப் பொதுப் பெயர்க்கு ஐகாரம் ஏகாரமாகத் திரிதலுங்கொள்க.

**307.** ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவய னீட்சி யதனோடு

**ஈறு போத லவற்ருே டோவுறல்**
**ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்**
**அதனே டயறிரிந் தேயுற லீறழிந்**
**தயலே யாதலும் விளியுரு பாகும்.**

இ - ள். னவ்வீற்று உயர்திணைப்பெயர்க்கண்-பொது விதியன்றி னகரமெய்யீற்றுயர்திணைப்பெயர்களுள் — ஒருசார் அளபு - சில அளபெடுத்தலும்—(ஒருசார்) ஈறு அழிவு - சில ஈறு கெடுதலும்—(ஒருசார்) அயல் நீட்சி - சில ஈற்றயனீளுதலும்—(ஒருசார்) அதனோடு ஈறு போதல் - சில ஈற்றயனீண்டு ஈறு கெடுதலும்—(ஒருசார்) அவற்ருேடு ஓ உறல் - சில ஈறுகெட்டு ஈற்றயனீண்டு ஓகாரமிகுதலும்—(ஒருசார்) ஈறு அழிந்து ஓ உறல் - சில ஈறுகெட்டு ஓகாரமிகுதலும்—(ஒருசார்) இறுதியவ்வாதல்- சில இறுதி னகரமெய் யகரமெய்யாதலும்—(ஒருசார்) அதனோடு அயல்திரிந்து ஏ உறல் - சில ஈற்று னகரமெய் யகரமெய்யாகத்திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகார மிகுதலும்—(ஒருசார்) ஈறு அழிந்து அயல் ஏ ஆதலும் - சில ஈறு கெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும்— விளியுருபு ஆகும் - விளியுருபுகளாகும். எ - று.

உ - ம். அம்பர்கிழான் - அம்பர்கிழாஅன் அளபாயிற்று. புலவன்- புலவ ஈறழிந்தது. பெருமன் - பெருமான் ஈற்றயனீண்டது. மன்னன் - மன்னா ஈற்றயனீண்டு ஈறுகெட்டது. ஐயன் - ஐயாவோ ஈற்றயனீண்டு ஈறுகெட்டு ஓகாரமிக்கது. திரையன் - திரையவோ ஈறழிந்து ஓகாரமிக்கது. வாயிலான் - வாயிலாய் இறுதி யவ்வாயிற்று. வாயிலான் - வாயிலோயே இறுதி யவ்வாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகாரமிக்கது. ஐயன் - ஐயே ஈறழிந்து அயிலிலகரம் ஏகாரமாயிற்று.

இவ்வொருசாரென்பதை விளியதிகாரமுழுதுங்கூட்டுக. ()

**308.** ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி யிறுதி யவ்வொற் றாதல்
அயலி லகரமே யாதலும் விளித்தனு.

இ - ள். ளஃகான் உயர்பெயர்க்கு - பொதுவிதியின்றி ளகர மெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள்—(ஒருசார்) அளபு - சில அளபெடுத்தலும்—(ஒருசார்) ஈறு அழிவு - சில ஈறுகெடுதலும்—(ஒருசார்) அயல் நீட்சி - சில ஈற்றயனீளுதலும்—(ஒருசார்) இறுதியவ்வொற்று ஆதல் - சில இறுதிளவ்வொற்று யவ்வொற்றாதலும்—(ஒருசார்) அயலில் அகரம் ஏ ஆதலும் - சில ஈற்றயலகரம் ஏகாரமாதலும்—விளித்தனு - விளியுருபுகளாகும். எ - று.

உ-ம். வேள் - வேஎள் அளபெடுத்தது. எல்லாள் - எல்லா ஈறு கெட்டது. மக்கள் - மக்காள் ஈற்றயனீண்டது. குழையாள் - குழையாய் ளவ்வொற்று யவ்வொற்றாயிற்று. அடிகள் - அடிகேள் ஈற்றயலகரம் ஏகாரமாயிற்று. (51)

**309.** ரவ்விற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்
அகரம் இ ஈ யாத லாண்டை யா
ஈயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்
ஈற்றி னீருற லிவையுமீண் டுருபே.

இ - ள். ரவ்வீற்று உயர்பெயர்க்கு - பொதுவிதியன்றி ரகரமெய்யீற்றுயர்திணைப்பெயர்களுள்—(ஒருசார்) அளபு எழல் - சில அளபெடுத்தலும்—(ஒருசார்) ஈற்றயல் அகரம் இ ஈ யாதல்-சில ஈற்றயலகரம் இகரமாதலும் ஈகாரமாதலும்—(ஒருசார்) ஆண்டை ஆ ஈ ஆதல் - சில அவ்வீற்றயலாகாரம் ஈகாரமாதலும்—(ஒருசார்) அதனோடு ஏ உறல் - சில அதனோடு ஏகாரம் ஏற்றலும்—(ஒருசார்) ஈற்று ஏ மிக்கு

அயல் யாக் கெட்டு அதன் அயல் நீடல்-சில ஈற்றில் ஏகார மிக்கு அயலில் யாக் கெட்டு அதனயலிகரம் ஈகாரமாதலும்—(ஒருசார்) ஈற்றின் ஈர் உறல் - சில ஈற்றில் ஈர் ஆகலும்—இவையும் ஈண்டு உருபு - ஆகிய இவையும் இவ்விடத்து விளியுருபுகளாகும். எ - று.

உ-ம். சிறார் - சிறாஅர் அளபெடுத்தது. தெவ்வர் - தெவ்விர் ஈற்றய லகரம் இகரமாயிற்று. நாய்கர்-நாய்கீர் ஈற்றயலகரம் ஈகாரமாயிற்று. சான்றார்-சான்றீர் ஈற்றயலாகாரம் ஈகாரமாயிற்று. கணியார் - கணியீரே ஈற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகாரமிக்கது. நம்பியார் - நம்பீரே ஈற்றிலேகாரமிக்கு அயல்யாக்கெட்டு அதனயலிகரம் ஈகாரமாயிற்று. எமர் எமரீர் ஈரேற்றது.

ஈண்டென்ற மிகையால், கடலாரே, கடலீரே; சாத்தியாரே, சாத்தியீரே. எ-ம். அஃறிணைப்பெயர் பொதுப் பெயர்களைச் சிறப்பித்து, ரவ்வீற்றுயர்திணைப்பெயர் போலக் கூறினும், இவ்வுருபேற்றல் கொள்க. (52)

**310. லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
யகார வீற்றிற் களபுமா முருபே.**

இ - ள். லகார ஈற்று உயர்பெயர்க்கு - பொதுவிதியன்றி லகர மெய்யீற்றுயர்திணைப்பெயர்க்கு—(ஒருசார்) அளபு - சில அளபெடுத்தலும்—(ஒருசார்) அயல் நீட்சியும்—சில ஈற்றயனீளுதலும்—யகாரவீற் (றுயர்பெயர்க்கு) அளபும் - யகரமெய்யீற்றுயர்திணைப் பெயர்க்கு அளபெடுத்தலும்—உருபு ஆம் - விளியுருபுகளாகும். எ - று.

உ-ம். மால்-மாஅல். எ-ம். தோன்றல்-தோன்றால். எ-ம். சேய் - சேஎய். எ-ம். அம்மூன்றுருபுகளும் வந்தன. (53)

**311. னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
இறுதி யழிவத னோடய னீட்சி.**

இ - ள். னவ்வீற்று உயர்திணை அல் இருபெயர்க்கண்- பொதுவிதியின்றி னகரமெய்யீற் றஃறிணைப்பெயர் பொதுப் பெயர்களிடத்து—(ஒருசார்) இறுதி அழிவு - சில ஈறு கெடுதலும்—(ஒருசார்) அதனோடு அயல் நீட்சி - சில ஈறு கெடுதலுடனே ஈற்றயனீளுதலும் விளியுருபுகளாம். எ-று.

உ - ம். அலவன்-அலவ. எ-ம். கலுழன்-கலுழா. எ-ம். சாத்தன் - சாத்த. எ-ம். கொற்றன் - கொற்றா. எ-ம். முறையே அஃறிணைப்பெயரிலும் பொதுப்பெயரிலும் அவ்விரண்டும் வந்தன. (54)

**312. லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்
ஈற்றய னீட்சியு முருபா கும்மே.**

இ - ள். ல ள ஈற்று அஃறிணைப்பெயர் பொதுப் பெயர்க்கண் - லகர ளகர மெய்யீற்றஃறிணைப்பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும்—ஈற்றயல் நீட்சியும் உருபு ஆகும் - பொதுவிதியன்றி ஈற்றயலெழுத்து நீளுதலும் விளியுருபாகும். எ - று.

உ - ம். முயல் - முயால், கிளிகள் - கிளிகாள். எ - ம். தூங்கல் - தூங்கால், மக்கள் - மக்காள். எ-ம். வரும். (55)

[விளியுருபுகளுக்குப் புறனடை.]

**313. அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின்
அளபும் புலம்பி னோவு மாகும்.**

இ - ள். முன் சொல்லப்பட்ட விளியுருபுகளுள்— இயல்பும் ஈறு அழிவும் அண்மையின் - இயல்பாதலும் ஈறு கெடுதலுஞ் சமீபவிளிக்கண்ணும்—அளபு சேய்மையினும் - அளபெடுத்தல் தூரவிளிக்கண்ணும்—ஓ புலம்பினும் ஆகும்- ஓகாரமிகுதல் புலம்பல் விளிக்கண்ணும் வரும். எ - று.

எனவே, மற்றை விளியுருபுகள் இம்மூன்றிடத்துங் கலந்து வருமென்பது பெற்றாம். (56)

[விளியுருபேலாப் பெயர்கள்.]

**314. நுவ்வொடு வினச்சுட் டுற்ற ன ள ர**
**வை து் தாந்தா னின்னன விளியா.**

**இ - ள்.** நுவ்வொடு வினச்சுட்டு உற்ற ன ள ர - நுவ் வுடனே மூன்று முதல் வினவையும் மூன்று சுட்டையும் முறையே பொருந்திய ன ள ர என்னு மூன்றீற்றுயர் திணைப் பெயர்களும்—வை து-வை து என்னு மிரண்டீற்றஃறிணைப் பெயர்களும்—தான் - தானென்னும் பொதுப்பெயரும்— இன்னன - இவை போல்வன பிறவும்—விளியா - விளிக்கப் படுவனவல்ல. எ - று.

வை து என்னுமிரண்டும் நுவ்வொடு பொருந்தா என்பார், ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

மகரவீற்றுப் பொதுப்பெயர் முன்னரே விலக்கப்பட்டமை யால் இங்கே தாம் என்றது அசைநிலை.

உ - ம். நுமன், நுமள், நுமர். எ-ம். எவன், எவள், எவர், எவை எது. எ-ம். யாவன், யாவள், யாவர், யாவை, யாது. எ-ம். ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது, எ-ம். அவன், அவள், அவர், அவை, அது. எ-ம். இவன், இவள், இவர், இவை, இது. எ-ம். உவன், உவள், உவர், உவை, உது. எ-ம். தான் எ-ம். வரும். இப்பெயர்கள் விளியேலாமை காண்க.

இன்னன என்றதனால், மற்றையான், மற்றையாள், மற்றை யார், மற்றையது, மற்றையன, மற்றையவை, பிறன், பிறள், பிறர், பிறிது, பிற முதலியனவுங் கொள்க. (57)

[முதல் சினைத்தொடர்பின்கண் அவ்விரண்டினும் இரண்டனுருபு வாராதெனல்.]

**315. முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும்**
**அதுமுதற் காயிற் சினைக்கை யாகும்.**

இ - ள். முதலை ஐ உறின் சினையைக் கண் உறும் - முதலினை ஐயுருபு பொருந்தினாற் சினையினைக் கண்ணுருபு பொருந்தும்—அது முதற்கு ஆயின் சினைக்கு ஐ ஆகும் - அதுவுருபு முதலுக்குவரிற் சினையினுக்கு ஐயுருபு வரும் எ - று.

இனி இரட்டுறமொழிதலென்னும் உத்தியால், அதுமுதற்காயிற் சினைக்கையாகும் என்னும் வாக்கியத்தில், அது என்பதற்கு அக்கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக் கொள்க.

உ - ம். யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலை வெட்டினான், யானையின்கட் காலை வெட்டினான் என வரும். எனவே, முதல்சினையிரண்டிலும் ஐயுருபு வருவது சிறப்பன்றென்பதாயிற்று. (58)

[ஐயுருபு முதல் சினையிரண்டினும் வாராமைக்குக் காரணமும் மேலைச் சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப்பொருளுக்கும் ஏற்பித்தலும்.]

**316. முதலிவை சினையிவை யெனவே றுளவில
உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.**

இ - ள். முதல் இவை சினை இவை என வேறு உள இல - கடங்களிவை படங்களிவை என்றாற்போல முதற் பொருள்களிவை சினைப்பொருள்களிவை என்பதற்கு இரண்டாக வேறுள்ளன இலவாம்—உரைப்போர் குறிப்பின - ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துச் சொல்வோரது குறிப்பின்மாத்திரையனவேயாம்— பிண்டமும் அற்று - பிண்டப் பொருளும் அத்தன்மைத்தாம். எ - று.

யானையைக் குறித்தபோது யானையுண்டாக அதனுடைய கை கால் கொம்பு முதலியவை வேறில்லையாம்; அவ்வவயவத்தைக் குறித்தபோது அவையுண்டாக யானைவேறில்லையாம்; ஆதலால் இப்படிச் சொல்லப்பட்டன.

இனிப் பிண்டப்பொருள்: நெல்லைப் பொலியின்கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான் என வரும். பிண்டப்பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருளாகிய நெலலும் வேறாகாமையால், அவ்விரண்டனிடத்தும் ஐயுருபு வருவது சிறப்பன்றென அறிக. (59)

[உருபு மயக்கம்.]

**317. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.**

**இ - ள்.** யாதன் உருபின் கூறிற்று ஆயினும் - ஒரு வேற்றுமைப்பொருள் மற்றொருவேற்றுமையுருபாற் சொல்லப்பட்டதாயினும்—பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும் - அப்பொருள் சென்றவழியே அவ்வுருபு சேரும். **எ - று.**

எனவே, பொருளுக்கு இயையாது மயங்கி வந்த உருபைப் பொருளுக்கியைந்த உருபாகத் திரித்துக்கொள்க என்பதாயிற்று.

உ - ம். (1) "நாகு வேயொடு நக்கு வீங்கு தோள்" என்புழி, வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படு பொருளாய் நிற்றலால், ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துக் கொள்க.

(2.) "கிழங்கு மணற்கின்ற முளை" என்புழி, மணல் கோடற் பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலால், குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. பிறவுமன்ன.

இனி உரையிற்கோடலென்னும் உத்தியால், ஒரு வேற்றுமைப்பொருள் மற்றைவேற்றுமை உருபுகளோடு தகுதியாக வருதலும் உண்டெனக் கொள்க. அவை வருமாறு:—

1. வினைமுதற்பொருள், எழுவாயுருபு மூன்றனுருபுகளோன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஆறனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்: "ஒன்று மூன்றுநான் காறெனு முருபொடு
வருமே வினைமுத லெனவகுத் தனரே."

உ-ம். அவர்க்குச் செய்யத்தகுமக்காரியம்: 4—கு. அவரது வரவு: 6—அது. என வரும்.

2. செயப்படுபொருள், இரண்டனுருபோடன்றிச், சிறுபான்மை எழுவாய்வேற்றுமையுருபுமுதல் ஏழாம்வேற்றுமையுருபீறாய உருபுகள் எல்லாவற்றோடும், வரும்.

சூத்திரம்: "எல்லாவுருபொடுஞ் செயப்படு பொருளெழும்."

உ-ம். சோறடப்பட்டது: எழுவாய். அரிசியாற்சோறாக்கினான். 3—ஆல். அவட்குக்கொள்ளுமிவ்வணிகலம்: 4—கு. பழியினஞ்சும்: 5—இன். நூலது குற்றங்கூறினான்: 6—அது தூணின்கட்சார்ந்தான்: 7—கண் என வரும்.

3. கருவிப்பொருள், மூன்றனுருபு ஐந்தனுருபுகளோடன்றிச் சிறுபான்மை எழுவாயுருபு நான்கனுருபு ஆறனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்: "ஒன்று மூன்றுநான் கைந்தா றுருபொடு
கருவி வருமெனக் கருதினர் பெரியோர்."

உ-ம். கண் காணும்: எழுவாய். கண்ணிற்குக் காணலாம்: 4—கு. கண்ணது காட்சி: 6—அது என வரும்.

4. கோடற்பொருள், நான்கனுருபோடன்றிச், சிறுபான்மை எட்டாம்வேற்றுமையொழிந்த எல்லாவுருபுகளோடும் வரும்.

சூத்திரம். "எல்லா வுருபொடுங் கொள்வோ னெழுமே."

உ-ம். "இரப்பவ ரென்பெறினுங்கொள்வர்:" எழுவாய். "செய்யவடவ்வையைக் காட்டிவிடும்:" 2—ஐ. நாகராற்பலி: 3—ஆல். நாகரி னன்பு செய்தான். 5—இன். நாகரதுபலி. 6—அது. நாகர்கணன்புசெய்தான்: 7—கண் என வரும்.

5. ஐந்தாம்வேற்றுமைப் பொருள்களுள், நீக்கப்பொருள் சிறுபான்மை இரண்டனுருபோடும், எல்லைப்பொருள் சிறுபான்மை நான்கனுருபோடும், வரும்.

சூத்திரம்: "இரண்டுநான் கைந்தொடு மெழுமே நீக்கம்."

உ-ம். மதுரையை நீங்கினான்: 2—ஐ. நீக்கப்பொருள். மதுரைக்கு வடக்குச் சிதம்பரம்: 4—கு. எல்லைப்பொருள்.

6. சம்பந்தப்பொருள், ஆறனுருபோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஐந்தனுருபு ஏழனுருபுகளோடும், வரும்.

சூத்திரம். "நான் கைந்தாறே ழொடுசுறை நடக்கும்."

உ-ம். சாத்தனுக்குமகன்: 4—கு. மரத்தினீங்கின கொம்பு: 5—இன். உயிரின்க ணுணர்வு: 7—கண் என வரும்.

7. இடப்பொருள், ஏழனுருபோடன்றிச் சிறுபான்மை எழுவாயுருபு இரண்டனுருபு நான்கனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்: "ஒன்றி ரண்டுநான் கேழோடிட மெழும்."

உ-ம். தூண் போதிகை தொட்டது: எழுவாய். தூணைச்சார்ந்தான்: 2—ஐ. இன்றைக்கு, நாளைக்கு, பகலைக்கு, அந்திக்கு, சந்திக்கு, மாலைக்கு, காலைக்கு, ஊர்க்கு, வீட்டிற்கு வருவன்: 4—கு. என வரும். (60)

[சிலவேற்றுமையுருபு செய்யுளிடத்துத் திரிந்து வருதல்]

**318. ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்
ஆகா வஃறிணைக் கானல் லாதன.**

**இ-ள்.** ஐ ஆன் குச்செய்யுட்கு அவ்வும் ஆகும் - ஐயும் ஆனுங் குவ்வுமாகிய மூன்றுருபுகளுஞ் செய்யுளிடத்து ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும் பெறும் — அஃறிணைக்கு ஆன் அல்லாதன ஆகா - அஃறிணையிடத்து ஆனல்லாத ஐயும் குவ்வும் அகரமாகத் திரியாவாம். எ-று.

ஆகாவஃறிணைக் கானல்லாதன எனவே, உயர்திணையிலே மூன்றுருபுந் திரியுமென்பது பெற்றாம்.

உ-ம். (1.) காவலோனைக் களிறஞ்சும்மே என்பது "காவலோனக் களிறஞ்சும்மே." என்றும், புலவரான் என்பது

"புலவரான" என்றும், கடிநிலையின்றே யாசிரி யற்கு என்பது "கடிநிலையின்றே யாசிரியற்க" என் றும் உயர்திணையிலே மூன்றுருபுந் திரிந்தன.

(2.) புள்ளினான் என்பது "புள்ளினன" என ஆனுரு பொன்றும் அஃறிணையிலே திரிந்தது.

அகரமாகத்திரியும் என்றதனால், ஆனுங் குவ்வுந் திரிந்த போது முன்னின்ற ஆனுங் குவ்வுஞ் சாரியையென்பது பெற்றாம். (61)

[எட்டுவேற்றுமைக்கும் முடிக்குஞ்சொல்.]

**319.** **எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்**
**அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்**
**புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர்.**

இ - ள். எல்லை இன்னும் அதுவும் பெயர் கொளும் - எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம்வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் பெயரைக்கொண்டு முடியும்—அல்ல வினை கொளும் - ஒழிந்த எழுவாய் முதலிய வேற்றுமையெல் லாம் வினையைக்கொண்டு முடியும்—நான்கு ஏழ் இருமையும் புல்லும் - அவற்றுள் நான்காம்வேற்றுமையும் ஏழாம்வேற் றுமையும் வினையையேயன்றி வினையொடு பொருந்தும் பெயரையுங் கொண்டு முடியும்—பெரும்பாலும் என்மனார் புலவர் - பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர். எ - று.

பெரும்பாலும் என்றதனால், வினைகொளற்குரியன சிறு பான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையும் கொண்டு முடிதலும், அவற்றுள் எழுவாய்வேற்றுமை வினை கொண்டு முடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவை யுங்கொண்டு முடிதலுங்கொள்க.

உ - ம்: (1.) கருவூரின் கிழக்கு, சாத்தனது கை என எல்லையின் னும் அதுவும் பெயர்கொண்டன.

(2.) சாத்தன்வந்தான், சாத்தனல்லன்; குடத்தை வனைந்தனன், குடத்தையுடையன். வாளால் வெட்டினான், வாளால்வலியன்; சாத்தனுக்குக் கொடுத்தான், சாத்தனுக்கு நல்லன்; நோயினீங்கினான், நோயிற் கொடியன்; அவையின்கணிருந்தான், அவையின்கட் பெரியன்; கொற்றா கொள், கொற்றாவலியை என அல்லவை வினைகொண்டன.

(3.) பிணிக்கு மருந்து, மணியின்கணொளி என நான்காம் வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையேயன்றிப் பெயருங் கொண்டன. இப்பெயர்கள் எல்லையின்னும் அதுவும் கொள்ளும் பெயர்கள் போலாது, பிணிக்குக் கொடுக்கு மருந்து மணியின்கணிருக்கு மொளி என வினை வேண்டி நிற்றலின், வினையொடு பொருந்தும் பெயர்களாயின.

(4.) சாத்தன் வருதல், சாத்தன் வந்தவன்; குடத்தை வனைதல், குடத்தை வனைந்தவன் எனச் சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும்பெயரும் கொண்டன. பிறவுமன்ன.

(5.) சாத்தனவன், சாத்தன் யாவன்; சாத்தன் யார் என எழுவாய்வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும். வினாப்பெயரும் வினாவினைக்குறிப்புங் கொண்டது.

எட்டுவேற்றுமைகளுள், எட்டாவதும் ஆறாவதுமொழிந்த ஆறுவேற்றுமைப் பொருள்களும் வினைகொண்டு முடியிற் காரகமெனப் பெயர் பெறும். ஆறாவதும், வினைப்பெயர் கொள்ளின், அப்பெயர் பெறும்.

சூத்திரம்: "விளிகுறை யிரண்டையும் விட்டவேற் றுமைகள்
வினையான் முடியிற் காரக மெனப்பெறுங்
குறையும் வினைகொளி னோரோவழிக் கூடும்
நாரா யணன்பூ வோரா யிரத்தைக்,
கரத்தாற் கொய்தோ ரரற்கே கொடுத்துச்
சக்கரச் சிறுமையி னீங்கி நற்சுவைப்

பாற்கடற் கண்ணே பள்ளிகொண் டானெனக்
காரக முழுதும் வந்தன காண்க.
இவற்றினு ளொன்றே யியம்பினுங் காரகம்." (62)

**பரீக்ஷ வினாக்கள்:**—34. வேற்றுமையாவன யாவை? 35. எட்டு வேற்றுமைகளின் பெயரும் முறையுமெவை? 36. ஐம்முதலிய வேற்றுமையுருபுகளை யேற்பதியாது? 37. ஐம்முதலிய உருபேலாப் பெயர்கள் எவை? 38. எழுவாய்வேற்றுமை யுருபியாது? அவ்வெழுவாயுருபின் பொருள்யாது? எழுவாய கொள்ளும் பெயர் எத்தன்மையது? வினைமுதற்பொருளாவதியாது? சாத்தன் வந்தான் என்னும் உதாரணத்தில் வினைமுதற்பொருட்குக் கூறிய இலக்கணம் இருக்குமாறெங்ஙனம்? எழுவாய்க்கு வருஞ் சொல்லுருபுகளெவை? 39. இரண்டாம்வேற்றுமையுருபியாது? அவ்விரண்டாம் வேற்றுமையுருபிற்குப் பொருளென்னை? செயப்படுபொருளாவதியாது? குடத்தை வனைந்தான் என்னும் உதாரணத்திற் செயப்படுபொருளுக்குக் கூறிய இலக்கணம் இருக்குமாறெங்ஙனம்? விருப்பமும் அறிவும் வினைமுதற்றொழிலாகுமிடத்துச் செயப்படுபொருளாவதியாது? செயப்படுபொருள் எத்தனை வகைப்படும்? ஒரோவிடத்து இரண்டு செயப்படுபொருள் வருதலுண்டோ? செயப்படுபொருள் குன்றாத தன்வினையில் எங்கும் இரண்டு செயப்படுபொருள் வருதலின்றோ? இன்னும் அச்செயப்படுபொருள் எவ்வாறு வரும்? 40. மூன்றாம்வேற்றுமையுருபுகள் யாவை? அம்மூன்றாம்வேற்றுமை யுருபுகளுக்குப் பொருளென்னை? அந்நான்குருபுகளுள், எவ்வெவ்வுருபுகட்கு அம்மூன்றுபொருள்களுள் எவ்வெப்பொருள் சிறந்தன? கருவிப்பொருளாவதியாது? அக்கருவி எத்தனைவகைப்படும்? முதற்கருவியாவதியாது? துணைக்கருவியாவதியாது? இன்னும் அக்கருவிப்பொருள் எவ்வாறு வரும்? எழுவாய்க் கருத்தாவிற்கும் மூன்றனுருபின் கருத்தாவிற்கும் வேறுபாடென்னை? வினைமுதல் எத்தனை வகைப்படும்? இயற்றும் வினைமுதலாவதியாது? ஏவும் வினைமுதலாவதியாது? உடனிகழ்ச்சிப் பொருளாவதியாது? அவ்வுடனிகழ்ச்சிப்பொருள் எத்தனை வகைப்படும்? தலைமைப்

பொருளாவதியாது? தலைமையில் பொருளாவதியாது? ஆல் ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளில் வாராவோ? ஓடு ஒடு உருபுகள் வினைமுதற்பொருள் கருவிப்பொருள்களில் வாராவோ? ஆல் ஆன் உருபுகள் கருவி முதலிய மூன்று பொருள்களிலன்றி வேறு பொருளில் வாராவோ? ஓடு ஒடு உருபுகள் வேறு பொருளில் வாராவோ? 41. நான்காம்வேற்றுமையுருபியாது? அந்நான்காம்வேற்றுமையுருபிற்குப் பொருளென்னை? கோடற்பொருளாவதியாது? கோடல் எத்தனை வகைப்படும்? கொடுத்தல் எத்தனை வகைப்படும்? பகை தொடர்பொருளாவதியாது? நட்புத் தொடர்பொருளாவதியாது? தகுதியுடைப்பொருளாவதியாது? முதற்காரணகாரியப் பொருளாவதியாது? நிமித்தகாரண காரியப்பொருளாவதியாது? முறைக்கு இயை பொருளாவதியாது? குவ்வுருபு வேறு பொருளில் வாராதோ? 42. ஐந்தாம் வேற்றுமையுருபுகள் யாவை? அவ்வைந்தாம் வேற்றுமையுருபுகளுக்குப் பொருளென்னை? நீக்கப்பொருளாவதியாது? ஒப்புப்பொருளாவதியாது? எல்லைப்பொருளாவதியாது? ஏதுப்பொருளாவதியாது? ஐந்தனுருபுகள் வேறுபொருளில் வாராவோ? 43. ஆறும் வேற்றுமையுருபுகள் யாவை? அவ்வாறும்வேற்றுமையுருபுகளுக்குப் பொருளென்னை? தற்கிழமைப்பொருளாவதியாது? பிறிதின்கிழமைப்பொருளாவதியாது? ஆறனுருபு வேறு பொருளில் வருதலின்றோ? அதுவுருபு வருமொழி யஃறிணையொருமைக்கன்றி அஃறிணைப்பன்மை உயர்திணையொருமை பன்மைகளுக்கு வருதலின்றோ? 44. ஏழாம்வேற்றுமையுருபுகள் யாவை? அவ்வேழாம் வேற்றுமையுருபுகளுக்குப் பொருளென்னை? இடப்பொருளுக்கிலக்கணம் வடநூலார் எவ்வாறு கூறுவர்? இடப்பொருள் எத்தனை வகைப்படும்? ஏழனுருபுகள் இடப்பொருளிலன்றி வேறுபொருளில் வாராவோ? 45. கண் முதலிய உருபுகளென்றவையெவை? 46. எட்டாம்வேற்றுமையுருபுகள் யாவை? அவ்வெட்டாம் வேற்றுமையுருபுகட்குப் பொருளென்னை? 47. எவ்வெப்பெயர்கள் விளியுருபேற்கும்? 48. இம்மூப்பெயர்க்கும் பெரும்பாலும் பொதுப்படவரும் விளியுருபுகளெவை? 49. ஐகாரவீற்றும்பொதுப்பெயர்க்கு மற்றும்

எவை விளியுருபாம்? ஐகாரவீற்றுயர்திணைப்பெயர் அஃறிணைப் பெயர்கட்கு மற்றுமெவை விளியுருபாம்? 50. ணகரவீற்றுயர் திணைப்பெயர்க்கு மற்றுமெவைவிளியுருபாம்? 51. ளகரவீற்றுயர் திணைப்பெயர்க்கு மற்றுமெவை விளியுருபாம்? 52. ரகரவீற் றுயர்திணைப்பெயர்க்கு மற்றுமெவை விளியுருபாம்? 53. லகர வீற்றுயர்திணைப்பெயர்க்கு மற்றுமெவை விளியுருபாம்? யகர வீற்றுயர்திணைப் பெயர்க்கு மற்றுமெது விளியுருபாம்? 54. ணகரவீற்றஃறிணைப்பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும் மற்றுமெவை விளியுருபாம்? 55. லளவீற்றஃறிணைப்பெயர்க் கும் பொதுப்பெயர்க்கும் மற்றுமெது விளியுருபாம்? 56. இவ் விளியுருபுகளுள் எவ்வெவ்விளியுருபுகள் எவ்வெவ்விடத்தில் வரும்? 57. இவ்விளியுருபுகளையேலாது நிற்கும் பெயர்களும் உளவோ? 58. முதலுஞ் சினையுந் தொடர்ந்து வரும்போது, அவ்விரண்டன் பாலும் ஐயுருபு வருமோ? 59. முதல்சினை யிரண்டன்பாலும் ஐயுருபு வாராமைக்குக் காரண மென்னை? பிண்டப்பொருளும் பிண்டித்தபொருளுந் தொடரும்போது, அவ்விரண்டன்பாலும் ஐயுருபு வருமோ? 60. ஒருவேற்றுமைப் பொருள் மற்றொருவேற்றுமையுருபாற்சொல்லப்பட்டதாயின். யாதுசெய்தல் வேண்டும்? வினைமுதற்பொருள் எழுவாயோடும் மூன்றனுருபோடு மன்றி மற்றை வேற்றுமையுருபுகளோடு வருதலின்றே? செயப்படுபொருள் இரண்டனுருபோடன்றி மற்றைவேற்றுமையுருபுகளோடு வருதலின்றே? கருவிப் பொருள் மூன்றனுருபு ஐந்தனுருபுகளோடன்றி மற்றை வேற்றுமை யுருபுகளோடு வருதலின்றே? கோடற்பொருள் நான்கனுருபோடன்றி மற்றைவேற்றுமை யுருபுகளோடு வருத லின்றே? ஐந்தாம் வேற்றுமைப்பொருள்கள் மற்றை வேற்றுமை யுருபுகளோடு வருதலின்றே? சம்பந்தப்பொருள் ஆறனுருபோடன்றி மற்றைவேற்றுமையுருபுகளோடு வருத லின்றே? இடப்பொருள் ஏழனுருபோடன்றி மற்றைவேற் றுமையுருபுகளோடு வருதலின்றே? 61. ஐம்முதலிய ஆறுருபுகளுஞ் செய்யுளிற் றிரிதலுமுண்டோ? 62. உருபு களுள், பெயரைக்கொண்டு முடிவன எவை? வினையைக்

கொண்டு முடிவன எவை? இருமையையுங்கொண்டு முடிவன எவை? வினைகொளற்குரியன பிற கொண்டு முடிதலின்றே? எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றிப் பிறகொண்டு முடிதலின்றே? வினைகொண்டு முடியும் வேற்றுமைகள் எங்ஙனம் பெயர் பெறும்? ஆறும்வேற்றுமை தொழிற்பெயர் கொண்டவிடத்து அப்பெயர் பெறுதலின்றே?

பெயரியல் முற்றிற்று.

---

# 2. வினையியல்

---

## வினைச்சொல்

[தெரிநிலைவினைச் சொல்லின் பொதுவிலக்கணம்.]

**320.** செய்பவன் கருவி நிலஞ்செயல் காலஞ்
செய்பொரு ளாறுந் தருவது வினையே.

**இ - ள்.** செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் ஆறும் - கருத்தாவுங் காரணமும் இடமுஞ் செயலுங் காலமுஞ் செயப்படுபொருளுமாகிய அறுவகைப் பொருளையும்—தருவது வினை - தருவது தெரிநிலை வினைச்சொல்லாம். எ - று.

வினையென்றது ஆகுபெயர்.

நட வா முதலிய எல்லாந் தழுவுதற்குச் செய்யென்றார்.

செய்பவனென ஆண்பாலிலே சொன்னாரேனும், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால் ஐம்பாலுங், கொள்க.

**உ - ம்.** வனைந்தான் என்புழிக், குயவனாகிய செய்பவனும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டசக்கர முதலிய துணைக் காரணங்களும், வனைதற் காதாரமாகிய இடமும், வனை

தற்கு முதற்காரணமாகிய செயலும், இறந்தகாலமுங் கூட முதலாகிய செயப்படுபொருளுந் தோன்றுதல் காண்க.

ஆறும் என்னு முற்றும்மையை உயர்வு சிறப்பும்மையாக்கி, இழிந்தன சிலவுள அவையும் வேண்டுமேற் கொள்க எனப் பொருளுரைத்து, இன்னதற்கு, இதுபயன், என்பவைகளுங் கூட்டிக்கொள்க. அவை: பிறர்க்கு வினைந்தான்; பொருள் கருதிவினைந்தான் எனவரும். இவ்விரண்டும், ஏதுவின்பாற்பட்டுக் கருவியுள் அடங்கவும் பெறுமாதலால், இழிந்தனவாயின.

இன்னும் ஆறுந்தருவது வினையென்றதற்கு "முற்றும்மையோரோவழி யெச்சமு மாகும்" என்னுஞ் சூத்திரத்தால் இத்தொகையிற் சில குறைந்து வரவும் பெறும் எனப் பொருளுரைத்துக் கொள்க. கொடியாடிற்று என்புழி, ஆடுதல் வினைக்குச் செயப்படுபொருள் குறைந்து வந்தது.

முற்றுவினைகளிலே பகுதியாற் செயலும், விகுதியாற் செய்பவனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களிலே இம்முறையே செயலுங் காலமும் வெளிப்படையாகவும், மற்றவை குறிப்பாகவுந் தோன்றுமெனக் கொள்க. (1)

[குறிப்புவினைச்சொல்லின் பொதுவிலக்கணம்.]

**321. பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னறனுள்**
**வினைமுதன் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே.**

இ - ள். பொருள் முதல் ஆறினும் தோற்றி - பொருளாதியாறும் முதனிலையடியாக அவற்றினிடத்தே பிறந்து—முன் ஆறனுள் வினைமுதல் மாத்திரை விளக்கல் - முன் சொல்லப்பட்ட செய்பவன் முதலாகிய ஆறனுட் கருத்தாவொன்றையுமே விளக்குதல்—வினைக்குறிப்பு - வினைக்குறிப்புச் சொல்லிலக்கணமாம். எ - று.

வ - று. குழையினன், பொன்னினன். எ-ம். அகத்தினன், புறத்தினன். எ-ம். ஆதிரையான், ஓணத்தான். எ-ம். குறுந்

தாளன், செங்கண்ணன். எ-ம். கரியன், நல்லன். எ-ம். கடு நடையன், இன்சொல்லன். எ-ம். வரும். இவற்றுள் விகுதியாற் செய்பவன் விளங்கிற்று; மற்றவைகள் குறிப்பாக உண்டெனக் கொள்க. ஒன்றைக் குழையினன், ஒன்றாற் குழையினன் என வாராமையால், குழையினன் என்பதற்குச் செயப்படுபொருளுங் கருவியுமில்லை எனவும், ஒன்றையுடையன் ஒன்றாலுடையன் என வருதலால், உடையன் என்பதற்கு ஆறும் உண்டெனவுங் கொள்க.

இவை, பொருளாதியாறால் ஒருபொருளை வழங்குதற்கு வரும் பெயராய் நில்லாது; குழையையுடையனாயினன், ஆகின்றான், ஆவான். எ-ம். அகத்தின்கணிருந்தான், இருக்கின்றான், இருப்பான். எ-ம். ஆதிரைநாளிற்பிறந்தான், பிறக்கின்றான், பிறப்பான். எ-ம். குறுந்தாளையுடையனாயினன், ஆகின்றான்; ஆவான். எ-ம். கருவண்ணமாயிருந்தான், இருக்கின்றான், இருப்பான். எ-ம். கடுநடையாக நடந்தான், நடக்கின்றான், நடப்பான். எ-ம். வருதலால் வினைக்குறிப்புச் சொல்லாயின. இவை முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்குரிய பெயராய் வரின், அவை குறிப்புவினையாலணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமையென்க. (2)

[வினைச்சொற்களை வகுத்தல்.]

**322.** அவைதாம்,—

**முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி**
**ஒன்றற் குரியவும் பொதுவு மாகும்.**

**இ-ள்.** அவை தாம் - முன்னிரண்டு சூத்திரங்களானுந் தெரிநிலையாயுங் குறிப்பாயும் வருமென்ற வினைச்சொற்கள்—முற்றும் பெய (ரெச்சமும்) வினையெச்சமும் ஆகி - முற்றுவினைச்சொற்களும் பெயரெச்சவினைச் சொற்களும் வினையெச்சவினைச் சொற்களுமாகி—ஒன்றற்கு உரியவும்

பொதுவும் ஆகும் - திணைபாலிடங்களுள் ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும் பலவற்றிற்குப் பொதுமையில் நிற்பனவுமாகும். எ - று.

இவற்றிற்கு உதாரணந் தத்தஞ்சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

இனி "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால், பிறவழியால் ஒன்றற் குரியவும் பொதுவுமாய் நிற்பனவுஞ் சிலவுளவெனக் கொள்க.

வ - று. (1.) நடந்தான் தன்வினை; நடத்தினன் பிறவினை; வெளுத்தான் தன்வினைபிறவினை யிரண்டற்கும் பொதுவினை.

(2.) நடந்தான் விதிவினை; நடவான் மறைவினை; சாவான், வேவான் விதிவினை மறைவினை யிரண்டற்கும் பொதுவினை.

(3.) உண்டான் செய்வினை; உண்ணப்பட்டது செயப்பாட்டுவினை; புலிகொன்ற யானை, மீன்விழுங்கினவன் செய்வினை செயப்பாட்டுவினை யிரண்டற்கும் பொதுவினை.

(4.) தேடிய சாத்தன், தேடிய வந்தான் எனச் சொல்லொன்றே பெயரெச்சம் வினையெச்சமிரண்டற்கும் பொதுவாயின. இவைபோல்வன பிறவுமன்ன. (3)

**பரீக்ஷை வினாக்கள்:**—1. தெரிநிலைவினைச் சொல்லாவதியாது? வினைநிகழ்ச்சிக்குக் கருத்தா முதலிய ஆறுகாரணங்களுமன்றிப் பிறகாரணங்களுமுளவோ? எல்லாவினைகளுக்குங் கருத்தா முதலிய ஆறுங் குறையாது வருமோ? கருத்தா முதலிய ஆறுந்தெரிநிலைவினைச் சொற்களில் எவ்வாறு தோன்றும்? 2. குறிப்பு வினைச்சொல்லாவதியாது? கருத்தா முதலிய ஆறுங் குறிப்பு வினைச்சொற்களில் எவ்வாறு தோன்றும்? குறிப்புவினைச் சொற்களிற் கருத்தா முதலிய ஆறுமுண்டோ? குழையினன் முதலியன எப்போது பெயராய் வரும்? எப்

போது குறிப்பு வினையாய் வரும்? எப்போது குறிப்புவினையா லணையும் பெயராய வரும்? 3. தெரிநிலைவினைச்சொல்லுங் குறிப்புவினைச் சொல்லுந் தனித்தனி எததனைவகைப்பட்டு எவ்வாறு வழங்கும்? வினைச்சொற்கள் திணைபாலிடங்களிலன் றிப் பிறவழியிலும் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பன வுளவோ?

## முற்றுவினை

[முற்றுவினை இனையவென்பது.]

**323. பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்**
**முதலறு பெயரல தேற்பில முற்றே.**

**இ - ள்.** பொது இயல்பு ஆறையும் தோற்றி - பல வகை வினைகளுக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறையுந் தோன்றச்செய்து—பொருட்பெயர் முதல் அறுபெயர் - பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி—அலது ஏற்பு இல- மற்றொன்றைபுமேலாதன—முற்று - முற்றுவினை வினைக் குறிப்புக்களாம். எ - று.

**வரலாறு.**

(1.) தெரிநிலைவினைமுற்று:—

பெய்தானவன்............பொருட்பெயர் கொண்டது.
குளிர்ந்தது நிலம்.........இடப்பெயர் கொண்டது.
வந்ததுகார்................காலப்பெயர் கொண்டது.
குவிந்தது கை............சினைப்பெயர் கொண்டது.
பரந்தது பசப்பு..........குணப்பெயர் கொண்டது.
ஒழிந்தது பிறப்பு........தொழிற்பெயர் கொண்டது.

(2.) குறிப்புவினைமுற்று:—

நல்லனவன்..............பொருட்பெயர் கொண்டது.
நல்லது நிலம்...........இடப்பெயர் கொண்டது.

நல்லது கார்...........காலப்பெயர் கொண்டது.
நல்லது கை...........சினைபெயர் கொண்டது.
நல்லது பசப்பு... .....குணப்பெயர் கொண்டது.
நல்லது பிறப்பு ........தொழிற்பெயர் கொண்டது. (4)

மற்றைத் திணைபாலிடங்காலங்களோடும் ஒட்டுக.

[தெரிநிலைவினைமுற்று விகற்பம்.]

**324.** ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினு
முக்கா லத்தினு முரண முறையே
மூவைந் திருமூன் றுருய் முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பானும்.

**இ - ள்.** ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கையிடத்தும் - ஆண்பான் முதலாகிய ஐம்பால்வினைமுற்றுக்களையும் படர்க்கையிடத்திலும்—ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும் - ஒருமைவினைமுற்றையும் பன்மைவினை முற்றையுந் தன்மையிடத்திலும் முன்னிலையிடத்திலும் வைத்து—முக்காலத்தினும் முரண - முக்காலங்களானும் மாற—முறையே - சொல்லப்பட்ட முறையே—மூவைந்து- படர்க்கைவினைமுற்றுக்கள் பதினைந்தும் — இருமூன்று - தன்மைவினைமுற்றுக்கள் ஆறும்—ஆறு - ஆய் முன்னிலை வினைமுற்றுக்கள் ஆறும் ஆகி—முற்றுவினைப்பதம் ஒன்றே மூவொன்பான் ஆம்-தெரிநிலைவினைமுற்றுப்பதமொன்றுமே இருபத்தேழாகும். எ - று.

வ - று. (1.) நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன. இவை இறந்தகாலவினைமுற்று - 5. நடக்கின்றான், நடக்கின்றாள், நடக்கின்றார், நடக்கின்றது, நடக்கின்றன. இவை நிகழ்காலவினைமுற்று - 5. நடப்பான், நடப்பாள், நடப்பார், நடப்பது, நடப்பன.

இவை எதிர்காலவினைமுற்று - 5. ஆக படர்க்கை வினைமுற்று - 15.

(2.) நடந்தேன், நடந்தேம் இவை இறந்தகால வினைமுற்று - 2. நடக்கின்றேன், நடக்கின்றேம் இவை நிகழ்காலவினைமுற்று - 2. நடப்பேன், நடப்பேம் இவை எதிர்கால வினைமுற்று-2. ஆக தன்மைவினைமுற்று - 6.

(3.) நடந்தாய், நடந்தீர் இவை இறந்தகால வினைமுற்று - 2. நடக்கின்றாய், நடக்கின்றீர் இவை நிகழ்காலவினைமுற்று-2. நடப்பாய், நடப்பீர் இவை எதிர்காலவினைமுற்று-2. ஆக முன்னிலை வினைமுற்று-6.

ஆக வகை மூன்றுக்கும் முற்றுவினை - 27. (5)

[ஆண்பாற்படர்க்கை வினைமுற்று.]

**325. அன் ஆ னிறுமொழி யாண்பாற் படர்க்கை.**

இ - ள். அன் ஆன் இறுமொழி-அன் ஆன் என்னும் இருவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள்—ஆண்பாற்படர்க்கை உயர்திணையாண்பாற்படர்க்கைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ - று.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| நடந்தனன் | நடக்கின்றனன் | நடப்பன் | குழையன் | அவன். |
| நடந்தான் | நடக்கின்றான் | நடப்பான் | குழையான் | |

மற்றவைகளும் இப்படியே வரும். (6)

[பெண்பாற்படர்க்கை வினைமுற்று.]

**326. அள் ஆ ளிறுமொழி பெண்பாற் படர்க்கை.**

இ - ள். அள் ஆள் இறுமொழி - அள் ஆள் என்னும் இரண்டுவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள்—பெண்

பாற் படர்க்கை - உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம். எ - று.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| நடந்தனள் | நடக்கின்றனள் | நடப்பள் | குழையள் | அவள். |
| நடந்தாள் | நடக்கின்றாள் | நடப்பாள் | குழையாள் | |

மற்றவைகளும் இப்படியே வரும். (7)

[பலர்பாற்படர்க்கை வினைமுற்று.]

**327.** அர் ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.

இ - ள். அர் ஆர் பவ்வூர் அகரம் மார் ஈற்ற - அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள்—பல்லோர் படர்க்கை - உயர்திணைப் பலர்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம்—மார் வினையொடும் முடிமே - இவற்றுள் மாரீற்று வினைமுற்றுப் பொது விதியாற் பெயருடன் முடிவதன்றி வினையுடனும் முடியும். எ - று.

"மாரெதிர்வும் பார்தந் செலவொடு வரவும்" எனப் பதவியலுட் கூறினமையால், இவ்விருவிகுதியுங் குறிப்புவினைமுற்றிலே வாராவென்க.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| நடந்தனர் | நடக்கின்றனர் | நடப்பர் | குழையர் | அவர். |
| நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் | குழையார் | |

நடப்ப, எய்துப, மொழிப அவர் எனப் பவ்விகுதி வரும்.

"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப் - பீடின்று பெருகிய திருவிற் - பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" என

மாரீற்று வினைமுற்றுப் பெயருடன் முடிந்தது. பாடன்மார் என்பது பாடுவாரல்லர் எனப் பொருள்படும்; அது எதிர்மறையிடைநிலை.

"ஆர்த்தார் கொண்மார் வந்தார்" என மாரீற்று வினைமுற்று வினையொடு முடிந்தது. கொண்மார் என்பது கொள்வார் எனப்பொருள்படும். (8)

[ஒன்றன்பாற்படர்க்கை வினைமுற்று.]

**328.** து று டுக் குற்றிய லுகர வீற்ற
ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பி னாகும்.

இ - ள். து று டுக் குற்றியலுகர ஈற்ற - து று டு என்னு மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகரவீற்றுமொழிகள்—ஒன்றன் படர்க்கை - அஃறிணையொன்றன்பாற் படர்க்கைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம்—டுக் குறிப்பின் ஆகும் - இவற்றுள் டுவ்விகுதி குறிப்புவினை முற்றிலன்றித் தெரிநிலைவினைமுற்றில் வாராது. எ - று.

றுவ்விகுதி இறந்தகால இடைநிலையோடுமாத்திரங் கூடி வருமெனக்கொள்க.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| நடந்தது | நடக்கின்றது | நடப்பது | குழையது | அல். |
| கூயிற்று | ——— | ——— | அற்று | |
| ——— | ——— | ——— | பொருட்டு | |

றுவ்விகுதி, வந்தன்று, உண்டன்று, சென்றன்று எனத் தடற வொற்றிடைநிலைகளின் முன்னும், புக்கன்று, விட்டன்று, பெற்றன்று என விகாரப்பட்டிறந்த காலங்காட்டும் கு டு று வீற்றுப் பகுதிகளின் முன்னும், அன்சாரியை பெற்று வரும். இவை, முறையே வந்தது, உண்டது, சென்றது, புக்கது, விட்டது, பெற்றது எனப் பொருள் படும். றுவ்விகுதி, கூயிற்று, ஓடிற்று என இன்னிடை

நிலையின் முன் மாத்திரஞ் சாரியைபெறாது வரும். தந்தின்று என றுவ்விகுதி தகரவிடைநிலையின் முன் இன் சாரியை பெற்றதன்றோ எனின்; அன்று. அது தந்தன்று என்னும் உடன்பாட்டுவினையை மறுத்தற்குத் தகர இடைநிலைக்கும் றுவ்விகுதிக்கும் இடையே இல்லென்னும் எதிர்மறையிடைநிலை ஏற்றுவந்த மறைவினையென்றறிக. தந்தின்று தந்ததில்லையெனப் பொருள்படும்.

அற்று, இற்று, எற்று என்பவை, சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்பு முற்றுக்கள். இவை முறையே அத்தன்மைத்து, இத்தன்மைத்து, எத்தன்மைத்து எனப் பொருள்படும். (9)

[பலவின்பாற்படர்க்கை வினைமுற்று.]

**329. அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை**
**ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்.**

இ - ள். அ ஆ ஈற்ற - அ ஆ என்னும் இருவிகுதிகளை யிறுதியிலுடைய மொழிகள்—பலவின் படர்க்கை - அஃறிணைப் பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்று மாம்—ஆ எதிர்மறைக் கண்ணது ஆகும் - அவற்றுள் ஆகாரம் எதிர்மறையினிடத்து வருமன்றி உடன்பாட்டினிடத்து வாராது. எ - று.

ஆவேயெதிர்மறைக்கண்ணதாகும் என்றதனால், மற்றைவிகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருமென்பது பெற்றாம்.

அகரவிகுதி அன்சாரியை பெற்றும் பெறாதும் வரும்.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| நடந்தன | நடக்கின்றன | நடப்பன | கரியன | அவை. |
| நடந்த | நடக்கின்ற | நடப்ப | கரிய | |

நடந்தில, நடவாநின்றில, நடவா—அவை.

இல்லன, இல்ல என்னும் எதிர்மறைவினைக்குறிப்புமுற்றின் கட் பகுதியே, எதிர்மறைப் பொருள் தந்துநிற்றலின், இதற்கெதிர்மறையாகாரம் வேண்டாமையின், ஏற்புழிக் கோடலென்னும் உத்தியால், இவ்வெதிர்மறைவிகுதி தெரிநிலைக்கே கொள்க.

இங்கே காட்டிய அன் பெறுத நடப்ப என்னும் பலவறி சொல்லின் இறுதி நோக்கி, உயர்திணைப் பன்மைப் படர்க்கைக்கும் அஃறிணைப்பன்மைப் படர்க்கைக்கும் பொது வினையெனக் கொள்ளாதொழிக. இதனுட் பகரவொற்று எதிர்காலவினையிடைநிலையாதலால், இத்தொடக்கத்தன வெல்லாம் பலபொருளொரு சொல்லென் றுணர்க. (10)

[இருதிணைப்பொதுவினை]

**330.** **தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை**
**உண்டு ரெச்ச மிருதிணைப் பொதுவினை.**

இ - ள். தன்மை - தன்மைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும்—முன்னிலை - முன்னிலைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும்—வியங்கோள்-வியங்கோள் வினைமுற்றுக்களும்—வேறு இலை உண்டு - வேறு இல்லை உண்டு என்னு மூன்று வினைக்குறிப்புமுற்றுக்களும்—ஈரெச்சம் - பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களும் வினையெச்சவினை வினைக்குறிப்புக்களும் — இருதிணைப்பொதுவினை - உயர்திணை அஃறிணை என்னும் இருதிணைக்கும் பொதுவினைகளாம். எ - று.

செய்யுமென்னும் பெயரெச்சமே செய்யுமென்னு முற்றாதலால், அம்முற்றும் இருதிணைப்பொதுவினையாமென்பது தானே தோன்றுதல் காண்க. (11)

[தன்மையொருமை வினைமுற்று]

**331.** **கு டு து று வென்னுங் குன்றிய லுகரமோ**
**டல்லன் னென்னே னாகு மீற்ற**
**இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.**

இ - ள். கு டு து று என்னும் குன்றியலுகரமோடு - கு டு து று என்னுங் குற்றியலுகர விகுதிகளும்—அல் அன் என் ஏன் ஆகும்-அல் அன் என் ஏன் என்னும் நான்குமெய்யீற்று விகுதிகளும் ஆகிய—ஈற்ற - இவ்வெட்டுவிகுதிகளையும் இறுதியிலேயுடைய மொழிகள்—இருதிணைமுக்கூற்று ஒருமைத்தன்மை - இருதிணையிடத்தனவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்றுஎன்னும்மூன்று பால்களுக்குப்பொதுவாகிய ஒருமைத்தன்மைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ - று.

கு டு து று என்னும் நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்புவினைக்கு வாரா. அல்விகுதி எதிர்கால இடைநிலைகளோடு மாத்திரம் வரும்.

வரலாறு.

| இ. தெரி. | எ. தெரி. | |
|---|---|---|
| ——— | உண்கு | யான். |
| உண்டு | ——— | |
| வந்து | வருது | |
| சென்று | சேறு | |
| ——— | உண்பல் | |

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| உண்டனன் | உண்ணாநின்றனன் | உண்பல் | தாரினன் | யான். |
| உண்டனென் | உண்ணாநின்றனென் | உண்பென் | தாரினென் | |
| உண்டேன் | உண்ணாநின்றேன் | உண்பேன் | தாரினேன் | |

மற்றவைகளும் இப்படியே வரும். (12)

[தன்மைப்பன்மை வினைமுற்று.]

332. அம்மா மென்பன முன்னிலை யாரையும்
எம்மே மோமிவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற விருபா லாரையுந்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.

இ-ள். தந்நிலையின் நிற்பதன்றி—அம் ஆம் என்பன முன்னிலையாரையும் - அம் ஆம் என்னும் இவ்விரு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலையிடத்தாரையும்—எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும் - எம் ஏம் ஓம் என்னும் இம்மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் படர்க்கையிடத்தாரையும்—உம் ஊர் க ட த ற இருபாலாரையும் - கும் டும் தும் றும் என்னும் இந்நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை என்னும் ஈரிடத்தார்களையும்—தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை - தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைவினை முற்றுங் குறிப்புமுற்றுமாம். எ-று.

கும் டும் தும் றும் என்னும் நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்புவினைக்கு வாரா.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| உண்டனம் | உண்கின்றனம் | உண்பம் | தாரினம் | யாம் |
| உண்டாம் | உண்கின்றாம் | உண்பாம் | தாரினும் | யானுநீயும், |
| உண்டெனம் | உண்கின்றெனம் | உண்பெம் | தாரினெம் | யாம். |
| உண்டேம் | உண்கின்றேம் | உண்பேம் | தாரினேம் | யானு |
| உண்டோம் | உண்கின்றோம் | உண்போம் | தாரினோம் | மவனும். |

| இ. தெரி. | எ. தெரி. | |
|---|---|---|
| ——— | உண்கும் | யாம். |
| உண்டும் | ——— | யானு நீயு மவனும். |
| வந்தும் | வருதும் | |
| சென்றும் | சேறும் | |

இவை சிறுபான்மை இம்முறையின்றி மயங்கி வருதலுமுண்டு மற்றவைகளும் இப்படியே வரும். (13)

[வினையுடனு முடியுந் தன்மை வினைமுற்றுக்கள்.]

**333.** செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

இ - ள். செய்கு என் ஒருமையும் - செய்கென்னுந் தன்மை யொருமைமுற்றும்—செய்கும் என் பன்மையும் - செய்குமென்னுந் தன்மைப்பன்மைமுற்றும்—வினையொடும் முடியினும் - பெயருடனேயன்றி வினையொடும் முடியினும்—விளம்பிய முற்றே - முன்சொல்லப்பட்ட முற்றுக்களேயாம். எ - று.

வ - று. உண்கு வந்தேன், உண்கும் வந்தேம் என வரும். (14)

[உளப்பாட்டுப் பன்மைமுன்னிலை.]

**334. முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை.**

இ - ள். தன்மையோடு கூடிய முன்னிலைபடர்க்கைகள் தன்மையானாற்போல—முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை - முன்னிலையோடுகூடிய படர்க்கையும் முன்னிலையாம். எ - று.

வரலாறு.

| | | |
|---|---|---|
| உண்டனிர் | குழையினிர் | நீயுமவனும். |
| உண்டீர் | குழையீர் | |
| உண்மின் | ———— | |

இச்சூத்திரம் முன்னிலைப் பன்மைமுற்றுக் கூறியவழியே கூறாது, ஒன்றினமுடித்தல்தன்னினமுடித்தல் என்னும் உத்தியால் இங்கே கூறப்பட்டது. (15)

[முன்னிலையொருமை வினைமுற்று.]

**335. ஐயா யிகர வீற்ற மூன்றும்**
**ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவும்**
**முப்பா லொருமை முன்னிலை மொழியே.**

இ - ள். ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும் - ஐ ஆய் இ என்னும்மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும்—ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும் - விகுதி குன்றுதங்

குன்றியும் நிற்பனவாகிய ஏவலிலே வரும் இருபத்து மூன்றீற்று மொழிகளும்—முப்பால் ஒருமை முன்னிலை மொழி - ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று பால் களுக்கும் பொதுவாகிய முன்னிலையொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ - று.

இகரவிகுதி எதிர்காலத்தை இடைநிலையின்றித் தானே காட்டுதல் பதவியலிற் பெறப்பட்டது.

ஏவல்வினைமுற்றுத் தெரிநிலைவினையொன்றற்கே யுரிமையின், உம்மை கொடுத்துப் பிரித்தார்.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையினை | நீ. |
| உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் | |
| உண்டி | உண்ணாநின்றி | சேறி | வில்லி | |

ஆய், இ, அல், ஏல், ஆல் என்னும் விகுதிகளை இறுதியில் உடைய வினைச்சொற்களும், ஆய்விகுதி புணர்ந்து குன்றிப் பகுதி மாத்திரையாய் நிற்கும் வினைச்சொற்களும், முன்னிலையேவ லொருமைத் தெரிநிலைவினை முற்றுக்களாம்.

இவற்றுள், அல், ஏல், ஆல் என்னும் மூன்று விகுதிகளும் எதிர்மறையிடத்து வரும்.

வரலாறு.

| | | | |
|---|---|---|---|
| உண்ணாய் | உண்ணுதி | உண் | நீ. |
| உண்ணல் | உண்ணேல் | மறால் | |

எதிர்மறையேவலொருமை வினைமுற்றுக்கள், உண்ணாதே, உண்ணாதி என, எதிர்மறை ஆகார இடைநிலையின்முன் தகரவெழுத்துப்பேற்றோடு, ஏகாரவிகுதி இகரவிகுதிக ளுள் ஒன்று பெற்றும், வரும். (16)

**336.** முன்னிலை முன்னர் ஈயு மேயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.

இ - ள். முன்னிலை முன்னர் - முன்னிலையேவன் முற்றென முன்சொல்லப்பட்டவற்றிற்கு முன்—ஈயும் ஏயும் - ஈகாரமும் ஏகாரமும்—அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வரும்- அவ்விடத்து நிற்றற்குரிய மரபினையுடைய யாதானுமொரு மெய்யை யூர்ந்து வரும். எ - று.

உ - ம். "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே." எ-ம். "அட்டிலோலை தொட்டனை நின்மே." எ-ம். வரும். இவ்வீகார ஏகாரங்கள் விகுதிகளல்ல; ஆய்விகுதி குறைந்த ஏவலில் வரும் முன்னிலையசையாம். இங்கே, ஈயும் ஏயும் முறையே றகரவொற்றையும் மகரவொற்றையும் ஊர்ந்து வந்தன. றகரவொற்றும் மகரவொற்றும் எழுத்துப்பேறு. (17)

[முன்னிலைப்பன்மை வினைமுற்று.]

337. இர் ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல்.

இ - ள். இர் ஈர் ஈற்ற இரண்டும் - இர் ஈர் என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள்—இருதிணைப் பன்மை முன்னிலை - இருதிணைக்கும் பொதுவாகிய பன்மைமுன்னிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம்—மின் அவற்று ஏவல் - மின்விகுதியை இறுதியிலுடைய மொழிகள் முன்னிலைப்பன்மையேவன்முற்றும். எ - று.

மின்விகுதியன்றி, ஈர் உம் விகுதிகளும் முன்னிலைப்பன்மையேவலுக்கு வருமெனக் கொள்க.

வரலாறு.

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| உண்டனிர் | உண்கின்றனிர் | உண்பிர் | குழையினிர் | நீர். |
| உண்டீர் | உண்கின்றீர் | உண்பீர் | குழையீர் | |

உண்மின், உண்ணீர், உண்ணும் என ஏவல்வினைமுற்று வந்தன. (18)

[வியங்கோள் வினைமுற்று.]

**338. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப.**

இ - ள். கயவொடு ரவ்வொற்று ஈற்ற வியங்கோள்- கயவென்னும் இரண்டுயிர்மெய்யினையும் ரகரமெய்யினையும் இறுதியிலுடைய மொழிகள் வியங்கோண்முற்றுக்களாம்— இடம் பால் எங்கும் இயலும் என்ப - அவை மூன்றிடங் களிலும் ஐம்பால்களிலுஞ் செல்லும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

**வரலாறு.**

| | | | |
|---|---|---|---|
| வாழ்க | உண்க | ஆடுக | யான், யாம், நீ, நீர், |
| வாழிய | உண்ணிய | ஆடிய | அவன், அவள், அவர், |
| வாழியர் | உண்ணியர் | ஆடியர் | அது, அவை. |

உரையிற் கோடலென்னும் உத்தியால், "நான்மறை யறங்க ளோங்க நற்றவம்வேள்விமல்க." "மக்கட்பதடியெனல்." "மனத்துக்கண் மாசிலனாதல்" என அ, அல், தல் என் பனவும் வியங்கோள் விகுதிகளாய் வருமெனக்கொள்க.

வியங்கோள் வினைமுற்று: ஆறிரு தடந்தோள் வாழ்க அறு முகம் வாழ்க." என வாழ்த்துதற்பொருளிலும்; நடக்க, வருக, உண்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது, செய்கவென விதித்தற்பொருளிலும், "போற்றி யருளுக நின் னாதியாம் பாதமலர்" என வேண்டிக்கோடற்பொரு ளிலும், "பரந்து கெடுக வுலகியற்றியான்" என வைதற் பொருளிலும், வருமெனக் காண்க. விதித்தற்பொருள் தன்மையில் வாராது (19)

[வேறு, இல்லை, உண்டு.]

**339. வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன.**

இ - ள். வேறு இல்லை உண்டு - வேறு இல்லை உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும்—ஐம்பால்

மூவிடத்தன - ஐம்பாலுக்கும் மூவிடத்திற்கு முரியனவாம். எ - று.

உ - ம். யான் வேறு, யாம் வேறு, நீ வேறு, நீர் வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு, அவை வேறு. இல்லை, உண்டு என்பனவற்றையும் மூவிடப்பெயர் களோடும் ஒட்டுக. இல்லையென்பது சிறுபான்மை இல் என நிற்றலுமுண்டு.

இனி, மொழிந்த பொருளோடன்ற வவ்வயின் மொழியா ததனையு முட்டின்று முடித்தலென்னும் உத்தியால், வேண்டும், தகும், படும் என்னுஞ் சொற்களும் ஐம்பான்மூவிடத்துக்கும் பொதுவாமெனக் கொள்க. இம்மூன்றும் ஒருபொருட்சொற்க ளாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள் பட்டே நிற்கும்.

உ - ம். அவரோதல்வேண்டும்; நீ போதல்வேண்டும்; யானுண் ணல் வேண்டும். எ-ம். இச்சோறுண்ணத்தகும்; இவரா லிக்காரியுஞ் செய்யத்தகும். எ-ம். வஞ்சரையஞ்சப்படும். "கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும்" எ-ம். வரும். (20)

**பரீக்ஷை வினாக்கள்:**—4. முற்றுவினைகளாவன யாவை? 5. தெரி நிலைவினைமுற்றுச்சொல் ஒவ்வொன்றெத்தனைவகையாம்? எப் படி இருபத்தேழாம்? ஒருவினைப்பகுபதமே இடத்தினாலுங் காலத்தினாலும் இருபத்தேழாதற்குக் காரணமெப்படி? 6. திணைபாலிடங்களில் ஒன்றற்குரிய வினைகள் யாவை? அவை களுள் உயர்திணையாண்பாற்படர்க்கை வினைமுற்றுகள் யாவை? 7. உயர்திணைப்பெண்பாற்படர்க்கைவினைமுற்றுக்கள் யாவை? 8. உயர்திணைப்பலர்பாற்படர்க்கை வினைமுற்றுக்கள் யாவை? 9. அஃறிணையொன்றன்பாற்படர்க்கை வினைமுற்றுக்கள் யாவை? து று டு என்னு மூன்று விகுதியுந் தெரிநிலைவினை குறிப்புவினை யிரண்டிலும் வருமோ? றுவ்விகுதி எல்லா இடை நிலையோடுங் கூடிவருமோ? றுவ்விகுதி எவ்வெவ்விடத்து வரும்? 10. அஃறிணைப்பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுக் கள் யாவை? 11. திணைபாலிடங்களுட் பலவற்றிற்குப் பொதுப்

பட வரும் வினைச்சொற்கள் எவை? இருதிணைப்பொதுவினை இவைகளேயன்றி வேறில்லையோ? 12. அவற்றுள், தன்மை யொருமை வினைமுற்றுக்கள் யாவை? இவ்விகுதிகளெல்லாந் தெரிநிலைவினை குறிப்புவினை யிரண்டிலும் வருமோ? அல் அன் என் ஏன் என்னும் நான்கு விகுதியும் எல்லா இடைநிலைக ளோடுங் கூடி வருமோ? 13. தன்மைப்பன்மை வினைமுற்றுக் கள் யாவை? இவ்விகுதிகளெல்லாந்தெரிநிலைவினை குறிப்பு வினையிரண்டினும் வருமோ? 14. பெயருடனன்றி வினையுடனு முடிபுமுற்றுவினையில்லையோ? 15. முன்னிலையோடு கூடிய படர்க்கை எவ்விடத்ததாம்? 16. முன்னிலையொருமைவினை முற்றுக்கள் யாவை? முன்னிலையொருமை வினைமுற்றில் ஏவல் வினைமுற்றுக்கள் யாவை? 17. சென்றீ, நின்மே என்னும் ஏவல்வினைமுற்றுக்களில் ஈற்றினிற்பன விகுதிகளல்லவோ? 18. முன்னிலைப்பன்மைவினைமுற்றுக்கள் யாவை? முன்னிலைப் பன்மை வினைமுற்றுக்களில் ஏவல்வினைமுற்றுக்கள் யாவை? 19. வியங்கோள்வினைமுற்றுக்கள் யாவை? இவை எவ்விடங் களில் எப்பால்கட்குப் பொதுவாய் வரும்? வியங்கோண் முற்றுக்கு இவ்விகுதிகளன்றி வேறுவிகுதிகள் இல்லையோ? இவ்வியங்கோள் எவ்வெப்பொருளில் வரும்? 20. வேறு இல்லை உண்டு என்பன எவ்வாறு பொதுப்பட வரும்? இவைபோல் ஐம்பான் மூவிடங்கட்கும் பொதுவாவன மற்றுமுண்டோ? இம் மூன்றும் எவ்வகைச்சொல்லாய் எப்பொருள்பட்டு நிற்கும்?

---

## பெயரெச்சம்

[பெயரெச்சம் இனையவென்பது.]

**340.** **செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்**
**காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு**
**செய்வ தாதி யறுபொருட் பெயரும்**
**எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.**

**இ - ள்.** செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில் - "செய்த வென்றுஞ் செய்கின்றவென்றுஞ் செய்யுமென்றுஞ்

சொல்லப்படும் மூவகைச் சொற்களினுள்ளே—காலமும் செயலும் தோன்றி - முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னு மூன்று காலங்களுந் தொழிலும் தோன்றி—பாலொடு - வினை முற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனே—செய்வது ஆதி அறுபொருட் பெயரும்-செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படு பொருள் என்னும் அறுவகைப்பொருட்பெயர்களும்—எஞ்சநிற்பது பெயரெச்சம்-ஒழிய நிற்பன பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம். எ - று.

நிற்பதென்பது தொகுதியொருமை.

எற்புழிக்கோடலால், தோன்றியென்பதுவரைக்குந் தெரிநிலையுடன் பாட்டிற்கும் ஒழிந்த விதி தெரிநிலையுங் குறிப்புமாகிய உடன்பாடெதிர்மறை யிரண்டற்குங் கொள்க.

**வரலாறு.**

| | | |
|---|---|---|
| | | சாத்தன் ... .....வினைமுதல். |
| | | கலம் ..............கருவி. |
| | இற. நிகழ். எதிர். | இடம்... .........நிலம். |
| (1.) | உண்ட, உண்கின்ற, உண்ணும் | ஊண் .. .....தொழில். |
| | | நாள் ...........காலம். |
| | | சோறு...செயப்படுபொருள். |

(2.) "வேலாண் முகத்த களிறு" "மூவிலைபவேல்," உள்ள பொருள், கரியகுதிரை, புதியநட்பு, எனக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்.

(3.) உண்ணாத குதிரை, உண்கலாத குதிரை, உண்கிலாத குதிரை என எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம் வரும்.

(4.) இல்லாத பொருள், அல்லாத குதிரை என எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்.

இங்கே உண்ட என்பது; உணவென்னுந் தொழிலும் இறந்த காலமும் தோன்றி, அத்தொழினிகழ்த்துதற்கு வேண்

டும் பால்தோன்றாமையும் அப்பாலுடனே பெயரொழிய நின்றமையுமறிக.

அறுபொருட்பெயரும் என்ற உம்மையால், இன்னதற்கு, இது பயன் என்னும் இருபொருட்பெயர் எஞ்ச நிற்பனவும், பிற பெயர் எஞ்ச நிற்பனவுங் கொள்க.

உ - ம். (1.) களை கட்ட பயிர்; இது இன்னதற்கென்னும் பெயரெஞ்ச நின்றது. களை கட்ட கூலி, இதுபயனென்னும் பெயரெஞ்ச நின்றது.

(2.) உண்டவிளைப்பு, ஆறு சென்ற வியர், உண்டவெச்சில். எ-ம். குடிபோனவூர், பழமுதிர்ந்தகோடு. எ-ம். பொன் பெரிய நம்பி. எ-ம். பிறபெயர்கள் எஞ்ச நின்றன. "நின்முகங்காணுமருந்தினேன்" என்புழிக் காட்சியைமருந்தென்றதாகலிற் றொழிற்பெயரெஞ்ச நின்றது. (21)

[செய்யுமெனெச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி.]

**341. செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ்
செய்யுளு ளும்முந் தாகலு முற்றேல்
உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே.**

இ - ள். செய்யும் என் எச்ச ஈற்று உயிர்மெய் சேறலும்-செய்யுமென்னும் வாய்பாட்டுப்பெயரெச்சத்தினுடைய இறுதியிலுள்ள உயிர்மெய் கெடுதலும்—செய்யுளுள் உம் உந்து ஆகலும் - செய்யுளிடத்து உம் விகுதி உந்து எனத் திரிதலும்—முற்றேல் உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உள - அது முற்றுயின் அதனிறுதியுயிராயினும் உயிர்மெய்யாயினுங் கெடுதலும் உளவாம். எ று.

செய்யுளு ளும்முந்தாம் எனவே, மற்ற விதிகள் வழக்குச் செய்யுளிரண்டிடத்துமாம் என்பதும், முற்றேல் எனவே, செய்யுமென்னும் பெயரெச்சம் முற்றுவினையுமாம் என்பதும் பெற்றாம்.

வ - று. (1.) ஆகும்பொருள்-ஆம்பொருள்; போகும்போது-போம்போது என வழக்கினும், "ஆம்பொருள்களாகுமவை யாக்குமழிப் புணர்வாம்" "வாம்புரவி வழுதி" எனச் செய்யுளினும், செய்யுமெனெச்சத்து ஈற்றுயிர்மெய்கெட்டன. இவை, மகரவொற்று நிற்றலின், வினைத்தொகையாகாவென்க.

(2.) "தெண்கடற் றிரைமிசைப்பாயுந்து;" "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" எனச் செய்யுளிற் பாயும் என்பது பாயுந்து எனவும் கூப்பெயர்க்கும் என்பது கூப்பெயர்க்குந்து எனவும், உம் உந்தாயின.

(3.) அஃதாம், இவைபோம் என வழக்கில், ஆகும்; போகும் என்பன, முற்றாயவிடத்து, ஆம் போம் என ஈற்றுயிர் மெய்கெட்டன. "சாரனாடவென் றோழி யுங் கலுழ்மே" "அம்பலூரு மவனொடு மொழிமே" எனச் செய்யுளிற், கலுழும், மொழியும் என்பன, முற்றாயவிடத்துக், கலுழம், மொழிம என உயிரும் உயிர்மெய்யுங் கெட்டன.

செய்யுமென்னு முற்றென்றாயினுஞ் செய்யுமென்னுமேவன் முற்றென்றாயினும் விதவாது, பொதுமையின் முற்றேவலென்றமையின், "மாமறை மாக்கள் வருகுவங்கேண்மோ;" "முதுமறை யந்தணர் முன்னிய துரைமோ;" எனக் கேளும் உரையும் என்னுமேவன் முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யுங் கெட்டு வருதல் கொள்க. இவை இங்ஙனமாதலால், "சொற்றொரு மிற்றிதன் பெற்றி" என்னுஞ் சூத்திரத்தால் ஆடுவாமோ என்னுந் தன்மைப்பன்மைமுற்றும் "பொன்னூசலாடாமோ" என எதிர்கால இடைநிலை கெட்டு வருதலும் பிறவுங் கொள்க. (22)

**பரீக்ஷை வினாக்கள்:**—21. பெயரெச்சங்களாவன யாவை? வினைமுதல் முதலிய அறுபொருட்பெயர்களேயன்றி வேறுபெயர்கள் எஞ்சநிற்கும் பெயரெச்சங்களும் உளவோ? 22. பெய

ரெச்சம் விகாரப்பட்டு வருதலில்லையோ? செய்யுமென்னும் பெயரெச்சம் முற்றவினையாமிடத்து விகாரப்படுதலில்லையோ? செய்யுமென்னுமேவன் முற்று விகாரப்படுதலில்லையோ?

---

## வினையெச்சம்

[வினையெச்சம் இனையவென்பது.]

**342. தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை**
**ஒழிய நிற்பது வினையெச் சம்மே.**

இ - ள். தொழிலும் காலமும் தோன்றி - பின்பு விதந்து சொல்லப்படும் வாய்பாடுகளிலே தொழிலுங் காலமும் விளங்கி—பால்வினை ஒழிய நிற்பது - வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனே வினையெஞ்ச நிற்பன—வினையெச்சம் - வினையெச்சவினை வினைக் குறிப்புக்களாகும். எ - று.

வினையெனப் பொதுப்படக் கூறினமையால், உடன்பாடும் எதிர்மறையும் பற்றி வருந் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயருந் தொழிற்பெயருமாகிய ஐவகை வினைச்சொற்களும் கொள்க.

வ - று. உண்டுவந்தான் தெரிநிலைவினையெச்சம். அருளின்றிச் செய்தான் குறிப்புவினையெச்சம். இவற்றுள், உண்டு என்பது, உணலென்னுந் தொழிலும் இறந்தகாலமுந் தோன்றி, அத்தொழில் நிகழ்த்துதற்கு வேண்டும் பால் தோன்றாமையும் அப்பாலுடனே வினையொழிய நின்றமையு மறிக. (23)

[வினையெச்ச வாய்பாடுகள்]

**343. செய்து செய்பு செய்யாச் செய்யூச்,**
**செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்**

வான்பான் பாக்கின வினையெச்சம் பிற
ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்.

இ - ள். செய்து***செய்யியர்-செய்தெனப்பது முதற் செய்யியரென்பதீறாகிய ஒன்பது வாய்பாட்டால் வருவனவும்—வான் பான்பாக்கு-வான் பான் பாக்கென்னும் மூன்று விகுதிகளைக் கொண்டு வருவனவும்—இன வினையெச்சம் - இவைபோல்வன பிறவும் வினையெச்சவினைகளாம்—ஐந்து ஒன்று ஆறு-முன்னையவைந்தும் நடுநின்ற ஒன்றும் பின்னைய ஆறும்—முக்காலமும் முறைதரும் - இறந்தகாலமும் நிகழ் காலமும் எதிர்காலமும் முறையே காட்டுவனவாம். எ - று.

இவற்றுட் செய்து, செய்தென என்னுமிரண்டும் இடைநிலை யாலும், ஒழிந்தன இறுதிநிலையாலுங் காலங்காட்டுமெனவுணர்க.

வான் பான் பாக்கென்பன அவ்வவ்வெச்சவிகுதிகளையுடைய மொழிகளை யுணர்த்திநின்ற குறிப்புச்சொல்.

இன என்றமையால், ஆடிக்கொண்டான், போய்க் கொண்டான என செய்தென்வாய்பாடு பற்றி இசரவிகுதியும் யகரமெய் விகுதியும் வருமெனவும், தழீஇக்கொண்டான் என விகுதி விகாரப்பட்டு வருமெனவும், புக்கு வந்தான் எனப் பகுதி விகாரப்பட்டு வருமெனவும், உணற்கு வந்தான் எனச் செயவென்வாய்பாடு பற்றிக் குவ்விகுதி வருமெனவும், உண்டாற் பசி தீரும், உண்டக்காற் பசி தீரும், உண்டக்கடைப் பசி தீரும்; உண்டவழிப் பசி தீரும், உண்டவிடத்துப் பசி தீரும்; உண்ணுமேற் பசி தீரும் எனச் செயினென்வாய்பாடு பற்றி ஆல், கால், கடை, வழி, இடத்து, ஏல் விகுதிகள் வருமெனவும், என்றுமேனும் வரும், காண்டலு மிதுவே கூறும் என ஏனும் உம்மும் ஒரோவிடத்து விகுதிகளாய் வருமெனவும், உண்ணாமே வந்தான, உண்ணாமை வந்தான், உண்ணாமைக்கு வந்தான், உண்ணாமல் வந்தான் என எதிர்மறையிடத்து, மே, மை,

மைக்கு, மல் விகுதிகள் வருமெனவும், அருளின்றி வந்தான், அறமல்லாதில்லை, அறமல்லாமேயில்லை; அறமல்லாமையில்லை, அறமல்லாமலில்லை, நீயல்லாலில்லை என வினையெச்சக்குறிப்புக்களுக்கு றி, து, மே, மை, மல், ஆல் என்பவை விகுதிகளாமெனவுங் கொள்க.

உரையிற்கோடலென்னும் உத்தியினாலே, செயவெனெச்சம், நிகழ்காலமன்றி மற்றைக்காலமுந் தருமெனக்கொள்க. அது தனக்குரிய நிகழ்காலத்தின்கண் இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட்டாயும், இறந்தகாலத்திற் காரணப்பொருட்டாயும், எதிர்காலத்திற் காரியப்பொருட்டாயும் வரும். காரணப்பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ் சொல்லால் உணரப்படுந் தொழிற்கு வினையெச்சத்தால் உணரப்படுந் தொழில் காரணமென்பதுபட வருதல். காரியப்பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ் சொல்லால் உணரப்படுந்தொழிற்கு வினையெசசத்தாலுணரப்படுந் தொழில் காரியமென்பது பட வருதல்.

உ - ம். சூரியனுதிக்கவந்தான் ..... .. ........நிகழ்.
மழை பெய்ய நெல் விளைந்தது.......... இற.
நெல் விளைய மழை பெய்தது.........எதிர்.

இன்னும், உரையிற்கோடலென்னும் உத்தியால், வான், பான், பாக்கென்னு மூன்றுஞ் சிறுபான்மை தொழிற்பெயர் விகுதிகளாயும் வருமெனக் கொள்க.

உ - ம். நீ வருவானேன்; யானுரைப்பானேன்; "ஒழுக்கத்தி னெல்கா ருரவோ ரிழுக்கத்தி — னேதம் படுபாக் கறிந்து" என வரும். இங்கே, வருவான், உரைப்பான், படுபாக்கு என்பன, முறையே, வருதல, உரைத்தல், படுதல் எனப்பொருள்படுதல் காண்க. (24)

[ வினையெச்சங்களுக்கு முடிபுவேறுபாடு ]

**344.** அவற்றுள் —
**முதலி னான்கு மீற்றின் மூன்றும்**
**வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.**

இ - ள். அவற்றுள்-மேலைச் சூத்திரத்துட் சொல்லிய வினையெச்சங்களுள் — முதலில் நான்கும் - முதலிலுள்ள செய்து செய்பு செய்யாச் செய்யூ என்னும்நான்கும்—ஈற்றில் மூன்றும் - இறுதியிலுள்ள வான் பான் பாக்கு என்னும் விகுதிகளையுடைய மூன்றும்—வினைமுதல் கொள்ளும் - வினைமுதலைக்கொண்டு முடியும்—பிற - நடுவிலுள்ள செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர் என்னும் ஐந்தும் இவைபோல்வன பிறவுமென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக்குறிப்புக்களும் ஆகிய இவைகள்—பிறவும் ஏற்கும் - செய்பவனையன்றி மற்றவைகளையுங் கொண்டுமுடியும். எ - று.

வரலாறு.

| | | |
|---|---|---|
| உ | தானடந்துவந்தான் | முதலினான்கும் ஈற்றின் மூன்றும் வினைமுதல் கொண்டு முடிந்தன. |
| பு | தானுண்குபு போனான் | |
| ஆ | தான் கல்லாக் கழித்தான் | |
| ஊ | தான் காணூஉ மகிழ்ந்தான் | |
| வான் | தான் கொல்வான் செல்வான் | |
| பான் | தானலைப்பான் புகுந்தான் | |
| பாக்கு | தான்றருபாக்கு வருவான் | |
| என | தானுண்டென மகிழ்ந்தான் | இடையினைந்தும் வினைமுதலும் பிறவுங் கொண்டன. |
| | பிறனுண்டென மகிழ்ந்தான் | |
| அ | தானுண்ண வருகிறான் | |
| | பிறனுண்ணக் காண்கிறான் | |
| இன் | தானுண்ணின் மகிழ்வான் | |
| | பிறனுண்ணிற் கொடுப்பான் | |
| இய | தானுண்ணிய வருவான் | |
| | பிறனுண்ணிய கொடுப்பான் | |
| இயர் | தானுண்ணியர் போவான் | |
| | பிறனுண்ணியர் வழங்குவான் | |

உண்டாலுவக்கும், உண்டாற்பசிதீரும் எ-ம். மழையின்றிப் பொய்ப்பின், விருந்தின்றி யுண்டான். எ-ம். இன்னவென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக்

குறிப்பும் இப்படியே வினைமுதலும் பிறவுமேற்றல் காண்க. (25)

[வினைமுதல் கொள்ளுமென்றவற்றிற்கு
ஒரு புறனடை ]

**345. சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்.**

**இ - ள்.** சினைவினை-முதலினான்கும் ஈற்றின்மூன்றும் என்ற வினையெச்சங்கள் சினைவினையாயின் அவை—சினையொடும் - முன்வினைமுதல்கொள்ளும் என்றவிதியினாலே சினையுடனேயன்றி—முதலொடும் செறியும்-ஒற்றுமைபற்றி முதலுடனும் முடியும். எ - று.

**உ - ம்.** காலொடிந்து விழுந்தான், கண் வருவான் கதிரவனைத் தொழுதான் என வரும். பிறவுமன்ன. ஒடிதல் சினைவினை; விழுதல் முதல்வினை. (26)

**346. சொற்றிரி யினும்பொரு டிரியா வினைக்குறை.**

**இ - ள்.** சொல் வினைக்குறை திரியினும் - முதலினான்குமீற்றின் மூன்றும் என்ற வினையெச்சவாய்பாடுகளாகப் பிற வினையெச்சவாய்பாடுகள் வேறுபடினும்—பொருள் திரியா - அவற்றின் பொருள்கள் வேறுபடாவாம். எ - று.

**உ - ம்.** (1.) ஞாயிறு பட்டு வந்தான் என்புழிப், படவென்னுஞ் செயவென்வாய்பாட்டு நிகழ்காலவினையெச்சம் பட்டெனத் திரிந்து நின்றது.

(2.) மழை பெய்து நெல் விளைந்தது என்புழிப் பெய்யவென்னுங் காரணப்பொருட்டாகிய செயவென் வாய்பாட்டிறந்தகாலவினையெச்சம் பெய்தெனத் திரிந்து நின்றது. ஆ கிடந்து செறு விளைந்தது; பூணணிந்து விளங்கிய புகழ் சான் மார்ப; உண்டு பசி கெட்டது என்புழிக், கிடக்க, அணிய, உண்ண என்பன, முறையே, கிடந்து, அணிந்து உண்டு எனத் திரிந்து நின்றன.

(3.) யான் கொள்வான் பொன் கொடுத்தான் என்புழிக் கொளவென்னுஞ் செயவென்வாய்பாட்டு வினையெச்சங் கொள்வானெனத் திரிந்து நின்றது.

கோழி கூவிப் பொழுது புலர்ந்தது என்புழிக், கூவவென்பது கூவியெனத் திரிந்ததன்று, கூவுதல் புலர்தற்குக் காரணமாகாமையாலும், செயவெனெச்சங் காரணப் பொருண்மையுணர்த்தும் இடத்தல்லது இறந்தகால முணர்த்தாமையாலுமென்றுணர்க. கூவுவித்து என நிற்கற்பாலது கூவியென விவ்விகுதி தொக்கு நின்றது. "குடிபொன்றிக்—குற்றமுமாங்கே தரும்;" "குடிமடிந்து குற்றம் பெருகும்;" "இருணீங்கி யின்பம் பயக்கும்." என்புழிப், பொன்றுவித்து, மடிவித்து, நீங்குவித்து எனற்பாலன, பொன்றி, மடிந்து, நீங்கி என விவ்விகுதி தொக்கு நின்றன. (27)

**பரீக்ஷை வினாக்கள்:**—23 வினையெச்சங்களாவன யாவை? வினையெச்சத்திற்கு ஒழிபாகிய வினை எத்தனை வகைப்படும்? 24. அவ்வினையெச்ச வாய்பாடுகளெவை? இவற்றுள், எவ்வெவ் வாய்பாடு எவ்வெக்காலங் காட்டும்? இவ்வினையெச்சவிகுதிகளே காலங்காட்டுமோ இடைநிலைகாலங்காட்டலு முண்டோ? இனவென்றதனாற் கொள்ளப்படும் வினையெச்சவிகுதிகள் எவை? செயவெனெச்சம் நிகழ்காலமன்றி மற்றைக்காலமும் காட்டுமோ? செயவெனெச்சம் எவ்வெக்காலத்தில் எவ்வெப் பொருட்டாய் வரும்? காரணப்பொருட்டாய் வருதலாவதென்னை? காரியப்பொருட்டாய் வருதலாவதென்னை? வான் பான் பாக்கென்னு மூன்றும் வினையெச்சவிகுதிகளாயன்றிப் பிறவிகுதிகளாயும் வருமோ? 25. இவ்வினையெச்சங்களுள், தன்கருத்தாவைக் கொண்டு முடிவன எவை? தன்கருத்தாவையும் பிறகருத்தாவையுங் கொண்டு முடிவன எவை? 26. தன் கருத்தாவையே கொண்டு முடியுமென்ற வினையெச்சங்கள் பிறகருத்தாவைக்கொண்டு முடிதல் எங்கும் இல்லையோ? 27. வினையெச்சங்களுள், ஒன்று மற்றொன்றாகத் திரிதலு

முண்டோ? செயவெனெச்சம் எவ்வெவ்விடத்துச் செய்தெனெச்சமாகத் திரியும்? கோழிகூவிப் பொழுது புலர்ந்தது முதலானவை செயவெனெச்சஞ் செய்தெனத் திரிந்தவோ?

---

## ஒழிபு

[வினைக்குறிப்பு.]

**347. ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.**

இ - ள். ஆக்க வினைக்குறிப்பு - ஆக்கத்தால் வரும் வினைக்குறிப்புச் சொற்கள்—ஆக்கம் இன்று இயலா - விரிந்தாயினுந் தொக்காயினும் வரும் ஆக்கச்சொல்லின்றி வாரா வாம். எ - று.

உ - ம். சாத்தனல்லனாயினான், சாத்தனல்லன், கல்வியாற் பெரியனாயினான், கல்வியாற் பெரியன்; கற்றுவல்லனாயினான், கற்றுவல்லன் என ஆக்கச்சொல் விரிந்துந் தொக்கும் வந்தன. எனவே, நல்லனென்பது இயற்கைவினைக் குறிப்பாயின், விரிதல் தொகுதலென்னும் இரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம் வேண்டாது, சாத்தனல்லன் என்றே வருமென்பதாயிற்று. (28)

[செய்யுமென்முற்று.]

**348. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்**
**செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.**

இ - ள். ஆகும் செய்யும் என் முற்று-செய்யுமென்னு மெச்சத்தாலாகுஞ் செய்யுமென்னு முற்றானது—பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில் செல்லாது - உயர்திணைப் பன்மைப்படர்க்கையினும் முன்னிலையினுந் தன்மையினுஞ் செல்லாது. எ - று.

எனவே பலரொழிந்த படர்க்கை நாற்பாலினுஞ் செல்லு மென்பது பெற்றாம்.

உ - ம். அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும், அவை யுண்ணும் என வரும். (29)

[பாற்பொதுவினை.]

## 349. யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால்.

இ - ள். வினா யார் என் வினைக்குறிப்பு - வினாப் பொருளைத் தரும் யாரென்னும் வினைக்குறிப்புமுற்று— உயர் முப்பால் - உயர்திணைமுப்பால்களுக்கும் பொதுவினை யாம். எ - று.

உ - ம். அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும்.

அஃதியார், அவை யார். எ-ம். யான் யார், யாம் யார். எ-ம். நீ யார், நீர் யார். எ-ம். அஃறிணையிருபாலினும், மற்றை யிரிடத்திலும் வருதல், புதியன புகுதலாமென்க.

யார் என்பது ஆரென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன யார் என்பது, யாவரென்னும் உயர்திணைப் பலர்பாற் சொல் விகாரப்பட்ட யாரென்பதன்று. (30)

## 350 எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்.

இ - ள். வினா எவன் என் வினைக்குறிப்பு - வினாப் பொருளைத் தரும் எவனென்னும் வினைக்குறிப்பு முற்று— இழி இருபால் - அஃறிணையிருபாலுக்கும் பொதுவினையாம். எ - று

உ - ம். அஃதெவன், அவை யெவன் என வரும்.

எவனென்பது, என், என்ன, என்னையென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன எவனென்பது, உயர்திணையாண்பாலை யுணர்த்தும் எவனென்பதன்று. (31)

[இருவகைமுற்றிற்கும் ஒரு புறனடை]

**351. வினைமுற் றேவினை யெச்ச மாகலுங்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே.**

**இ - ள்.** வினைமுற்றே வினையெச்சம் ஆகலும் - தெரிநிலைவினைமுற்றே வினையெச்சமாகி வருதலும்—குறிப்புமுற்(றே) ஈரெச்சம் ஆகலும் உள - வினைக்குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம். எ - று.

**வ - று.** (1.) கண்டனன் வணங்கினான் என்பது கண்டு வணங்கினான். எ-ம். முகந்தனர் கொடுத்தார் என்பது முகந்து கொடுத்தார். எ-ம். பொருள்படுதலால் வினைமுற்று வினையெச்சமாதல் காண்க.

(2.) அவன் வில்லினன் வந்தான் என்பது அவன் வில்லினனாகி வந்தான் எனப் பொருள்படுதலாற் குறிப்புமுற்று வினையெச்சமாதல் காண்க. "வெந்திறலினன் விறல் வழுதியொடு" என்பது வெந்திறலினனாகிய வழுதி எனப்பொருள்படுதலாற் குறிப்புமுற்றுப் பெயரெச்சமாதல் காண்க. பிறவுமன்ன. (32)

**பரிசை வினாக்கள்:**—28. வினைக்குறிப்புச்சொல் இன்னும் எத்தனைவகையிற் பிரிவுபடும்? ஆக்கவினைக்குறிப்பாவதியாது? இயற்கை வினைக்குறிப்பாவதியாது? ஆக்கவினைக்குறிப்பெவ்வாறு வரும்? இயற்கைவினைக்குறிப்பெவ்வாறு வரும்? 29. செய்யுமென்வாய்பாட்டு வினைமுற்று எவ்வாறு பொதுப்பட வரும்? 30. இருதிணையுள்ளும் பாற்பொதுவாய் நிற்கும் வினைகள் யாவை? யாரென்னும் வினாவினைக்குறிப்புமுற்று எவ்வாறு பொதுப்படவரும்? 31. எவனென்னும் வினாவினைக் குறிப்புமுற்று எவ்வாறு பொதுப்பட வரும்? 32. வினைமுற்றுக்கள் எச்சப்பொருள் தருதலில்லையோ?

**வினையியல் முற்றிற்று.**

---

# 3. பொதுவியல்

[இது முன் வந்த பெயருக்கும் வினைக்கும் பின் வரும் இடைக்கும் உரிக்கும் பொதுவிலக்கணங்களைச் சிங்கநோக்காக அறிவிக்கும்பொருட்டு நடுவே வைக்கப்பட்டது.]

*[பாற் பொதுமை நீங்குநெறி.]*

**352.** **இருதிணை யாண்பெணு ளொன்றனை யொழிக்கும்
பெயரும் வினையுங் குறிப்பி னானே.**

**இ - ள்.** *இருதிணைப்பெயரும் வினையும் - இருதிணையி னும் ஆண்பால் பெண்பால்களுக்குப் பொதுவாகிய பெயர்ச் சொற்களும் அப்படிப்பட்ட வினைச்சொற்களும்—ஆண் பெணுள் ஒன்றனை ஒழிக்கும் குறிப்பினான் - அவ்வாண்பால் பெண்பால்களுள் ஒருபாலை நீக்குங் குறிப்பினால். எ - று.*

**வ - று.** (1.) *ஆயிரமக்கள் போர் செய்யப்போயினர் என்புழி, மக்களென்னும் உயர்திணையாண்பெணிருபாற்கும் பொதுப்பெயரும், போயினரென்னும் உயர்திணை யாண்பெணிருபாற்கும் பொதுவினையும், போர்செய லென்னுங் குறிப்பினாற் பெண்பாலை யொழித்தன. பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்களுளர் என்புழி, மக்களென்னும் பொதுப்பெய ரும், உளரென்னும் பொதுவினைக்குறிப்பும், பொறை யுயிர்த்தலென்னுங் குறிப்பினால் ஆண்பாலையொழித் தன. [பொறையுயிர்த்தல் - பிரசவித்தல்.]*

(2.) *இப்பெற்றங்க ளுழ வொழிந்தன என்புழிப், பெற் றங்களென்னும் அஃறிணையாண்பெணிருபாற்கும் பொதுப்பெயரும், ஒழிந்தனவென்னும் அஃறிணை யாண்பெணிருபாற்கும் பொதுவினையும், உழவென்*

னுங் குறிப்பினுற் பெண்பாலை யொழித்தன. இப் பெற்றங்கள் பால் சொரிந்தன என்புழிப் பெற்றங்க ளென்னும் பொதுப்பெயரும், சொரிந்தனவென்னும் பொதுவினையும், பாலென்னுங் குறிப்பினுல் ஆண் பாலை யொழித்தன. (1)

[பெயர் வினையிடத்து ஈற்றயல் திரிதல்.]

**353. பெயர்வினை யிடத்து ன ள ர ய வீற்றயல்**
**ஆவோ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே.**

**இ - ள்.** பெயர் வினையிடத்து - பெயரிடத்தும் வினையிடத்தும்—ன ள ர ய ஈற்று அயல் ஆ ஓ ஆகலும் - னகர ளகர ரகர யகரவீற்றிற்கு அயலிலுள்ள விகுதிமுதல் ஆகாரம் ஓகாரமாதலும்—செய்யுளுள் உரித்து - செய்யு ளிடத்துரித்தாம். எ - று.

**வ - று.** (1.) "வில்லோன் காலன கழலே" "தொடியோண் மெல்லடி மேலன சிலம்பே" "நல்லோர் யார்கொல்" "வரையாது கொடுத்தோய்" எனப் பெயரிடத்து ஆகாரம் ஓகாரமாயிற்று.

(2.) "படைத்தோன் மன்றவப் பண்பிலாளன்" "நல்லோண் மன்றகூப் பெயர்த்தோளே" சென்றோ ரன்பிலர் தோழி" "வந்தோய் மன்ற தெண்கடற் சேர்ப்ப" என வினையிடத்து ஆகாரம் ஓகாரமாயிற்று.

வினையாலணையும் பெயரிடத்தன்றி வினையிடத்தும் ஒரோவழி ஆவோவாகத் திரிந்து வருதலின், அதனையுமுடன் கூறினர்.

ஆவோவாகலுமென்றவும்மையை ஆக்கவும்மையாகக்கொண்டு, "பழமுதிர் சோலை மலைகிழ வோனே," என ஒரோவழி அகரம் ஓகாரமாதலுங் கொள்க. (2)

[உருபும் வினையீறும் எதிர்மறையினுந் திரியாமை.]

**354. உருபும் வினையு மெதிர்மறுத் துரைப்பினுந்**
**திரியா தத்தமீற் றுருபி னென்ப.**

இ - ள். உருபும் வினையும் - எட்டுவேற்றுமையுருபுகளும் மூவகைவினைச்சொற்களும்—எதிர்மறுத்து உரைப்பினும்-எதிர்மறுத்துச்சொல்லுமிடத்தும்—தத்தம் ஈற்(றின்) உருபின் திரியா என்ப - தத்தம் ஈற்றினின்றும் அவ்வவ்வுருபினின்றும் வேறுபடா என்று சொல்லுவர் புலவர். எ - று.

உருபு உருபினின்றும், வினை ஈற்றினின்றும் என எதிர்நிரனிறையாகப் பொருள் கொள்க.

உருபின்கண் எதிர்மறுத்தல் அவைகளின், பயனிலைகளையெனக் காண்க.

உ - ம். சாத்தன் வாரான்; குடத்தை வனையான்; வாளா லெறியான்; புல்லர்க்குக்கொடான்; நிலையினீங்கான்; பொருளினதின்மை; தீயர்கட் சேரான்; சாத்தா போகேல். எ-ம். நடவான், நடவாத, நடவாது எ-ம். வரும். ஓடாக்குதிரை இதில் ஓடாதவென்னும் பெயரெச்சவீறு கெட்டது.

உரையிற் கோடலால், செய, செய்யாமல், செய்யாமே, செய்யாமை எனவரும் வினையெச்சமும், நடத்தல், நடவாமை எனத் தொழிற்பெயரும், உண்ணாய், உண்ணேல், உண்ணாதே என ஒருமையேவலும், ஈறு திரிந்தும் வருமெனக் கொள்க. (3)

[உருபும் வினையும் அடுக்கி முடிதல்]

**355. உருபுபல வடுக்கினும் வினைவே றடுக்கினும்**
**ஒருதம் மெச்ச மீறுற முடியும்.**

இ - ள். உருபு பல அடுக்கினும் - வேற்றுமையுருபுகள் விரிந்துந் தொக்குந் தம்முள் விரவிப் பலவடுக்கி வரினும் வெவ்வேறு பலவடுக்கி வரினும்—வினை வேறு (பல) அடுக்கினும் - மூவகை வினைச்சொற்களும் வெவ்வேறு பலவடுக்கி வரினும்—ஒரு தம் மெச்சம் ஈறு உற முடியும் - தத்த மெச்சமொன்று இறுதியில் வர அதனோடனைத்து முடியும். எ-று.

வ - று. (1) அரசனானவன் பகைவனை வாளால் வெட்டினான் என உருபுகள், விரிந்து தம்முள் விரவிப் பலவடுக்கி, வெட்டினானென்னும் ஒருவினை கொண்டன. வாள் கைக்கொண்டான் என உருபு தொக்கு அவ்வாறு வந்தன.

(2.) சாத்தனையுங் கொற்றனையும் வாழ்த்தினான். எ-ம். சாத்தனுக்குங் கொற்றனுக்குந் தந்தை. எ-ம். ஐயுருபுங் குவ்வுருபும், விரிந்து, வேறுபலவடுக்கி; வாழ்த்தினானென்னும் ஒருவினையும் தந்தை யென்னும் ஒரு பெயரும் முறையே கொண்டன. அருளறமுடையான் என உருபு தொக்கு, அவ்வாறு வந்தன.

(3.) ஆடினான் பாடினான் சாத்தன். எ-ம். இளையன் மெல்லியன் மடந்தை. எ-ம். வினைமுற்றுங் குறிப்பு முற்றும், வேறுபலவடுக்கிச், சாத்தன் மடந்தை என்னும் ஒரு பெயர் முறையே கொண்டன.

(4.) கற்ற கேட்ட பெரியோர் எ-ம். நெடிய பெரிய மனிதன். எ-ம். தெரிநிலைவினைப்பெயரெச்சமுங் குறிப்பு வினைப்பெயரெச்சமும். வேறு பல வடுக்கிப், பெரியோர் மனிதன் என்னும் ஒருபெயர் முறையே கொண்டன.

(5.) கற்றுக் கேட்டறிந்தார். எ-ம். விருப்பின்றி வெறுப்பின்றியிருந்தார். எ-ம். தெரிநிலைவினையெச்சமும் குறிப்பு வினையெச்சமும், வேறு பல வடுக்கி, அறிந்தார் இருந்தார் என்னும் ஒருவினை முறையே கொண்டன. (4)

[இடைப் பிற வரல்.]

**356. உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்**
**பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன.**

இ - ள். உருபு முற்று ஈரெச்சம் கொள்ளும் பெயர் வினையிடை - வேற்றுமையுருபுகளும் முற்றுக்களும் பெய

ரெச்சங்களும் வினைபெச்சங்களுங் கொண்டு முடியும் பெயர்க்கும் வினைக்குமிடையே—பிற வரலும் ஆம் ஏற்பன - பிறசொற்கள் வருதலுமாம் அவ்விடத்திற்குப் பொருந்துவன. எ - று.

**வரலாறு.**

(1.) சாத்தன் (வயிறார) உண்டான்.
அறத்தை (அழகுபெறச்) செய்தான்.
வாளான் (மாய) வெட்டினான்
தேவர்க்குச் (செல்வம் வேண்டிச்) சிறப்பெடுத்தான்.
மலையினின்று (உருண்டு) வீழ்ந்தான்.
சாத்தனது (இத்தடக்கை) யானை.
ஊர்க்கண் (உயர்ந்தவொளி) மாடம்.
சாத்தா (விரைந்து ஓடி) வா.
} எட்டுவேற்றுமை

(2.) வந்தான் (அவ்வூர்க்குப் போன) சாத்தன்...வினைமுற்று.

(3.) வந்த (வடகாசி) மன்னன் .......................பெயரெச்சம்.

(4.) வந்து (சாத்தனவ்வூர்க்குப்) போயினான்.....வினையெச்சம்.

இனி ஏற்பன என்றதனால், ஏலாதனவரிற்பொருள் கவர்படு மாதலால், அவை இடையில் வரப்பெறாவென்பதாயிற்று. கவர் படுதல் இருபாற்பட்டுத் துணிவு தோன்றாவண்ணம் நிற்றல்.

உ - ம். உண்டு விருந்தோடு வந்தான் என்புழி, விருந்தோடு என்பது, வருதலை விசேடியாது, உண்டலை விசேடித்தும் பொருள் கவர்படுதலால, இது போல்வன இடையில்வரப் பெறாவென்றறிக.

வல்ல மெறிந்த நல்லிளங்கோசர் தந்தை, மல்லல் யானைப் பெருவழுதி என்புழி, வல்லமெறிதல் வழுதிமேலாகாது நல்லிளங்கோசர்மேலுமாகிப் பொருள் கவர்படுதலால், இதுபோல்வன இடையில் வரப்பெறாவென்றறிக. (5)

[முடுக்குஞ் சொன்னிற்குமிடம்.]

**357. எச்சப் பெயர்வினை யெய்து மீற்றினும்.**

இ - ள். எச்சப் பெயர் வினை - உருபுகளும் முற்றுக்களும் பெயரெச்சங்களும் வினையெச்சங்களும் கொண்டு முடியுமெச்சமாகிய பெயரும் வினையும்—ஈற்றிலும் எய்தும்- அவற்றிற்கு ஈற்றிலும் வரும். எ - று.

ஈற்றினுமென்ற உம்மையால், முதலினும் வருதல் கொள்க.

வரலாறு.

| ஈறு. | முதல். | |
|---|---|---|
| சாத்தன் வந்தான் | வந்தான் சாத்தன் | உருபுகளினெச்சங்களீரிடத்தும்வந்தன. |
| மரத்தைக் குறைத்தான் | குறைத்தான் மரத்தை | |
| சாத்தனால் வந்தான் | வந்தான் சாத்தனால் | |
| சாத்தனுக்குக்கொடுத்தான் | கொடுத்தான்சாத்தனுக்கு | |
| சாத்தனி னீங்கினான் | நீங்கினான் சாத்தனின் | |
| சாத்தன தாடை | ——— ——— ——— | |
| சாத்தன்கட் சென்றான் | சென்றான்சாத்தன்கண் | |
| சாத்தா வா | வா சாத்த | |
| வந்தான் சாத்தன் | சாத்தன் வந்தான் | முற்றெச்சங்களினெச்சங்களீரிடத்தும் வந்தன. |
| வந்த சாத்தன | ——— ——— ——— | |
| வந்து போயினான் | போயினான் வந்து | |

எய்துமீற்றின் என்றற்போல முதற்கண் வருதலை யெடுத்தோதாது உம்மையாற் றழுவிக்கொண்டார், ஆறனுருபினெசசமும் எழனுருபினெச்சப்பெயரும் பெயரெச்சத்தினெச்சமும் முதற்கண்வாரா என்பதும், ஒழிந்தன முதற்கண்வரினும் இறுதிக்கண் வருதல்போற் சிறப்பினவல்ல என்பதுந் தோன்றுதற் கென்க.

எழுவாயுருபு வினைமுற்றுப்பயனிலையை இறுதியிலே கொண்டதும், வினைமுற்றுப் பெயர்ப்பயனிலையை முதலிலே கொண்டதும் சாத்தன் வந்தான் என வரும். தம்முள் வேற்றுமை யாதோ வெனின், கேட்போர்க்குச் சாத்தனிது செய்தான் என வினையை யுணர்த்தும்போது, சாத்தனென்னு மெழுவாய்க்கு வந்தானென்னு முற்றுவினை பயனிலையாகக் கொள்ளப்படும்; இது செய்தான் சாத்தன் என வினைமுதலையுணர்த்தும்

போது, வந்தானென்னும் முற்றுவினைக்குச் சாத்தனென்னும் பெயர் பயனிலையாகக் கொள்ளப்படும். வந்தான் சாத்தன் என்னும் முற்றுத் தொடருக்கும் இவ்வாறிக. (6)

[ஒருமொழி வேறொன்றை யமைத்தல்.]

**358. ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே.**

இ - ள். ஒருமொழி-பெயர்வினை யிடை யுரியென்னும் நால்வகைச் சொற்களுள் ஒவ்வொன்று—ஒழி தன் இனம் கொளற்கு உரித்து - ஒழிந்து நின்ற தன் தன் இனங்களைக் கொண்டு முடிதற் குரித்தாகும். எ - று.

உ - ம். சோற்றை நனி யுண்டான் என்றவழிக் கறியை நனி தின்றான் என்றற்றொடக்கத்தனவும், பாக்கை நனி தின்றான் என்றவழி, வெற்றிலையை நனி தின்றான், சுண்ணும்பை நனி தின்றான் என்பனவும், நஞ்சுண்டவன் சாவான் என்றவழி, நஞ்சுண்டவள் சாவாள், நஞ்சுண்டவர் சாவார், நஞ்சுண்டது சாம், நஞ்சுண்டவை சாம், என்பனவுங் கூறாதே யமைதலின், இனங்களாயெஞ்சி நின்றன. இவற்றுள், சோற்றை யென்னும் பெயர்ச்சொல்லும் உருபிடைச் சொல்லும், கறியையென்னும் பெயர்ச்சொல்லையும் உருபிடைச் சொல்லையும், நனியுண்டானென்னு முரிச்சொல்லும் வினைச்சொல்லும், நனிதின்றானென்னும் உரிச்சொல்லையும் வினைச்சொல்லையுங் கொள்ளுதற் குரியவாய் நிற்றல் காண்க. பிறவுமன்ன. (7)

[திணைபாலிடப் பொதுமை நீங்குநெறி.]

**359. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்**
**மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே.**

இ - ள். பொதுப் பெயர் வினைகளின் பொதுமை நீக்கும் - திணைபாலிடங்கட்குப் பொதுவாகிய பெயர் வினைகளுடைய பொதுத் தன்மையை நீக்கி ஒன்றற்குரிமை செய்

யும்—மேல் வரும் சிறப்புப் பெயர்வினைதாமே - மேலே வருஞ் சிறப்பாகிய பெயர்வினைகளைதாமே. எ - று.

ஒன்றற்கு முன் பின் என்னும் இருமருங்கும் மேலெனப்படுத லாற், சிறப்புப்பெயர் வினை யெவ்விடத்து வரினுங் கொள்க.

உ - ம். (1.) சாத்தனிவன்; சாத்தனிது. எ-ம். சாத்தன் வந்தான்; சாத்தன் வந்தது. எ-ம். பெயர்த்திணைப் பொதுமை யைப், பின் வந்த சிறப்புப்பெயரும் வினையும், நீக்கி ஒருதிணையை யுணர்த்தின.

(2.) ஒருவரென்னையர்; ஒருவரென் தாயர். எ-ம். மரம் வளர்ந்தது; மரம் வளர்ந்தன. எ-ம். பெயர்ப்பாற் பொதுமையைப், பின் வந்த சிறப்புப்பெயரும் வினை யும், நீக்கி யொருபாலையுணர்த்தின.

(3.) யாமெல்லாம் வருவம்; நீவிரெல்லாம் போமின்; அவ ரெல்லாமிருந்தார் எனப் பெயரிடப் பொதுமையை, முன் வந்த சிறப்புப்பெயரும், பின் வந்த சிறப்பு வினையும், நீக்கி ஒவ்வோரிடத்தை யுணர்த்தின

(4.) வாழ்க அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீர் என வினைத்திணைபாலிடப்பொதுமை யைப், பின் வந்த சிறப்புப்பெயர்கள், நீக்கி ஒருதிணை யையும் பாலையும் இடத்தையும் உணர்த்தின. பிறவு மன்ன. (8)

[எச்சங்களின் முடிவு.]

**360. பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழியிசை எதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி பொன்பதுங் குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும்.**

இ - ள் பெயர்ச் (சொல்லொழிபு) - பெயரெச்ச மும்—வினைச் (சொல்லொழிபு) வினையெச்சமும்—உம்மைச் (சொல்லொழிபு) - உம்மையெச்சமும் — சொற் (சொல்

லொழிபு) - சொல்லெச்சமும் — பிரிப்புச் (சொல்லொழிபு) - பிரிநிலையெச்சமும் — எனச் (சொல்லொழிபு) - எனவெச்சமும் — ஒழியிசைச் (சொல்லொழிபு) - ஒழியிசையெச்சமும் — எதிர்மறைச் (சொல்லொழிபு) - எதிர்மறையெச்சமும் — இசைச் (சொல்லொழிபு) - இசையெச்சமும் — எனும் சொல்லொழிபு ஒன்பதும் - என்னுஞ் சொல்லெச்சங்கள் ஒன்பதும் - குறிப் (பொழிபும்) - குறிப்பெச்சமொன்றும் — தத்தம் எச்சம் கொள்ளும் - தத்தமெச்சங்களைக் கொண்டு முடியும். எ - று.

எனவே, எச்சங்கள் சொல்லெச்சங் குறிப்பெச்சமென இருவகைப்படுமென்பதாயிற்று.

இப்பத்தெச்சங்களுள்ளும், பெயரெச்சம் வினையெச்சம் உம்மையெச்சமென்னும் மூன்றற்கும் எச்சச்சொற்கள் வாக்கியங்களில் வெளிப்பட்டு நிற்கும்; ஒழிந்தனவற்றிற்கு எச்சச்சொற்கள் வருவித்துரைக்கப்படும்.

வரலாறு.

(1.) செய்த சாத்தன், நல்ல சாத்தன் எனப் பெயரெச்சங்கள் தம்மெச்சமாகிய செய்பவனது பெயர் கொண்டன.

(2.) செய்து வந்தான், செய்து நல்லனாயினான் என வினையெச்சங்கள் தம்மெச்சமாகிய வினைமுற்றுங் குறிப்புமுற்றுங் கொண்டன.

(3.) சாத்தனும் வந்தான் என்னும் உம்மையெச்சம் முன்னே கொற்றன் வந்தான் எனத் தன்னெச்சங்கொண்டது.

(4.) நல்லவனென்றான் என்னுஞ் சொல்லெச்சம் நல்லவனென்று சொன்னான் எனச் சொல்லென்னுந் தன்னெச்சங்கொண்டது.

(5.) சாத்தனே கொண்டான், சாத்தனோ கொண்டான் என்பன பிரிநிலையெச்சம். இவை பிறர் கொண்டிலரெனத் தம்

மெச்சங் கொண்டன. கோடற்றொழிலாற் சாத்தனினின்றும் பிரிக்கப்பட்டார் பிறராதலிற் பிரிநிலையென்க.

(6.) கடலொல்லென வொலித்தது, நரம்பு விண்ணென இசைத்தது, தலை யிடியென இடித்தது என்பன எனவெச்சம். இவை தம்மெச்சமாகிய வினைகொண்டன. மிகவுமொலித்தது, மிகவுமிசைத்தது, மிகவுமிடித்தது என்பன இவற்றிற்குப் பொருளாமாதலின், இவ்வெனவெச்சம் மிகுதிப் பொருளைத் தருவதோரிடைச்சொல்லாமென்க.

(7.) கூரியதோர் வாண்மன், உண்ணுதற்கோவந்தான் என்பன ஒழியிசையெச்சம். இவை, முறையே, கோடிற்று, கலகஞ் செய்யவந்தான் எனத் தம்மெச்சங் கொண்டன.

(8.) "மறப்பினு மோத்துக்கொளலாகும்," யானோசெய்தேன் என்பன எதிர்மறையெச்சங்கள். இவை, முறையே, மறக்கலாகாது, யான் செய்திலேன் எனத் தம்மெச்சங் கொண்டன.

(9.) இசையெச்சமாவது வாக்கியங்களில் அவ்வவ்விடத்திற்கேற்ப ஒருசொல்லும் பலசொல்லுமாக வருவித்துரைக்கப்பட்டு வருவதாம். இசையென்பது சொல். "கற்றதனாலாய பயனென்" என்புழி நூலைக் கற்றதனால் என ஒருசொல்லும் "அந்தா மரையன்ன மேனின்னை யானகன்றுற்றுறவனோ" என்புழி, என்னுயிரினுஞ் சிறந்த நின்னை எனப் பலசொற்களும் வருவிக்கப்படுதல் காண்க.

(10.) குறிப்பெச்சமாவது பெயரியலிலே பன்னிரண்டாஞ் சூத்திரத்திலே "ஒன்றொழி பொதுச்சொல்" என்பது முதலாக "இன்ன பிறவும்" என்றது வரைக்குஞ் சொல்லப்பட்டவைகளாம். ஆயிரமக்கள் பொருதார் என்புழி, மக்களென்னும் பொதுப்பெயர் ஆடவரென்னுஞ் சிறப்புப்பெயர் கொண்டது. பிறவும் அச்சூத்திரவுரையிற் காண்க. (9)

பரீக்ஷை வினாக்கள்:—1. உயர்திணை யாண்பெணிருபாற்குப் பொதுப்பெயரும் பொதுவினையும் அஃறிணையாண்பெணிரு

யார்க்கும் பொதுப்பெயரும் பொதுவினையும் அவ்வாண்பால் பெண்பால்களுள் ஒருபாலை எவ்வாறொழிக்கும்? 2. பெயரிடத்தும் வினையிடத்தும் எவ்வெழுத்தேனும் வேறெழுத்தாகத் திரிதலுமுண்டோ? ஈற்றயலாகாரமன்றி அகரமுந்திரிதலுண்டோ? 3. வேற்றுமையுருபுகளும் மூவகை வினைச்சொல் லீறுகளும் எதிர்மறையில் வேறுபடுமோ உடன்பாட்டிற்போல வேறுபடாதே நிற்குமோ? எதிர்மறையில் வினைச்சொல்லீறு வேறுபடுதல் எங்கு மில்லையோ? 4. தொடர்மொழிகளில் வேற்றுமை யுருபுகள் தம்முள் விரவிப் பலவடுக்கி வரினும், வெவ்வேறு பலவடுக்கி வரினும், முற்றெச்சங்கள் வெவ்வேறு பலவடுக்கி வரினும், அப்பலவும் எவ்வாறு முடியும்? 5. வேற்றுமையுருபுகளையும் முற்றுவினைகளையும் எச்சவினைகளையும் முடிக்கவருஞ் சொல்லுக்கு நடுவே பிறசொற்கள் வருதலுண்டோ? 6. வேற்றுமையுருபுகளும் முற்றெச்சங்களுங் கொண்டு முடியும் எச்சமாகிய பெயரும் வினையும் அவற்றினீற்றில் வருமோ முதலில் வருமோ? முதலில் வாரா எச்சப்பெயர்களும் உளவோ? சாத்தன் வந்தான் என்புழி, வந்தானென்பதை எழுவாய்க்குப் பயனிலையாகக் கருதுங்காற் பொருளென்னை? வந்தானென்பதற்குச் சாத்தனென்னும் பெயரைப் பயனிலையாகக் கருதுங்காற் பொருளென்னை? 7. நால்வகைச சொற்களுள் ஒவ்வொன்றைக் கூறவே, அதனதனினங் கூறாதே அமைந்து கிடக்குமோ, இனமெல்லாங் கூறல்வேண்டுமோ? 8. திணைபாலிடங்கட்குப் பொதுவாகிய பெயர்வினைகளின் பொதுமையை நீக்குவன யாவை? 9. பெயரியல் வினையியல்களுள் அடங்கியும் அடங்காதும் வரும் எச்சங்களனைத்தும் எத்தனையாம்? அவ்வெச்சங்கள் எவ்வாறு முடியும்? இப்பத்தெச்சங்களுள்ளும் எவ்வெவற்றிற்கு எச்சச் சொற்கள் வெளிப்பட்டு நிற்கும், எவ்வெவற்றிற்கு எச்சச்சொற்கள் வருவித்துரைக்கப்படும்? இசை யெச்சமாவதியாது?

---

## தொகைநிலைத் தொடர்மொழி

[தொகைநிலைத் தொடர்மொழி இனையவென்பது.]

**361.** **பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை**
**முதலிய பொருளி னவற்றி னுருபிடை**
**ஒழிய விரண்டு முதலாத் தொடர்ந்தொரு**
**மொழிபோ னடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல்.**

இ - ள். பெயரொடு பெயரும் - பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்லும்—(பெயரொடு) வினையும் - பெயர்ச்சொல்லோடு வினைச்சொல்லும்—வேற்றுமை முதலியபொருளின்-முன் சொல்லப்படும் வேற்றுமை முதலாகிய அறுவகைப் பொருட்புணர்ச்சிக்கண்—அவற்றின் உருபு இடை ஒழிய - அவற்றினுருபுகள் நடுவிலேதொக்கு நிற்ப—இரண்டு முதலாத் தொடர்ந்து ஒருமொழிபோல் நடப்பன - இரண்டு சொற்கள் முதலாகப் பலசொற்கள் தொடர்ந்து ஒருசொற்போலநடப்பவை—தொகைநிலைத்தொடர்ச்சொல்-தொகைநிலைத் தொடர்ச்சொற்களாம். எ - று.

தொகையென்பது இங்கே யுருபு மறைதல். (10)

[தொகைநிலைத் தொடர்ப் பாகுபாடு]

**362.** **வேற்றுமை வினைபண் புவமை யும்மை**
**அன்மொழி யெனவத் தொகையா றுகும்.**

இ - ள். வேற்றுமைத் (தொகை) - வேற்றுமைத் தொகையும்—வினைத் (தொகை)-வினைத்தொகையும்—பண்புத் (தொகை)-பண்புத்தொகையும்—உவமைத் (தொகை)-உவமைத் தொகையும் — உம்மைத் (தொகை) - உம்மைத் தொகையும்—அன்மொழித் (தொகை) என-அன்மொழித் தொகையுமென — அத்தொகை ஆறு ஆகும் - முன்னே

சொல்லப்பட்ட தொகைநிலைத் தொடர்மொழிகள் ஆறு வகைப்படும். எ - று.

[வேற்றுமைத் தொகை.]

**363.** **இரண்டு முதலா மிடையா றுருபும்**
**வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே.**

இ - ள். இடை இரண்டு முதல் ஆம் ஆறு உருபும் - எழுவாய்க்கும் விளிக்குமிடையேநின்ற இரண்டாவது முதலிய ஆறுவேற்றுமையுருபுகளும்—வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகை - தொக்க தொடர்மொழிகள் வேற்றுமைத் தொகைகளாம். எ - று. (11)

வரலாறு.

நிலங்கடந்தான்.........இரண்டாம்வேற்றுமைத்தொகை.
தலைவணங்கினான்......மூன்றாம்வேற்றுமைத்தொகை.
சாத்தன்மைந்தன்......நாலாம்வேற்றுமைத்தொகை.
ஊர்நீங்கினான்.........ஐந்தாம்வேற்றுமைத்தொகை.
சாத்தன்கை............ஆறாம்வேற்றுமைத்தொகை.
குன்றக்கூகை .........எழாம்வேற்றுமைத்தொகை.
யானைக்கோட்டு நுனிகுறைத்தான். இதுபன்மொழித்தொடர்

இனி ஆறுருபும் என்னுமுற்றும்மையை எச்சவும்மையாக்கிக் கைக்களிறு, பொற்குடம் என ஓரோவிடத்து உருபும் பொருளும் உடன்றொக்கனவும் வேற்றுமைத்தொகை யெனக் கொள்க. அவை, விரியுமிடத்துக், கையையுடைய களிறு, பொன்னாற்செய்த குடம் என, விரியும்.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார்: "ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்—மெய்யுருபு தொகாவிறுதி யான" எனக் கூறுதலால், ஐயுருபுங் கண்ணுருபுமல்லாத நான்குருபும், இடையிலன்றி இறுதியிலே தொகாவெனவும், அவ்விரண்டுருபும், நிலங்கடந்தான், கடந்தானிலம்; குன்றத்திருந்தான், இருந்தான்குன்றத்து என இடையிலும் இறுதியிலுந் தொகுமெனவுங் கொள்க.

வேற்றுமையுருபுகள் இடையிலே தொகுமென்றாராயினும், அவை விரிந்து நிற்குமிடத்து எப்பொருள்படுமோ அப்பொருள் படுமிடத்தே தொக்கு நிற்கப் பெறும்; அப்பொருள் படாவிடத்தே தொக்கு நிற்கப் பெறாவாம்.

வ - று. சாத்தனை யடித்தான் என ஐயுருபு விரிந்து நிற்குமிடத்துச் செயப்படுபொருள் படுதல்போலச் சாத்தனடித்தான் என ஐயுருபு தொக்கு நிற்குமிடத்து அப்பொருள் படாமையால், இங்கே ஐயுருபுதொக்கு நிற்கப்பெறாதென்றறிக.

சாத்தனொடு வந்தான் என ஒடுவுருபு விரிந்து நிற்குமிடத்து உடனிகழ்ச்சிப்பொருள் படுதல்போலச், சாத்தன் வந்தான் எனத் தொக்கு நிற்குமிடத்து அப்பொருள் படாமையால், இங்கே ஒடுவுருபு தொக்கு நிற்கப்பெறாதென்றறிக. (12)

[வினைத்தொகை.]

**364. காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.**

இ - ள். காலம் கரந்த பெயரெச்சம் - காலம்பற்றிப் புடைபெயரும் வினையுருபாகிய தம்மிறுதிகள் தொக்க பெயரெச்சவினைகள் — வினைத்தொகை - வினைத்தொகைகளாம். எ - று.

காலமென்றது ஆகுபெயர். காலம் பற்றிப் புடைபெயர் வினையுருபுகள் தொகுமெனவே, முதனிலைமாத்திரந் தொகாதிருக்குமென்பது பெற்றாம்.

வரலாறு.

| | |
|---|---|
| நேற்றுக் கொல் களிறு<br>முன் விடு கணை | இறந்தகாலவினைத்தொகை. |
| இன்று கொல் களிறு<br>இப்பொழுது விடு கணை | நிகழ்காலவினைத்தொகை. |
| நாளைக் கொல் களிறு<br>பின் விடு கணை | எதிர்காலவினைத்தொகை. |

இவை விரியுமிடத்துக், கொன்ற, கொல்கின்ற, கொல்லும். எ-ம். விட்ட, விடுகின்ற, விடும். எ-ம். விரியுமெனக் கொள்க.

கொல்களிறு, விடுகணை என்றாற்போல்வன, முக்காலமும் பற்றி வரின், முக்காலவினைத்தொகை எனப்படும்.

வருபுனல், தருசுடர், நடந்திடுதிரை என வினைப்பகுதி விகாரப் பட்டும் வினைத்தொகை வரும். (13)

[பண்புத்தொகை.]

**365.** பண்பை விளக்கு மொழிதொக் கனவும்
ஒருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை.

இ - ள். பண்பை விளக்கும் மொழி தொக்கனவும் - பண்போடு பண்பிக்குஉளதாகிய ஒற்றுமை நயத்தை விளக்கு தற்கு வரும் ஆகியவென்னும் பண்புருபு தொக்குநின்றவை யும்—ஒருபொருட்கு இருபெயர் வந்தவும் - ஒருபொருளுக் குப் பொதுப்பெயருஞ் சிறப்புப்பெயருமாகிய இருபெயர் கள் வந்தவையும்—குணத்தொகை-பண்புத்தொகைகளாம். எ - று.

குணத்தொகையென்றதனால், ஒருபொருளுக்கு வரும் அவ் விருபெயர் நடுவினும், ஆகியவென்னும் பண்புருபு தொக்குவரு மென்பது பெறப்பட்டது.

பண்பெனப் பொதுப்படச் சொன்னதனால், வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலாயினவை யெல்லாங் கொள்க.

வரலாறு.

| | |
|---|---|
| செந்தாமரை<br>கருங்குதிரை | வண்ணப் பண்புத்தொகை. |
| வட்டக்கல்<br>சதுரப் பலகை | வடிவுப் பண்புத்தொகை. |
| ஒரு பொருள்<br>முக்குணம் | அளவுப் பண்புத்தொகை. |

துவர்க் காய்
இன் சொல் } சுவைப் பண்புத்தொகை.

ஆயன் சாத்தன்
சாரைப் பாம்பு } இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

செந்நிறக் குவளை
கரும்புருவச்சிலை } பன்மொழித் தொகை.

இவை, விரியுமிடத்துச், செம்மையாகிய தாமரை, வட்டமாகிய கல், ஒன்றாகியபொருள். துவர்ப்பாகிய காய், ஆயனாகிய சாத்தன், செம்மையாகிய நிறமாகிய குவளை என விரியும். (14)

[உவமத்தொகை.]

**366. உவம வுருபில துவமத் தொகையே.**

**இ - ள்.** உவம உருபு இலது-வினை பயன் மெய் உரு என்பவற்றைப் பற்றிவரும் உவமவுருபுகள் தொக்கதொடர் மொழிகள்—உவமத்தொகை-உவமத்தொகைகளாம். எ-று.

**வரலாறு.**

புலிக் கொற்றன்
குருவி கூப்பிட்டான் } வினையுவமத்தொகை.

மழைக்கை
கற்பக வள்ளல் } பயனுவமத்தொகை

துடியிடை
குரும்பைமுலை } மெய்யுவமத்தொகை.

பொற் சுணங்கு
பவளவாய் } உருவுவமத்தொகை.

மரகதக் கிளிமொழி
இருண் மழைக் கை } பன்மொழித்தொடர்.

இவை, விரியுமிடத்துப் புலிபோலுங்கொற்றன், மழைபோலுங் கை, துடிபோலுமிடை,. பொன்போலுஞ் சுணங்கு, மரகதம்போலுங் கிளிபோலு மொழி என

விரியும். செயப்படுபொருள் குறித்தவிடத்துப், புலியைப் போலுங் கொற்றன் என ஐயுருபும் உடன் விரியும். (15)

[உவமவுருபுகள்.]

**367.** **போலப் புரைய வொப்ப வுறழ**
**மானக் கடுப்ப வியைய வேய்ப்ப**
**நேர நிகர வன்ன வின்ன**
**என்பவும் பிறவு முவமத் துருபே.**

**இ - ள்.** போல***நிகர - இப்போல முதலாகிய செயவெனெச்சம் பத்தும்—அன்ன இன்ன என்பவும் - அன்ன இன்ன என்னும் பெயரெச்சக்குறிப்பிரண்டும்—பிறவும் - இவை போல்வன பிறவும்—உவமத்துருபு - உவம வுருபுகளாம். எ - று.

பிறவென்றதனால், போல், புரை என்றற்றொடக்கத்து வினையடியாற் பிறத்தற்குரிய மற்றை வினையெச்ச விகற்பங்களும், பெயரெச்ச விகற்பங்களும், பொருவ, ஏற்ப, அனைய, இகல, எதிர, சிவண, மலைய முதலானவையுங் கொள்க. (16)

[உம்மைத் தொகை]

**368.** **எண்ண லெடுத்தன் முகத்த னீட்டல்**
**எனுநான் களவையு ளும்மில தத்தொகை.**

**இ - ள்.** எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் எனும் நான்கு அளவையும் - எண்ணலளவை எடுத்தலளவை முகத்தலளவை நீட்டலளவை யென்னும் நால்வகையளவைகளாற் பொருள்களை அளக்குமிடத்துத் தொடரும் அவ்வளவைப் பெயர்களுள்—உம்இலது அத்தொகை-உம்மையாகிய உருபு தொக்கு நிற்பவை அவ்வும்மைத் தொகைகளாம். எ - று.

வரலாறு.

| | |
|---|---|
| ஒன்றே கால்<br>கபில பரணர் | } எண்ணலும்மைத்தொகை. |
| கழஞ்சே கால்<br>தொடியே கஃசு | } எடுத்தலும்மைத்தொகை. |
| கலனே தூணி<br>நாழி யாழாக்கு | } முகத்தலும்மைத்தொகை. |
| சாணங்குலம்<br>சாணரை | } நீட்டலும்மைத்தொகை. |
| சேரசோழபாண்டியர்<br>புலி விற் கெண்டை | } பன்மொழித்தொகை. |

இவை, விரியுமிடத்து, ஒன்றுங்காலும், கழஞ்சுங்காலும், கலனுந்தூணியும், சாணுமங்குலமும், சேரனுஞ் சோழனும் பாண்டியனும் என விரியும்.

கபிலபரணர்ப் பரவினன் என வரும்வழிக், கபிலனையும் பரணனையும் பரவினன் என வேற்றுமையுருபும் உடன் விரியுமன்றோ? எனின், பரவினனென்னும் வருமொழி நோக்கி வேற்றுமைத்தொகையாகவும், கபிலபரணனென்னும் நிலைமொழியிரண்டையும் நோக்கி உம்மைத் தொகையாகவுங் கொள்ளப்படுமென்க. (17)

[அன்மொழித்தொகை.]

**369. ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி.**

இ - ள். ஐந்தொகைமொழிமேல் - வேற்றுமைத் தொகை முதலிய ஐவகைத் தொகைநிலைத் தொடர்மொழி களுக்கும் புறத்தே—பிற தொகல் - அவையல்லாத பிற மொழிகளாகிய உருபுகள் தொக்குவருவன—அன்மொழி - அன்மொழித்தொகைகளாம். எ - று.

வரலாறு.

(1.) பூங்குழல் என்பது இரண்டாம்வேற்றுமைத் தொகைப்புறத் துப் பிறந்த அன்மொழித்தொகை. இது பூவையுடைய குழலினையுடையாள் என விரியும்,

பொற்றொடி என்பது மூன்றாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இது பொன்னாலாகிய தொடியினையுடையாள் என விரியும்.

கவியிலக்கணம் என்பது நான்காம்வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இது கவிக்கிலக் கணஞ் சொல்லப்பட்ட நூல் என விரியும்.

பொற்றாலி என்பது ஐந்தாம்வேற்றுமைத் தொகைப்புறத் துப் பிறந்த அன்மொழித்தொகை. இது பொன்னினாகிய தாலியினையுடையாள் என விரியும்.

கிள்ளிகுடி என்பது ஆறாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இது கிள்ளியினது குடியிருக்குமூர் என விரியும்.

கீழ்வயிற்றுக் கழலை என்பது ஏழாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இது கீழ்வயிற் றின்கண் எழுந்த கழலைபோல்வான் என விரியும்.

(2.) தாழ்குழல் என்பது வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன் மொழித்தொகை. இது தாழ்ந்த குழலினையுடையாள் என விரியும்.

(3.) கருங்குழல் என்பது பண்புத்தொகைப்புறததுப்பிறந்த அன் மொழித்தொகை. இது கருமையாகிய குழலினையுடை யாள் என விரியும்.

(4.) துடியிடை என்பது உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இது துடிபோலுமிடையினையுடை யாள் என விரியும்.

(5.) தகரஞாழல் என்பது உம்மைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இது தகரமுஞாழலுங் கலந்துண் டாகிய சாந்து என விரியும்.

தகரஞாழன்முலை என்பது பன்மொழித்தொடர். இது தக ரமுஞாழலுங் கூடியுண்டாகிய சாந்தையணிந்த முலையினை யுடையாள் என விரியும்.

இனிப் பன்மொழித்தொடரில் அறுவகைத் தொகைகளுங் கலந்து தொகுமாறு:—திசழ் செவ்வான் மதித் திருமுகப் பூங்குழல் என வரும். இவை, விரியுமிடத்துத், திகழ்ந்த செம்மையாகிய வானத்தின்கண் மதிபோலுந்திருமுகத் தினையும் பூவையணிந்த குழலினையுமுடையாள் என விரியும். (18)

[தொகைநிலைத் தொடர்மொழிகளிற்
பொருள் சிறக்கும் இடங்கள்.]

**370. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி**
**எனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்.**

இ - ள். முன்மொழி-முன்மொழியும்—பின்மொழி - பின்மொழியும் — பன்மொழி - அனைத்துமொழியும்—பிற மொழி - அனைத்துமொழிக்கும் புறத்துவருமொழியும்— எனும் நான்கு இடத்தும் என்று சொல்லப்படும் இந்நான் கிடங்களுள் ஒன்றிலே—தொகைப் பொருள் சிறக்கும் - தொகைநிலைத்தொடர்ப்பொருள சிறந்து நிற்கும். எ - று.

வரலாறு.

(1.) குடம் வனைந்தான், குழிசி வனைந்தான், வேங்கைப்பூ, சண்பகப்பூ, விரிபூ, குவிபூ, செந்தாமரை, வெண்டாமரை, வேற்கண், கயற்கண் என்பனவைகளிலே, குடமுதலிய முன்மொழிகள் இனம்விலக்கி நிற்றலால், அம்முன்மொழி களிற் பொருள் சிறந்தன.

(2.) நிலமுழுதான், கண்ணிமை, நீர்க்குவளை, சுடுதீ, செஞ் ஞாயிறு என்பவைகளிலே, நிலமுதலிய முன்மொழிகள் இனமும் இனத்தை விலக்குதலுமின்றி நிற்றலால், உழு தான் முதலிய பின்மொழிகளில் பொருள் சிறந்தன.

(3.) கபிலபரணர், சேரசோழபாண்டியர், புலிவிற்கெண்டை யென்றற்றொடக்கத்தும்மைத்தொகைகளிலே, அனைத்து மொழிகளிலும் பொருள் சிறந்தன.

(4.) பூங்குழல், உயிர்மெய் என்றற் றொடக்கத்தன்மொழித் தொகைகளிலே, சொல்லுவோனுடைய கருத்து இவ்விரு மொழிப் பொருண்மேலதாகாது இவ்விருமொழியு மல்லாத உடையாண்முதலிய புறமொழிப்பொருண்மேலதாதலால், அப்புறமொழிகளிற் பொருள் சிறந்தன. (19)

[இடத்தொகை பெயர்த்தொகைகட்கு வேறுபாடறிகுறி.]

**371.** **வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும்**
**மெல்லொற்று வரினே பெயர்த்தொகை யாகும்.**

இ - ள். வல்லொற்றுவரின் இடத்தொகை ஆகும் - வல்லொற்றானது இடையே வந்தால் இடத்தின்கண்ணே தொக்க தொகையாகும்—மெல்லொற்று வரின் பெயர்த் தொகை ஆகும்—மெல்லொற்றானது இடையே வந்தாற் பெயரின்கண்ணே தொக்க தொகையாகும். எ - று.

உ - ம். (1.) வடுக்கண்ணன் இது வடுகநாட்டிற் பிறந்த கண்ணன் என விரியும். வடுகங்கண்ணன் இது வடுகனாகிய கண்ணன் என்றாயினும், வடுகனுக்கு மகனாகிய கண்ணன் என்றாயினும் விரியும்.

(2:) துளுவச்சாத்தன் இது துளுவநாட்டிற் பிறந்த சாத்தன் என் விரியும் துளுவஞ்சாத்தன் இது துளுவனாகிய சாத்தன் என்றாயினும், துளுவனுக்கு மகனாகிய சாத்தன் என்றாயினும் விரியும்.

வடுக்கண்ணனென்னும் இடத்தொகை "மவ்வீ றொற்றழிந்து" என்னுஞ் சூத்திரவிதியாலும் "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூத்திரவிதியாலும் புணர்ந்தது. வடுகங்கண்ணனென்னும் பெயர்த்தொகை "சிலவிகாரமா முயர்திணை" என்னும் விதியாற் புணர்ந்தது.

வல்லொற்று வரின் மெல்லொற்று வரின் என்றதனால் வல்லின முதன்மொழி வந்து புணர்ந்து இடத்

தொகையும் பெயர்த்தொகையுமாய் ஐயுறநிற்கும் போது இக்குறியினலே துணியப்படுமென்பதும், வடுகநாதன், வடுகவணிகன், வடுகவரசன் எனவரிற் சொல்லுவான் குறிப்பாலன்றி இவ்வாறு துணியப் படாவென்பதுந் தாமே போதருமென்க. (20)

[உம்மைத்தொகைக்குப் புறனடை.]

372. **உயர்திணை யும்மைத் தொகைபல ரீறே.**

இ - ள். உயர்திணை உம்மைத்தொகை - உயர்திணை யொருமையில் வரும் உம்மைத்தொகைகளானவை—பலர் ஈறே - ரவ்வொற்றுங் கள்ளுமாகிய பலர்பால் விகுதியுடையனவேயாம். எ - று.

உ - ம். கபிலபரணர், கல்லாடமாமூலர், சேரசோழபாண்டியர், தேவன்றேவிகள் என வரும். னகரவீறு இடையே கெடுதல் "சில விகாரமா முயர்திணை" என்பதனுலும், இறுதிக்கட் கெடுதல் இதனுட் "பல ரீறே" என்பதனு லுங் கொள்க.

பலரீறே என்னுந் தேற்றத்தால், அஃறிணையொருமையில் வரும் உம்மைத்தொகைகளும் பொதுத்திணையொருமை யில் வரும் உம்மைத்தொகைகளுந் தத்தம் பன்மையீருகவே வரல் வேண்டுமென்னும் நியதியின்றி, உண்மை, யின்மைகள், உண்மையின்மை, இராப்பகல்கள், இராப் பகல். எ-ம். தந்தைதாயர், தந்தைதாய்கள், தந்தைதாய்; சாத்தன் சாத்தியர், சாத்தன் சாத்திகள், சாத்தன் சாத்தி. எ-ம். பன்மையீற்ருலும் இயல்பாய ஒருமையீற்ருலும் வருமென்பதாயிற்று. இயல்பாகிய ஒருமையீற்ருல் வந்தனவாயின், உம்மைத்தொகையாகாது, கபிலன் பரண னிருவரும் வந்தாரென்ருற்போலச் செவ்வெண்ணு மன்றேவெனின், பலமொழிகளையுந் திரட்டி ஒரு பிண்ட மாகக் கூறியபோது உம்மைத்தொகையாகவும், பிளவு

படக் கூறியபோது செவ்வெண்ணாகவுங் கொள்ளப்படு மென்க. (21)

[தொகைநிலைத் தொடர்மொழிகள் பலபொருள்படுதல்.]

**373. தொக்குழி மயங்குந விரண்டு முதலேழ்**
**எல்லைப் பொருளின் மயங்கு மென்ப.**

இ - ள். தொக்குழி மயங்குந - வேற்றுமையுருபு முதலாகிய உருபுகள் தொக்கு நின்றவழிப் பொருள்களி னாலே மயங்குந் தன்மையனவாகிய தொடர்மொழிகள்— இரண்டு முதல் ஏழ் எல்லைப் பொருளின் மயங்கும் என்ப - இரண்டு முதல் ஏழீறாகிய பொருள்களால் மயங்கும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

**வரலாறு.**

(1.) தெய்வவணக்கம் என்பது, தெய்வத்தை வணங்கும் வணக்கம், தெய்வத்துக்கு வணக்கம் என இருபொருள்களி னாலே மயங்கியது.

(2.) தற்சேர்ந்தார் என்பது: தன்னைச் சேர்ந்தார், தன்னோடு சேர்ந்தார், தன்கட் சேர்ந்தார் என மூன்று பொருள்களி னாலே மயங்கியது:

(3). சொல்லிலக்கணம் என்பது, சொல்லினதிலக்கணம், சொற் கிலக்கணம், சொல்லின்கணிலக்கணம், சொல்லினதிலக் கணஞ்சொன்ன நூல் என நான்கு பொருள்களினாலே மயங்கியது.

(4.) பொன்மணி என்பது பொன்னாலாகியமணி, பொன்னாகிய மணி, பொன்னின்கண்மணி, பொன்னொடு சேர்ந்த மணி, பொன்னுமணியும் என ஐந்துபொருள்களினாலே மயங் கியது.

(5.) மரவேலி என்பது, மரத்தைக் காக்கும் வேலி, மரத்திற்கு வேலி, மரத்தினதுவேலி, மரத்தின் புறத்துவேலி, மரத்

தாலாகிய வேலி, மரமாகிய வேலி என ஆறுபொருள்களி னுலே மயங்கியது.

(6.) சொற்பொருள் என்பது, சொல்லாலறியப்படும் பொருள், சொல்லினது பொருள், சொற்குப் பொருள், சொல்லின் கட்பொருள், சொல்லும் பொருளும், சொல்லாகிய பொருள், சொல்லானது பொருள் என ஏழுபொருள்களி னுலே மயங்கியது. சொல்லானது பொருளென்றது 'தொகாநிலைப் பொருளாகிய எழுவாய்த்தொடர்.

(7.) புலி கொல் யானை என்னும் பன்மொழித்தொடர், புலியைக் கொன்ற யானை, புலியானது கொன்ற யானை, புலியினுலே கொல்லப்பட்ட யானை என மூன்று பொருள்களினுலே மயங்கியது.

இவ்வாறு செம்பொருள் கொள்ளாது வலிந்து பொருள் கொள்ளப்புகின் எழெல்லையென்னும் வரையறையினில்லாது பலவா மாதலின், அது தொன்னெறியன்றென்பது விளக்குதற்கு என்ப என்றார். (22)

**பரீக்ஷை வினக்கள்:**—10. சொல்லோடு சொற்றொடருந்தொடர்ச்சி எத்தனைவகைப்படும்? தொகைநிலைத் தொடர்மொழிகளாவன யாவை? 11. தொகைநிலைத்தொடர் எத்தனை வகைப்படும்? 12. வேற்றுமைத்தொகையாவன யாவை? இடையிலும் இறுதியிலுந் தொகும் உருபுகளெவை? இடையிலன்றி இறுதி யிலே தொகா உருபுகளெவை? வேற்றுமையுருபுகள் எவ்விடத் துந் தொகப்பெறுமோ? 13. வினைத்தொகையாவன யாவை? கொல்களிறு முதலியன முக்காலமும் பற்றி வரின், எவ்வாறு பெயர் பெறும்? வினைப்பகுதி விகாரப்பட்டும் வினைத்தொகை வருமோ? 14. பண்புத்தொகையாவன யாவை? பண்பென்பன எவை? செந்தாமரையென்பதிற் பண்பெது பண்பியெது? 15. உவமத்தொகையாவன யாவை? உவமை எவைபற்றிவரும்? உவமத்தொகையில் வேற்றுமையுருபும் உடன்விரிதலுண்டோ? 16. உவமவுருபுகளெவை? 17. உம்மைத்தொகையாவன யாவை? கபிலபரணர்ப் பரவினுன் என்பது எத்தொகையாகக்

கொள்ளப்படும்? 18. அன்மொழித்தொகையாவன யாவை? 19. தொகைநிலைத் தொடர்மொழிகளினிடத்து எவ்வெம் மொழியிற் பொருள்சிறந்து நிற்கும்? 20. வல்லெழுத்து முதன்மொழி வந்து புணரப்பெற்று இடத்தொகையோ பெயர்த்தொகையோ வென ஐயுறநிற்குந் தொகைகளில் இஃதின்னதென்பது எதனாலே துணியப்படும்? 21. உயர் திணையொருமையில் வரும் உம்மைத்தொகையீறு எவ்வாறு நிற்கும்? அஃறிணையொருமை யும்மைத்தொகையீறு, பொதுத் திணையொருமை யும்மைத்தொகையீறுகள் எவ்வாறு நிற்கும்? இயல்பாகிய ஒருமையீற்றால் வந்தன உம்மைத் தொகையாவ தெங்ஙனம், செவ்வெண்ணன்றோ? 22. தொகைநிலைத்தொடர் மொழிகளை விரித்துப் பொருள் கொள்ளுமிடத்து, அவற்றுள் ஒருபொருள் படுவனவன்றிப் பலபொருள் படுவனவுமுளவோ?

---

## தொகா நிலைத்தொடர்மொழி

**374.** முற்றீரெச்ச மெழுவாய் விளிப்பொருள்
ஆறுரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலை.

இ - ள். முற்று ஈரெச்சம் எழுவாய் விளிப்பொருள் - வினைமுற்றும் பெயரெச்சமும் வினையெச்சமும் எழுவாயும் விளியுமாகிய ஐவகைப்பொருள்களினிலே பெயர் வினைகள் புணரும் புணர்ச்சியும்—ஆறு உருபு - வேற்றுமைப்பொருள் களில் அவற்றினுருபுகளாகிய இரண்டாவது முதலிய ஆறுருபுகளும் இடையே விரிந்து நிற்கப் பெயர்வினைகள் புணரும் புணர்ச்சியும்—இடை உரி - இடைச்சொற்புணர்ச்சி யும் உரிச்சொற்புணர்ச்சியும்—அடுக்கு - ஒருசொல்லடுக்கி வரும் புணர்ச்சியுமாகிய—இவை தொகாநிலை - இவ்வொன்ப துந் தொகாநிலைத்தொடர்மொழிகளாம். எ - று.

**வரலாறு.**

| | |
|---|---|
| (1.) உண்டான் சாத்தன்<br>குழையன் கொற்றன் | வினைமுற்றுத்தொடர். |

(2) உண்ட சாத்தன்
கரிய சாத்தன் } பெயரெச்சத்தொடர்.

(3.) உண்டு வந்தான்
உழுதன்றி புண்ணான் } வினையெச்சத்தொடர்.

(4.) சாத்தன் வந்தான்..............எழுவாய்த்தொடர்.

(5.) சாத்தா வா............. .........விளித்தொடர்

(6.) குடத்தை வனைந்தான்
வாளால் வெட்டினான்
இரப்போர்க்கீந்தான்
மலையினிழிந்தான்
சாத்தனதுகை
மலையின்கணுளி } வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

(7.) மற்றொன்று.......................இடைச்சொற்றொடர்.

(8.) நனிபேதை.........................உரிச்சொற்றொடர்.

(9.) பாம்பு பாம்பு......................அடுக்குத்தொடர்.

வேற்றுமைத்தொகை விரிந்தவிடத்து வேற்றுமைத்தொகாநிலைத்தொடராம். வேற்றுமையருபும் பொருளும் உடன்றொக்கத்தொகை விரிந்தவிடத்து, முன்னது வேற்றுமைத் தொகாநிலைத் தொடரும், பின்னது பெயரெச்சத்தொகாநிலைத் தொடருமாம். வினைத்தொகை விரிந்தவிடத்துப் பெயரெச்சத் தொகாநிலைத் தொடராம். பண்புத்தொகையும் உம்மைத்தொகையும் விரிந்தவிடத்து இடைச்சொற்றொடராம். உவமைத்தொகை விரிந்தவிடத்து முன்னது இடைச்சொற்றொடரும், பின்னது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்ச வினையெச்சத்தொடருமாம். அன்மொழித்தொகை விரிந்தவிடத்து வேற்றுமைத்தொகாநிலைத் தொடர்முதல் ஏற்பனவாம்.

**பரீக்ஷை வினாக்கள்:**—23. தொகாநிலைத்தொடர்மொழிகளென்பன எவை? வேற்றுமைத்தொகை விரிந்தவிடத்து என்ன தொகாநிலைத்தொடராம்? வேற்றுமையுருபும் பொருளும் உடன்றொக்கத்தொகை விரிந்தவிடத்து என்ன தொகாநிலைத்தொடராம்? வினைத்தொகை விரிந்தவிடத்து என்ன தொகாநிலைத்

தொடராம்? பண்புத்தொகையும் உம்மைத்தொகையும் விரிந்த விடத்து என்ன தொடராம்? உவமைத்தொகைவிரிந்தவிடத்து என்ன தொடராம்? வேற்றுமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை விரிந்தவிடத்து என்ன தொடராம்? வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை விரிந்தவிடத்து என்ன தொடராம்? பண்புத்தொகைப்புறத் துப் பிறந்த அன்மொழித்தொகை விரிந்த விடத்து என்ன தொடராம்? உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன் மொழித்தொகை விரிந்தவிடத்து என்ன தொடராம்? உம் மைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை விரிந்த விடத்து என்ன தொடராம்?

---

## வழா நிலை வழுவமைதி

[வழு விகற்பங்கள்.]

**375.** **திணையே பாலிடம் பொழுது வினவிறை**
**மரபா மேழு மயங்கினும் வழுவே.**

இ - ள். திணை பால் இடம் பொழுது வினா இறை மரபு ஆம் ஏழும் - இருதிணையும் ஐம்பாலும் மூவிடமும் முக் காலமும் வினாவும் விடையும் பலவகை மரபுகளும் ஆகிய ஏழும்—மயங்கின் வழு ஆம் - தத்தநெறி மயங்கின் வழு வாம். எ - று.

திணைமுதலியவனைத்தும் மரபாயினும், இங்ஙனம் விதவா தொழிந்தனவற்றை மரபெனக் கொள்கவென்பார், அதனை இறுதியிலே சொன்னார். மரபாவது தொன்றுதொட்டு வழங்கு முறைமை.

**வரலாறு.**

(1.) அவன் வந்தது........................ .. ..திணை வழு.
(2.) அவன் வந்தான்....... .......................பால் வழு.
(3.) யான் வந்தான்.................. ......... ..இட வழு.

(4.) நாளை வந்தான்............................. ..........கால வழு.

(5.) கறக்கின்ற எருமை பாலோ சினையோ...வினா வழு.

(6.) கடம்பூர்க்கு வழியாது? எனின், இடம்பூணி*வென்னாவின் கன்றன்று என்பது } விடை வழு.

(7.) யானை மேய்ப்பானை இடையன் ஆடுமேய்ப்பானைப் பாகன் என்பன } மரபு வழு.

இவ்வாறே எழுவகைவழுக்களையுமுணர்ந்து, வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் அவை வாராமல் நீக்குக. (24)

[திணையோடு வினாவிடையும் பாலோடு வினாவிடையும் வழுவாமற் காத்தல்.]

**376. ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்**
**மெய்தெரி பொருண்மே லன்மையும் விளம்புப.**

**இ - ள்.** திணை பால் ஐயம் அவ்வப் பொதுவினும் - திணையையத்தையும் பாலையத்தையும் அவ்வவற்றின் பொதுச்சொல்லாலும்—மெய்தெரிபொருண்மேல் அன்மையும் - துணிந்த பொருண்மேல் அல்லாத தன்மையை வைத்தும்—விளம்புப - சொல்லுவர் புலவர். எ - று.

**வி.** (1.) ஒருபொருளைக் கண்டவிடத்துக் குற்றியோ மகனோ என்று திணையில் ஐயந்தோன்றியபோது, குற்றியோ மகனோ அவ்விடத்துத் தோன்றுகின்றவுரு எனப் பொதுச்சொல்லால் வினவுக. குற்றிக்கும் மகனுக்கும் உருப் பொதுப்பட நிற்றலால், உருப் பொதுச் சொல்லாயிற்று. [குற்றி - மரக்கட்டை.] இங்கே உருவின் பரியாயமெல்லாங் கொள்க. இங்ஙனம் கூறாது, தோன்றா நின்றது, தோன்றாநின்றான் எனச் சிறப்புச் சொல்லாற் கூறிற்றிணைவழுவும் வினாவழுவுமாம்.

(2.) ஆண்மகனோ பெண்மகளோ என உயர்திணைபால் ஐயந் தோன்றியபோது, ஆண்மகனோ பெண்மகளோ

* இடம்பூணி—இடப்பக்கத்திற் பூட்டப்பட்ட எருது.

அங்கே தோன்றுகின்றவர் எனப் பொதுச் சொல்லால் வினவுக. ஆண்பெண்ணிரண்டல்லது பலர்பாலென வேறொன்றின்றி அவ்விருபாற்கும் பொதுப்பட நிற்றலால், தோன்றுகின்றவரென்பது பொதுச் சொல்லாயிற்று. இங்ஙனங் கூறாது, தோன்றுகிறவன், தோன்றுகிறவள் எனச் சிறப்புச்சொல்லாற் கூறிற் பால்வழுவும் வினவழுவுமாம்.

(3.) ஒன்றோ பலவோ என அஃறிணையிற் பால் ஐயந் தோன்றியபோது, ஒன்றோ பலவோ இச்செய்புக்க பெற்றம் எனப் பொதுச்சொல்லால் வினவுக. பெற்றமென்பது பால்பகாவஃறிணைப்பெயராய் அத்திணையிருபாற்கும் பொதுப்பட நிற்றலாற் பொதுச்சொல்லாயிற்று. [செய் - வயல். பெற்றமென்பது பசுவுங் காளையும்.] இங்ஙனங் கூறாது, புக்கது, புக்கன எனச் சிறப்புச் சொல்லாற் கூறிற் பால்வழுவும் வினவழுவுமாம்.

விடை. (1.) குற்றியோ மகனோ என்றையுற்றபோது, துணிந்த பொருள் குற்றியெனின், மகனன்று. எ-ம். மகனெனிற் குற்றியல்லன். எ-ம். துணிந்த பொருண்மேல் மற்றொன்றல்லாத தன்மையை வைத்துக் கூறுக.

(2.) ஆண்மகனோ பெண்மகளோ என்றையுற்றபோது துணிந்த பொருள் ஆண்மகனெனின், பெண்மகளல்லன். எ-ம். பெண்மகளெனின், ஆண்மகனல்லள். எ-ம். துணிந்த பொருண்மேல் மற்றொன்றல்லாத தன்மையை வைத்துக் கூறுக.

(3.) ஒன்றோபலவோ என்றையுற்றபோது, துணிந்த பொருள் ஒன்றெனின், பலவன்று. எ-ம். பலவெனின், ஒன்றல்ல. எ-ம். துணிந்தபொருண்மேல் மற்றொன்றல்லாத தன்மையை வைத்துக் கூறுக.

மகனன்று என்பதை மகனினன்று என ஐந்தாம்வேற்றுமைப்புணர்ச்சி யென்பாருமுளர். அதுபோல்வரும்

நீயல்லன் என்பதும் அங்ஙனம் விரித்தல் கூடாமை யால், அல்வழிப்புணர்ச்சியுள் எடுத்து விதந்த பதி ஞென்கின் புறத்ததாய் அடங்குமென்க. ஒழிந்த ஐந்து உதாரணங்களும் அவ்வாறேயாமென்க.

மகனல்லன் அவ்வுருக்குற்றி எனக் கூறிற் சொற்பல் குதலென்னும் விடை வழுவாம். (25)

[திணை வழுவமைதி.]

**377.** **உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறும்**
**அதனொடு சார்த்தி னத்திணை முடிபின.**

**இ - ள்.** உயர் திணை தொடர்ந்த பொருள் முதல் **ஆறும்** - உயர்திணையெழுவாயைத் தொடர்ந்த அஃறிணைப் பொருளாதி யாறும்—அதனொடு சார்த்தின் - அவ்வுயர் திணையோடு சேர்த்து முடிக்கின்—அத்திணை முடியின - அவ்வுயர்திணை முடிபினவாம். எ - று.

தொடர்தலாவது அஃறிணைப் பொருளாதியாறும் உயர் திணைக்குக் கிழமைப்பொருள்களாய் நிற்றல். சார்த்தலாவது உயர்திணையெழுவாயின் பயனிலையோடு அஃறிணையெழுவாயை யும் உடன் முடித்தல்.

**உ - ம்.** நம்பி பொன் பெரியன்
நம்பி நாடு பெரியன்
நம்பி வாழ்நாள் பெரியன்
நம்பி மூக்குக் கூரியன்
நம்பி குடிமை நல்லன்
நம்பி நடை கடியன்

இங்கே உயர்திணை யெழுவாயின் பய னிலையோடு அஃ றிணை யெழுவாயு முடிந்ததறிக.

"சொற்றொறுமிற்றிதன்பெற்றி" என்பதனாலே, கிளை நீருநிற்று, மாடு கோடு கூரிது என அஃறிணையோடு சேர்ப்பின், அஃறிணை முடிபினவாதலுங் கொள்க.

சார்த்தின் எனவே, சார்த்தாவிடின், வழாநிலையாக, நம்பிக் குப் பொன் பெரிது, மூக்குக் கூரிது' எனத்தம் முடிபு கொள்ளுமென்க.

பொன்னென்னும் அஃறிணையெழுவாய், நம்பியென்னும் உயர்திணையெழுவாயினது பயனிலையாகிய பெரியனென்னும் உயர்திணைவினையைக்கொண்டு முடிதலால் வழுவாகித், தொடர்புண்டாயிருத்தல்பற்றிச் சார்த்தி முடித்தலால் வழுவமைதியாயிற்று. (26)

[திணைபான்மரபு வழுவமைதி]

**378.** **திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்**
**மிகவினு மிழிபினு மொருமுடி பினவே.**

**இ - ள்.** திணை - திணைகளும்—பால் - பால்களும்—பலபொருள் - வெவ்வேறு வினைக்குரிய பல பொருள்களும்—விரவின - தத்தமிற்கலந்து ஒருதொடராக வருவனவாயின் அவை—சிறப்பினும் மிகவினும் இழிபினும் ஒரு முடிபின - சிறப்பினாலும் மிகுதியினாலும் இழிவினாலும் ஒரு முடிபினவாகும். எ - று.

**வரலாறு.**

திணை: (1.) "அங்கண் விசும்பி னகனிலாப்பாரிக்குந்—திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற் - றிங்கண்—மறுவாற்றுஞ் சான்றோரஃதாற்றார் தெருமந்து—தேய்வ ரொருமா சுறின்" என்புழி, இருதிணையுங் கலந்து, சிறப்பினால் ஒப்பர், என்னும் உயர்திணைமுடியைப் பெற்றன. சான்றோர் திங்கள்போல மறுத் தாங்கமாட்டாமை இங்கே சிறப்பு.

(2.) பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்—மூத்தாரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்—காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்—போற்றி யெனப்படுவார்" என்புழி, இருதிணையுங் கலந்து, மிகுதியால் 'இவர்கள்' என்னும் உயர்திணைமுடியைப் பெற்றன. பசுவென அஃறிணைப்பொருள் ஒன்றேயாகப் பார்ப்

பார் முதலிய உயர்திணைப்பொருள் ஏழாதல் இங்கே மிகுதி.

(3.) "மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா" என்புழி இருதிணையுங் கலந்து, இழிவினால் 'விடா' என அஃறிணை முடிபைப் பெற்றன.

பால்: "நானு மென்சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோந்—தானுந்தன் றையலுந் தாழ்சடையோ னாண்டில னேல்—வானுந் திசைகளு மாகடலு மாயபிரான்—றேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ." என்புழி, ஆண்பாலும் பெண்பாலுங் கலந்து, சிறப்பினால் 'ஆண்டிலன்' என ஆண்பால் முடிபைப் பெற்றன. பெண்ணினும் ஆண் உயர்ந்தமை இங்கே சிறப்பு. "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" என்பதனாலே கலவாதெண்ணித், தோழனுந் தானும் வந்தான், தோழியுந்தானும் வந்தாள் என முடிதலுங் கொள்க.

மரபு: கறியுஞ் சோறுமுண்டான்; மாலையுமுடியுங் கவித்தான் என்புழி, வேறுவினைப்பல்பொருள்கள் கலந்து சிறப்பினால் 'உண்டான்' 'கவித்தான்' என ஒரு பொருட்குரிய வினைமுடிபைப்பெற்றன. உண்டலென்னும் வினைக்குரிய சோறு தின்றலென்னும் வினைக்குரிய கறியினுந் தலைமையுடைமையும், கவித்தலென்னும் வினைக்குரிய முடி சூடுதலென்னும் வினைக்குரிய மாலையினுந் தலைமையுடைமையும் இங்கே சிறப்பு.

இங்கே இறுதியிற் சொல்லிய மரபுவழுவமைதி "வேறுவினைப்பல்பொருடழுவிய பொதுச்சொலும்—வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்" என்னுஞ் சூத்திரத்தோடு மாறுகொளக் கூறலன்றோ வெனின், சிறப்பு முதலிய குறியாது ஒத்த நிலைமையில் எண்ணியபோது முடிபு அங்கே கூறுதலால், அதற்கு இது மாறுகொளக் கூறலன்றென்க. (27)

[திணைபால் வழுவமைதி.]

**379. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும்
இழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே.**

**இ - ள்.** உவப்பினும்-மகிழ்ச்சியினாலும்—உயர்வினும்-மேன்மையினாலும்—சிறப்பினும் - சிறப்பினாலும்—செறலினும் - கோபத்தினாலும்—இழிப்பினும் - பழிப்பினாலும்—பால் திணை இழுக்கினும் இயல்பு - பாலுந் திணையும் வழுவி வரினும் இயல்பாம். எ - று.

**வரலாறு.**

**பால்:** (1.) தன்புதல்வனை என்னம்மை வந்தாள் என்பது உவப்பினால் ஆண்பால் பெணபாலாயிற்று.

(2.) ஒருவனை அவர் வந்தார் என்பது உயர்வினால் ஒருமைப்பால் பன்மைப்பாலாயிற்று.

(3.) "தாதாய் மூவேழுலகுக்குந் தாயே" என்பது சிறப்பினால் ஆண்பால் பெண்பாலாயிற்று.

(4.) "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்—தேரான் பிறனில் புகல்" என்பது செறலினாற் பன்மைப்பால் ஒருமைப்பாலாயிற்று.

(5.) பெண்வழிச் செல்வானை நோக்கி இவன்பெண் என்பது இழிப்பினால் ஆண்பால் பெண்பாலாயிற்று.

**திணை:** (1.) ஒரு பசுவை என்னம்மைவந்தாள் என்பது உவப்பினால் அஃறிணை உயர்திணையாயிற்று.

(2.) "செந்தார்ப் பசுங்கிளியார் சென்றூர்க்கோ ரின்னுரை—தந்தா ரேற்றந் தாரென் னின்னுயிர்" என்பது உயர்வினால் அஃறிணை உயர்திணையாயிற்று.

(3.) "தம்பொரு ளென்பதம் மக்கள்" என்பது சிறப்பினால் உயர்திணை அஃறிணையாயிற்று.

(4.) "எவ்வுஞ் செய்கலான் றான்றேரா னவ்வுயிர்—போஓ மளவுமோர் நோய்" என்பது செறலினால் உயர்திணை அஃறிணையாயிற்று.

இனிச் "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" என்பத னாலே, புதல்வனை அப்பன் வந்தான் என்றும், புதல்வியை அம்மை வந்தாள் என்றும், வழங்கும் மரபு வழுவமைதிகளுங் கொள்க. (28)

[பாலிடவழுவமைதி.]

**380.** **ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்**
**ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே.**

**இ - ள்.** ஒருமையின் பன்மையும் - ஒருமைப்பாலிற் பன்மைப்பாற் சொல்லையும்—பன்மையின் ஒருமையும் - பன்மைப்பாலில் ஒருமைப்பாற் சொல்லையும்—ஓரிடம் பிற விடம்-ஓரிடத்தில் பிறவிடச்சொல்லையும்—தழுவலும் உள- தழுவிக் கூறுதல்களும் உளவாம். எ - று.

**வரலாறு.**

**பால்:** (1.) வெயிலெல்லா மறைத்தது மேகம்என்புழி அஃறிணையிலே வெயிலென்னும் ஒருமைப்பாலில் எல்லாமென்னும் பன்மைச்சொற் சேர்த்துச் சொல்லப்பட்டது. "அஃதை தந்தை யண்ணல்யானை யடுபோர்ச்செழியர்" என்புழி, உயர்திணையிலே தந்தையென்னும் ஒருமைப்பாலிற் செழியரென்னும் பன்மைச்சொற் சேர்த்துச் சொல்லப்பட்டது. அஃதைதந்தை அஃதைக்குத் தந்தையென விரியும். [அஃதையென்பது திக்கற்றவன் திக்கற்றவள் திக்கற்றது என உயர்திணையாணொருமை பெண்ணொருமை அஃறிணை யொருமைகளில் விரவி நிற்பதோர் பொதுச்சொல்.] தந்தையென்னும் ஒருமையிற் செழியரெனப் பன்மை வந்தது வழு; தனித்தனி ஒவ்வொருவ

ராகக் கூடிச் செழியனென நின்ற பன்மையில், ஒவ்வொருவருந் தனித்தனி அம்மைதைக்குந் தந்தை போல்வராதலால், வழுவமைதியாயிற்று.

(2.) இரண்டுகண்ணுஞ் சிவந்தது என்புழி, அஃறிணையிலே இரண்டென்னும் பன்மைப்பாலில் சிவந்ததென்னும் ஒருமைச்சொற் சேர்த்துச் சொல்லப்பட்டது. "புலைய னெறிந்த பூசற் றண்ணுமை - யேவ விளையர் தாய்வயி றுகரிப்ப" என்புழி, உயர்திணையிலே ஏவலிளையரென்னும் பன்மைப்பாலில் தாயென் ஒருமைச்சொல் சேர்த்துச் சொல்லப்பட்டது. [ஏவலிளையர் - போர்புரி வீரர்.] ஏவலிளையர் தாய் ஏவலிளையருக்குத் தாயென விரியும். சேனை முழுமையுமுள்ள இளையருக்குத் தாய் ஒருத்தியாதல் கூடாமையால், இங்கே தாயென ஒருமை வருதல் வழு; இச்சேனையிலே திரண்டு நின்ற இளையருள் ஒவ்வொருவருக்குந் தாயெனத் தனித்தனி சென்றியைதலால், வழுவமைதியாயிற்று.

இடம்: (1.) சாத்தன்றாயிவை செய்வலோ என்புழி, யானெனச் சொல்லல்வேண்டுந் தன்மையிலே சாத்தன்தாயெனப் படர்க்கைச்சொல் சேர்த்துச் சொல்லப்பட்டது. சாத்தன்தாயாகிய யான் என்பது பொருள்.

(2.) "திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செகுக்க லாகு — நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ணலாகு—மொண்பொரு ளாவ தையா வுடன் பிறப்பாக்க லாகா—வெம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்றான்" என்புழித், தன்தம்பியை முன்னிலைப்படுத்து அவனையே நோக்கிக்கூறுதலால், நின்னையெனச் சொல்லல் வேண்டும் முன்னிலையிலே எம்பியையெனப் படர்க்கைச்சொல் சேர்த்துச்சொல்லப்பட்டது.

நீயோ அவனோ யாரிது செய்தார்; யானோ அவனோ யாரிது செய்தார்; நீயோ யானோ யாரிது செய்தார்;

நீயோ அவனோ யானோ யாரிது செய்தார் எனவிரவி ஓரிடத்திற் பிறவிடம் வருதலுங் கொள்க. (29)

[இடம் வழுவாமற் காத்தல்.]

**381. தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை**
**எழுவா யிரண்டு மெஞ்சிய வேற்கும்.**

**இ-ள்.** தரல் வரல் கொடை செலல் படர்க்கை சாரும் - தரல் என்பது முதலிய இந்நான்கு சொற்களையும் படர்க்கை யடையும்—எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும்- இவற்றுள் முதலிலே நின்ற தரல் வரல் என்னும் இரண்டு சொற்களையும் ஒழிந்த தன்மைமுன்னிலைகள் ஏற்கும். எ-று.

தரல் வரல் கொடை செலலென்பன அவ்வப்பகுதிகளை யுணர்த்தி நின்றன வாதலால், அப்பகுதிகளாற் பிறக்கும் வினை விகற்பங்களனைத்துங் கொள்க.

வ-று. அவனுக்குத் தந்தான்; அவனிடத்து வந்தான்; அவனுக்குக் கொடுத்தான், அவனிடத்துச் சென்றான். எ-ம். எனக்குத்தந்தான்; என்னிடத்து வந்தான். எ-ம். உனக்குத் தந்தான். உன்னிடத்து வந்தான். எ-ம். வரும்.

தரல் வரலென்னுமிரண்டையுந் தன்மை முன்னிலைக்குங் கூட்டினமையாற் படர்க்கைக்கே சிறந்தன. கொடை செல லென்னு மிரண்டுமென்பதும், ஒழிந்ததரலும்வரலும் அத்துணைச் சிறப்பினவல்லவென்பதும் பெற்றாம். (30)

[காலம்.]

**382. இறப்பெதிர்வு நிகழ்வெனக் கால மூன்றே.**

**இ-ள்.** காலம் - முன்சொல்லப்பட்ட காலம் — இறப்பு எதிர்வு நிகழ்வு என மூன்று - இறந்தகாலமும் எதிர்காலமும் நிகழ்காலமுமென மூன்றாம். எ-று. (31)

[காலவழுவமைதி]

383. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே.

இ - ள். முக்காலத்தினும் ஒத்து இயல் பொருளை - தந்தொழிலிடையறுமல் மூன்றுகாலங்களினும் ஒருதன்மையையுடையனவாய் நிகழும் பொருள்களை—நிகழும் காலத்தான் செப்புவர் - நிகழ்காலத்திற் சொல்லுவர் புலவர். எ - று.

உ - ம். மலைநிற்கின்றது; தெய்வமிருக்கின்றது; கடவுளளிக்கின்றார் என வரும். மலைக்கு நிற்றலும், தெய்வத்திற்கு இருத்தலும், கடவுட்கு அளித்தலும் முக்காலத்தினும் உள்ளனவாதல் காண்க. (32)

384. விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும்
பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி.

இ - ள். விரைவினும் - விரைவினாலும்—மிகவினும் - மிகுதியினாலும்—தெளிவினும் - தெளிவினாலும்—இயல்பினும் - இம்மூன்று காரணங்களுமின்றி இயல்பினாலும்—முக்காலமும் பிறழவும் பெறூஉம் ஏற்புழி - மூன்றுகாலங்களும் ஒன்று மற்றொன்றாகச் சொல்லப்படவும் பெறும் ஏற்குமிடத்து. எ - று.

உ - ம். (1.) சோறு வேவாநிற்க அதனையுண்டுபோதற்கு இருப்பானை விரைவில் உடன் கொண்டுபோகவேண்டிய மற்றொருவன் பார்த்து இன்னும் உண்டிலையோ என்றால் உண்டேனுண்டேன் என்பான். உண்ணாநிற்பானை அவ்வாறு வினவினாலும், உண்டேனுண்டேன் என்பான். இங்கே விரைவுபற்றி எதிர்காலமும் நிகழ்காலமும் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டன.

(2.) அக்காட்டிற் புகிற் கூறை பறிகொடுத்தான்; களவு செய்ய நினையிற் கையறுப்புண்டான் என்றவழி, மிகுதிபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப் பட்டது. கூறை பறிகொடுத்தலுங்கையறுப்புண்ணு தலுந் தவறினுந் தவறுமாதலால், மிகுதியெனப்பட் டன.

(3.) அறஞ்செயிற் சுவர்க்கம் புக்கான்; எறும்பு முட்டை கொண்டு திட்டையேறின் மழை பெய்தது என்ற வழித், தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டது. சுவர்க்கம் புகுதற்கு அறஞ்செய் தல் காரணமென்பது உரையளவையினாலும், மழை பெய்தற்கு எறும்பு முட்டையெடுத்து மேட்டிலேறு தல் காரணமென்பது காட்சியளவையினாலுந் தெளி யப்பட்டமையினாலே, தெளிவாயின. [உரையளவை- ஆகமப்பிரமாணம், காட்சியளவை - பிரத்தியக்ஷப் பிரமாணம்.]

(3.) யாம் பண்டு விளையாடுவதிச்சோலை; யாம் பண்டு விளையாடுகிறதிச்சோலை என்றவழிக், காரணமின்றி இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமும்நிகழ்காலமு மாகச் சொல்லப்பட்டது. (33)

[அறுவகை வினா.]

**385. அறிவறி யாமை யையுறல் கொளல்கொடை**
**ஏவ றரும்வினா வாறு மிழுக்கார்.**

இ - ள். அறிவு - அறிதலும்—அறியாமை - அறியா மையும் — ஐயுறல்-சந்தேகித்தலும்— கொளல்-கொள்ளுத லும்—கொடை - கொடுத்தலும்—ஏவல் - ஏவுதலுமாகிய அறுவகைப்பொருளையுங் களையாது கொள்வர் புலவர். எ-று.

உ - ம். (1.) ஆசிரியன் இச்சூத்திரத்திற்குப் பொருள் யாது என் பது அறிவினா. (2.) மாணாக்கன் அப்படிச் சொல்

வது அறியாவினா. (3) குற்றியோ மகனோ என்பது ஐயவினா. (4) படறுளதோ வணிகீர் என்பது கொளல் வினா. (5) சாத்தனுக்காடையில்லையா என்பது கொடை வினா. (6) சாத்தாவுண்டாயா என்பது ஏவல்வினா. (34)

[எண்வகை விடை.]

386. சுட்டு மறைநே ரேவல் வினாதல்
உற்ற துரைத்த லுறுவது கூறல்
இனமொழி யெனுமெண் ணிறையு ளிறுதி
நிலவிய வைந்துமப் பொருண்மையி னேர்ப.

இ - ள். சுட்டு - சுட்டும்—மறை - எதிர்மறுத்தலும்—நேர் - உடன்படலும்—ஏவல் - ஏவுதலும்—வினாதல் - எதிர் வினவுதலும்—உற்றது உரைத்தல் - உற்றதைச் சொல்லுதலும்—உறுவது கூறல்-உறுவதைச் சொல்லுதலும்—இன மொழி - இனத்தைச் சொல்லுதலும்—எனும் எண்ணிறையுள் - என்னும் இவ்வெட்டு விடைகளுள்—இறுதி நிலவிய ஐந்தும் அப்பொருண்மையின் நேர்ப-ஈற்றில் விளங்கிய ஐந்தும் அவ்விடைப்பொருளைத் தருதலினாலே விடைகளாகவே தழுவிக்கொள்ளுவார் புலவர். எ - று.

எனவே, முதன்மூன்றுஞ் செவ்வனிறையும், பின்னையவைந் தும் மறை பயப்பனவுமா மென்பதாயிற்று.

வ - று. (1) தில்லைக்கு வழியாது எனின், இது என்பது சுட்டு விடை. (2) சாத்தாவிது செய்வாயா என்றயோர்க்கு, செய்யேனென்பது மறைவிடை. (3) செய்வே னென்பது நேர்விடை. (4) நீ செய் என்பது ஏவல் விடை. (5) செய்வேனோ என்பது வினாவிடை. (6) உடம்பு நொந்தது, நோவாநின்றது என்பன உற்றதுரைத்தல் விடை. (7) உடம்பு நோம் என்

பது உறுவது கூறல் விடை (8) மற்றையது செய்வேன் என்பது இனமொழிவிடை. (35)

[வினுவிடைகளின் முதல் சினை வழுவாமை]

387. வினுவினுஞ் செப்பினும் விரவா சினைமுதல்.

இ - ள். வினுவினும் செப்பினும் - வினுவுதற்கண்ணும் விடைகொடுத்தற்கண்ணும்—சினை முதல் விரவா - சினையும் முதலும் ஒற்றுமை கருதி மயங்கச் சொல்லப்படாவாம். எ - று.

வ - று. கண் பிறழ்ந்ததோ கயல் பிறழ்ந்ததோ: சாத்தனல்லனே கொற்றனல்லனே. எ-ம். இவ்வாறு வினுவினுர்க்குக், கண் பிறழ்ந்தது கயல் பிறழ்ந்தது; சாத்தனல்லன் கொற்றனல்லன். எ-ம். வரும். பிறவுமன்ன. எனவே, கண் பிறழ்ந்ததோ எனச் சினையை வினவுவான் அதனையொழித்து அதனையுடையாளைக் கருதி இவள் பிறழ்ந்தாளோ கயல் பிறழ்ந்ததோ என வினவுதலும், இவள் பிறழ்ந்தாள் எனச் செப்புதலும், இவ்வாறு முதலை வினவுவானுஞ் செப்புவானும் அதனையொழித்துச் சினையை வினவுதலுஞ் செப்புதலும் வழுவாமென்பதாயிற்று. (36)

[மரபு.]

388. எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

இ - ள். எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர் செப்பினர் - யாதொருபொருளை யாதொரு சொல்லால் யாதொரு வழியால் அறிவுடையோர்கள் சொன்னர்களோ—அப்படிச் செப்புதல் மரபு - அப்பொருளை அச்சொல்லால் அவ்வழியாற் சொல்லுதல் மரபாம். எ - று.

வ - று. குதிரைக்குட்டி, யானைக்குட்டி, புலிக்குட்டி. எ - ம். யானைக்கன்று, பசுக்கன்று, மான்கன்று. எ - ம். யானை

யிலண்டம், ஆட்டுப்புழுக்கை, எருமைச்சாணம். எ-ம். வரும். இப்படியன்றிப், பசுவின்குட்டி, குதிரைக்கன்று, யானைச்சாணம், எருமையிலண்டம் எனக் கூறின், மரபு வழுவாம். (87)

[மரபு வழாநிலை.]

**389. வேறுவினைப் பல்பொரு டழீஇய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்.**

இ-ள். வேறுவினைப் பல்பொருள் தழீஇய பொதுச்சொலும்-வெவ்வேறு வினைகளுக்குரிய பலபொருள்களையும் ஒருங்கு தழீஇ நிற்கும் ஒருபொதுச்சொல்லும்—வேறு அவற்று எண்ணும் - அவற்றின் சிறப்புச் சொற்களாக எண்ணி நிற்கும் பல சொற்களும்—ஓர் பொதுவினை வேண்டும் - ஒன்றற்குரிய சிறப்புவினையை வேண்டாது எல்லாவற்றிற்குமுரியதோர் பொதுவினையை வேண்டுவனவாம். எ-று.

உ-ம். (1.) அடிசிலென்பது உண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலால், அடிசிலயின்றார் அடிசின் மிசைந்தாரென்க. அணியென்பது கவிப்பன கட்டுவன இடுவன தொடுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலால், அணியணிந்தார் அணிதாங்கினாரென்க. இயமென்பது கொட்டுவன ஊதுவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலால், இயமியம்பினார் இயம்படுத்தாரென்க. படையென்பது எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற்றிற்கெல்லாம் பொதுச்சொல்லாதலால், படைவழங்கினார் படைதொட்டாரென்க.

(2.) சிலநாட் சோறுஞ் சிலநாண் மாவுஞ் சிலநாட் பாலுஞ் சிலநா ணீருஞ் சிலநாட் கருதும் அயின்றார். அல்லது மிசைந்தாரென்க. முடியுங் குழையு மோதிரமு மரைநாணு மணிந்தார்; பறையுங் குழலு மியம்பினார்; வாளும் வேலும் வழங்கினாரென்க. (88)

**390.** வினைசார் பினமிட மேவி விளங்காப்
பலபொரு ளொருசொற் பணிப்பர் சிறப்பெடுத்தே.

**இ - ள்.** *வினை சார்பு இனம் இடம் மேவி விளங்காப் பலபொருளொருசொல் - குறித்தபொருளை விளக்கும் வினையுஞ் சார்பும் இனமும் இடமும் பொருந்தி விளங்காத பலபொருளொரு சொல்லை—சிறப்பு எடுத்துப் பணிப்பர் - சிறப்புச்சொல்லோடு கூட்டிச் சொல்லுவர் புலவர். எ - று.*

*எனவே, வினைமுதலியவற்றுள் ஒன்றைப்பொருந்தி விளங்கிக் கிடந்த பலபொருளொருசொல்லை வாளா கூறுவரென்பதாயிற்று.*

**வ - று.** (1.) *மாவென்பது மாமரத்திற்கும் வண்டிற்கும் ஒருசார் விலங்கிற்குந் திருவிற்கும் பொதுவான பலபொருளொருசொல். இப்பொருள்களுள், மாப்பூத்தது, மாக்காய்த்தது என்றவழி, மரமென்பது வினையால் விளங்கிற்று, மாவீழ்மலர் என்றவழி, வண்டென்பது சார்பால் விளங்கிற்று: தேர் கரி மா காலாள் என்றவழிக், குதிரையென்பது இனத்தால் விளங்கிற்று. மாமறுத்த மார்பன் என்றவழித் திருவென்பது இடத்தால் விளங்கிற்று இவை வாளா கூறப்பட்டன.*

(2.) *இனி மாவேறினான், மாவியாது என்றவழிக், குறித்த பொருள் விளங்காமையால், விளங்குதற்பொருட்டுப், பாய்மாவேறினான், மாமரமேறினான், பாய்மாயாது, மாமரம் யாது எனச் சிறப்புச்சொல்லோடு கூட்டிக் கூறுக. பிறவுமன்ன.* (39)

**391.** எழுத்திய றிரியாப் பொருடிரி புணர்மொழி
இசைத்திரி பாற்றெளி வெய்து மென்ப.

**இ - ள்.** *எழுத்து இயல் திரியாப் பொருள் திரி புணர்மொழி - எழுத்தினது தன்மை வேறுபடாது பொருள் வேறுபட்டுச் சொல்லும் பொருளும் ஐயுற நிற்குந் தொடர்*

மொழிகள்—இசைத் திரிபால் தெளிவு எய்தும் என்ப - குறிக்கப்பட்ட சொற்களினிறுதியும் முதலுந் தோன்ற இசையறுத்துச் சொல்லும் வேறுபாட்டினாலே துணியப் படும் என்று சொல்லுவர் புலவர். எ - று.

எனவே அவ்வாறு இசையறுத்துக் கூறுதல் மரபென்ப தாயிற்று.

உ - ம். செம்பொன் பதின்றொடி, நாகன்றேவன் போத்து, குன்றேறுமா, குறும்பரம்பு என வரும். இவை, செம் பொன்-பதின்றொடி என இசையறுத்துக் கூறின், செம் பொன் பத்துப்பலம். எ-ம். செம்-பொன்பதின்றொடி என இசையறுத்துக் கூறின் செம்பு ஒன்பது பலம். எ-ம். நாகன் - றேவன் - போத்து என இசையறுத்துக் கூறின், நாகனுந் தேவனும் போத்தும் எ-ம், நாகன்றே - வன் போத்து என இசையறுத்துக் கூறின், இளம்பெண் ணெருமையன்று முதிர்ந்த எருமைக்கடா. எ-ம். குன் றேறு - மா என் இசையறுத்துக்கூறின், குன்றின்மே லேறாத விலங்கு. எ-ம். குன்றே - றுமா என இசையறுத் துக் கூறின், குன்றின்மேலேறுங் காட்டுப்பசு. எ - ம். குறும்பர் அம்பு என இசையறுத்துக் கூறின், குறுநில மன்னருடைய அம்பு. எ - ம். குறும் - பரம்பு என இசை யறுத்துக் கூறின், குறுமையாகிய கழனி திருத்தும் பலகை. எ-ம். பொருள் துணியக் கிடந்தமை காண்க. (40)

[மரபு வழாநிலையும் வழுவமைதியும்.]

392. ஒருபொருண் மேற்பல பெயர்வரி னிறுதி
ஒருவினை கொடுப்ப தனியு மொரரோவழி.

இ - ள். ஒருபொருண்மேல் பலபெயர்வரின் - ஒரு பொருளின்மேலே பலபெயர்கள் வருமாயின்—இறுதி ஒரு வினை கொடுப்ப - பொருளொன்றே யென்பது தோன்ற இறுதியில் ஒருமுடிக்குஞ் சொல்லைக் கொடுத்துக் கூறுவர்—

ஓரோவழித் தனியும் (கொடுப்ப) - ஒருபொருளாகுனைக் தவறுதவிடத்தே பெயர்தோறுங் கொடுத்துங் கூறுவர் புலவர். எ - று.

வ - று. (1.) ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான். எ-ம். "குயிலைச் சிலம்படிக் கொம்பினைத் தில்லையெங் கூத்தப்பிரான்—கயிலைச் சிலம்பிற்பைம் பூம்புனங் காக்குங் கருங்கட் செவ்வாய்—மயிலைச் சிலம்பகண்டியான்போய் வருவன் தண்பூங் கொடிகள்—பயிலச் சிலம்பெதிர் கூய்ப்பண்ணை நண்ணும் பளிக்கறைக்கே." எ-ம். இவை இறுதியிலே முறையே, வந்தான். எ - ம். கண்டு. எ - ம். ஒரு முடிக்குஞ் சொல்லைக் கொண்டன.

(2) "மூவர்கண் முதல்வன் வந்தான் முக்கணன் குமரன் வந்தான்—மேவலர் மடங்கல் வந்தான் வேற்படை வீரன் வந்தா—னேவருந் தெரித ரேற்று திருந்திடு மொருவன் வந்தான்—றேவர்க டேவன் வந்தா னென்றன சின்ன மெல்லாம்" என்புழி முதல்வன், குமரன், மடங்கல், வீரன், ஒருவன், தேவன் என்பன முருகனென்னும் ஒருபொருளேயென்பது தெளிய நின்றமையினாலே, பெயர்தோறும் வந்தான் என ஒருவினைகொடுக்கப்பட்டமை காண்க. (41)

**393. திணைநிலஞ் சாதி குடியே யுடைமை**
**குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ**
**டியற் றேற்றிடிற் பின்வரல் சிறப்பே.**

இ - ள். திணை - ஐந்திணையும்—நிலம் - தேசமும்—சாதி - குலமும்—குடி - குடியும்—உடைமை - உடைமையும்—குணம் - குணமும்—தொழில் - தொழிலும்—கல்வி - வித்தையும் ஆகிய இவற்றைப்பற்றி வரும்—சிறப்பு ஆம் பெயரோடு இயற்பெயர் ஏற்றிடின் - சிறப்புப்பெயருடனே

இயற்பெயரை ஒருபொருள் ஒருங்கேற்குமாயின் — பின் வரல் சிறப்பு - அவ்வியற்பெயர் பின் வருதல் சிறந்த மரபாம். எ - று.

பின்வரல் சிறப்பே என்றதனால், முன் வருமென்பதும், அது வழுவமைதியென்பதும் பெற்றாம்

வரலாறு.

| | | |
|---|---|---|
| குன்றன் கொற்றன் | கொற்றன் குன்றவன் | திணை. |
| அருவாளனழகன் | அழகனருவாளன் | நிலம். |
| பார்ப்பான் பாராயணன் | பாராயணன் பார்ப்பான் | சாதி. |
| ஊர்கிழாரோணன் | ஓண னூர்கிழான் | குடி. |
| பொன்னன் பொறையன் | பொறையன் பொன்னன் | உடைமை. |
| கரியன் சம்பன் | சம்பன் கரியன் | குணம். |
| நாடகி நம்பி | நம்பி நாடகி | தொழில். |
| ஆசிரிய னமிழ்தன் | அமிழ்தனாசிரியன் | கல்வி. |

இன்னும், இயற்பெயர் முன்வருமிடத்து வைத்தியநாதநாவலன் கச்சியப்பப்புலவன் என இறுதி விகாரமாக வருத லுங் காண்க. (42)

394. படர்க்கை முப்பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.

இ - ள். படர்க்கை முப்பெயரோடு சுட்டுப்பெயர் அணையின் - படர்க்கையிடத்தையுடைய உயர்திணைப்பெயர் அஃறிணைப்பெயர் விரவுப்பெயர் என்னு மூவகைப் பெயர்களோடு சுட்டுப்பெயர் சேரின்—பின் வரும்வினை யெனின் - அச்சுட்டுப்பெயர் அம்மூவகைப்பெயர்க்கும் பின் வரும் அவ்விடத்தே வினையாகிய முடிக்குஞ்சொல் வருமாயின்— பெயர்க்கு எங்கும் மருவும் - அம்முடிக்குஞ் சொல்லில்லை யாயின் அப்பெயர்க்குப் பின்னு முன்னும் வரும்—வழக்

கிடை - இம்மரபு வழக்கத்தினிடத்தவாம் — செய்யுட்கு ஏற்புழி - செய்யுளிடத்தே நியதியின்றி வேண்டியவாறே வரப்பெறும். எ - று.

வ - று. (1) நம்பி வந்தான் அவனுக்குச் சோறிடுக. எ-ம். எருது வந்தது அதற்குப் புல்லிடுக. எ-ம். சாத்தன்றெய்வம் அவனுக்குப் பலியிடுக. எ-ம். சாத்தன் வந்தது அதற்குப் புல்லிடுக. எ-ம். வினைநிகழ்வழிச் சுட்டுப்பெயர் பின் வந்தன.

(2) நம்பியவன், அவனம்பி எனப் பெயர்க்குப் பின்னும் முன்னுஞ் சுட்டுப்பெயர் வந்தன.

(3) "அவணணங்கு நோய்செய்தா ளாயிழாய் வேலன்—விறன்மிகுதாரச் சேந்தன்பேர் வாழ்த்தி-முகனமர்ந் —தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னை கொல்—பின்னை யதன்கண் விளைவு" எனச் செய்யுளில் வினைவருவழியும் வந்தது.

சுட்டுப்பெயர் செய்யுளிடத்துப் பின் வருதல் வழாநிலை; முன்வருதல் வழுவமைதி. வழக்கிடத்து வினைநிகழ்வழிப் பின் வருதல் வழாநிலை. (43)

**395. அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்**
**இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்.**

இ - ள். அசைநிலை - அசைநிலைக்கும்—பொருணிலை - விரைவு வெகுளி உவகை அச்சம் அவல முதலிய பொருணிலைக்கும்—இசைநிறைக்கு- இசைநிறைக்கும்—ஒருசொல் இரண்டு மூன்று நான்கு எல்லை முறை அடுக்கும் - ஒரு மொழி இரண்டு மூன்று நான்களவு முறையே அடுக்கும். எ - று.

எனவே, அசைநிலைக்கிரண்டும், பொருணிலைக்கிரண்டு மூன்றும், இசைநிறைக்கிரண்டும் மூன்றும் நான்கும் அடுக்குமென்பதாயிற்று.

வரலாறு.

(1.) அன்றே யன்றே... ..............................அசைநிலை.

(2.) உண்டேனுண்டேன்; போ போ போ..............விரைவு.

(3.) எய்யெய்; எறி யெறி யெறி...........................வெகுளி.

(4.) வருக வருக; பொலிக பொலிக பொலிக...........உவகை.

(5 ) பாம்பு பாம்பு; தீத்தீத்தீ.................................அச்சம்.

(6.) உய்யேனுய்யேன்; வாழேன் வாழேன் வாழேன்...அவலம்.

(7.) { ஏயே யம்பன் மொழிந்தனள் யாயே / நல்குமே நல்குமே நல்குமே நாமகள் / பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ } ...இசைநிறை.

ஒரு சொல்லைப் பலகாற் சொல்லுதல் வழுவாயினும், இவ்விடத்தே ஆமென்றல் வழுவமைதியும், இதற்கு இவ்வெல்லை கடவாதென்றல் வழுவாமற் காத்தலுமாம். (44)

[மரபு வழாநிலை.]

**396. இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா.**

இ - ள். இரட்டைக்கிளவி - இரட்டைச்சொற்கள் — இரட்டின் பிரிந்து இசைபா - அவ்விரட்டிப்பினின்றும் பிரிந்து தனித்தொலியாவாம். எ - று.

எனவே, வலிந்து பிரித்துக் கூறிற் பொருள்படாதென்பதும், இரட்டித்துக் கூறுதலே மரபென்பதுமாயிற்று.

உ - று. "சலசல மும்மதம் பொழிய;" "கலகல-கூந்துணை யல்லால்;" "குறுகுறு நடந்து;" "வற்றிய வோலை கலகலக்கும்;" "துடிதுடித்துத் துள்ளி வரும்;" என வரும். துடிதுடித்து என்புழிப் பின்னையது பிரிந்திசைக்குமாயினும், முன்னையது பிரிந்திசையாமையால், இரட்டைச்சொல்லேயாமென்க. (45)

**397. ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார்.**

இ - ள். ஒருபொருட் பல்பெயர் - ஒருபொருளின் மேற் பலபெயர் சொல்லும்போது—பிரிவு இல வரையார் -

அப்பொருளினின்றும் பிரிதலில்லாதனவற்றை நீக்காது கொள்வர் புலவர். எ - று.

எனவே, பிரிவுள்ளனவற்றை நீக்குவரென்பதாயிற்று.

வ - று. ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான்; பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வந்தான் என்பன, பிரிவிலவாய்ப், பலபெயரும் ஒருபொருளின்மேற்சென்று கேட்போர்க்குச் சொல்லுவோன் குறித்த பொருளை விளக்கி நின்றன.

பகையியல்பாயிலி படைக்கை மறவன்; எழுத்துணர்வில்லோனிலக்கண நிறைகடல் எனவரிற், பகையியல்பாசுவே யில்லாதவனைப் படைக்கை மறவனென்றலும், எழுத்துணர்வில்லாதவனை இலக்கணநிறைகடலென்றலுங் கூடாமையாற் பிரிந்து வழுவாமென்க. (46)

[மரபு வழுவமைதி]

**398. ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா.**

இ - ள். ஒருபொருட் பன்மொழி - ஒருபொருளைக் குறித்து வரும் பலசொற்கள்—சிறப்பினின் - அவ்வாறு வருதற்கோர் காரணமின்றாயினுஞ் சிறந்து நிற்கையால்—வழா - அவை வழுவென்று நீக்கப்படாவாம். எ - று.

சிறந்துநிற்றல் செவிக்குச்சொல்லின்பந் தோன்றநிற்றல்.

வ - று. மீமிசைஞாயிறு, புனிற்றிளங்கன்று, நாகிளங்கமுகு, உயர்ந்தோங்கு பெருவரை, குழிந்தாழ்ந்த கண் என வரும். (47)

[மரபு வழுவாமற் காத்தல்.]

**399. இனைத்தென் றறிபொரு ளுலகினிலாப் பொருள்**
**வினைப்படுத் துரைப்பி னும்மை வேண்டும்.**

இ - ள். இனைத்து என்று அறிபொருள் - இவ்வளவினதென்று வரையறைப்படுத்தப்படும் பொருளும்—உலகின்

இலாப்பொருள் - எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாத பொருளும்—வினைப்படுத்து உரைப்பின் - வினைப்படுத்துச் சொல்லும்போது — உம்மை வேண்டும் - முற்றும்மையை வேண்டிநிற்கும். எ - று.

வ - று. (1) தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்; இறைவற்குக் கண் மூன்று முச்சுடர்; வேதநான்குமுணர்ந்தான் என இனைத்தென்றறிபொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டி நின்றன.

(2) முயற்கோடாகாயப்பூ என்றுமில்லை; ஒளிமுன்னிருளெங்குமில்லை என உலகின் இலாப்பொருள்கள், வினைப்படுத்துச் சொல்லும்போது, முற்றும்மை வேண்டி நின்றன. (48)

[மரபு வழுவமைதி.]

**400. செயப்படு பொருளைச் செய்தது போலத்**
**தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே.**

இ - ள். செயப்படுபொருளைச் செய்ததுபோல - செயப்படுபொருளைக் கருத்தாவைப்போல வைத்து — தொழிற்படக் கிளத்தலும் - அதன்மேல் அவ்வினைமுதல் வினை யேற்றிக் கூறுதலும்—வழக்கினுள் உரித்து - வழக்கினிடத்துரித்தாம். எ - று.

வ - று. இம்மாடியான் கொண்டது; இச்சோறியான் கொடுத்தது; இவ்வெழுத்தியானெழுதியது என வரும்.

கிளத்தலும் என்ற உம்மையினாலே, கருமத்தைக் கருத்தாவாகக் கூறுதலேயன்றிக், கருவி நிலஞ் செயல் காலங்களைக் கருத்தாவாகக் கூறுதலும் அமையுமென்பது பெற்றாம். அவை வருமாறு:—இவ்வெழுத்தாணி யானெழுதியது—கருவி; இவ்வீடியானிருந்தது—நிலம்; இத்தொழில் யான் செய்தது—செயல்; இந்நாள் யான் பிறந்தது—காலம் எனவரும். (49)

[மரபு வழுவாமற் காத்தலும் மரபு வழுவமைதியும்.]

**401. பொருண்முத லாறு மடைசேர் மொழியினம்
உள்ளவு மில்லவு மாமிரு வழக்கினும்.**

இ - ள். பொருள் முதல் ஆறு ஆம் அடைசேர் மொழி - பொருளாதி ஆறாகிய அடைகளடுத்து வரும் மொழிகள்—இனம் உள்ளவும் இல்லவும் ஆம் - இனமுள்ளவையேயாமன்றி இனமில்லாதவையுமாம் — இருவழக்கினும் - உலகவழக்கினுள்ளுஞ் செய்யுள் வழக்கினுள்ளும். எ - று.

அடையினால் அடுக்கப்பட்டது அடைகொளியெனப்படும். அடையெனினும் விசேடணமெனினும் பொருந்தும். அடைகொளியெனினும் விசேடியமெனினும் பொருந்தும். இனச்சுட்டுள்ளவடை பிறிதினியைபுநீக்கிய விசேடணமெனவும் இனச்சுட்டில்லாவடை தன்னொடியைபின்மைநீக்கிய விசேடணமெனவும் பெயர் பெறும்.

வரலாறு.

| இனமுள்ளன. | இனமில்லன. | |
|---|---|---|
| நெய்க்குடம் | உப்பளம் | பொருள். |
| குளநெல் | ஊர்மன்று | இடம். |
| கார்த்திகை விளக்கு | நாளரும்பு | காலம். |
| பூமரம் | இலைமரம் | சினை. |
| செந்தாமரை | செம்போத்து | குணம். |
| ஆடுபாம்பு | தோய்தயிர் | தொழில். |

என வழக்கிடத்து வந்தன. அளமெனவே உப்பென்பதும், மன்றெனவே ஊரென்பதும், அரும்பெனவே நாளென்பதும், மரமெனவே இலையென்பதும், போத்தெனவே செம்மையென்பதும், தயிரெனவே தோய்தலென்பதும் தாமே வந்திசைதலால், அளமுதலியன அடையின்றியும் இப்பொருளாதியாறையு முணர்த்தும். உப்பிலா அளமும், ஊரில்லா மன்றும், நாளிலா அரும்பும், இலையிலா மரமும்,

செம்மையில்லாப் போத்தும் தோய்தலில்லாத் தயிரும். இல்லையாதலால், இவை இனமில்லனவாயின. இனி முற் கூறிய செய்க்குடமுதலிய இன முள்ளனவற்றை அடை கொடாது கூறிற் குறித்தபொருள் விளங்காமற் பொதுமை யினிற்குமாதலால், அவற்றிற்கு அடைகொடுத்துக் கூறு தலே மரபாயிற்று.

இனிச் செய்யுள் வழக்கில் வருமாறு:—"பொருட்பெண்டிர் பொய்ம்மைமுயக்கம்"—பொருள். "கான்யாற்றடைகரை"—இடம். "முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது"—காலம். "கலவமா மயிலெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா"—சினை. "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கியாங் கிவள்"—குணம். "ஆடரவாடவாடு மம்பலத் தமிர்தே" தொழில். இவை இனமுள்ளன. "பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே"—பொருள், "வடவேங்கடந் தென் குமரி"—இடம். "வேனிற்கோங்கின் பூம்பொருட்டன்ன"—காலம். "சிறுகர் வண்டு செவ்வழி பாட"—சினை. "செஞ் ஞாயிற்று நிலவு வேண்டினும்"—குணம். "முழங்குகட லோத மூழ்கிப் போக"—தொழில். இவை இனமில்லன.

இனமுள்ளனவற்றை அடை கொடுத்துக் கூறுதல் வழா நிலையும், இனமில்லனவற்றை அடைகொடுத்துக் கூறுதல் வழு வமைதியுமாமென்க. (50)

[மரபு வழுவாமற் காத்தல்.]

**402. அடைமொழி யினமல் லதுந்தரு மாண்டுறின்.**

இ - ள். அடைமொழி - முன்சொல்லப்பட்ட அடை சேர்மொழி—இனம் அல்லதும் தரும் - இனத்தைத் தரு தலேயன்றி அதனோடு இனமல்லாதனவையும் தரும்—ஆண்டு உறின் - அவ்விடத்துக்குப் பொருந்துமாயின். எ - று.

உ - ம். பாவஞ் செய்தான் நரகம் புகுவான் என்ற அளவிலே, புண்ணியஞ்செய்தான் சுவர்க்கம்புகுவான் என இனத்தைத் தருதலேயன்றி, அவன் இது செய்யின் இருவருமென்

னும் அறிவிலி என்னும் இனமல்லாதனையுந் தந்தது. மேலைச்சேரிச் சேவலலைத்தது என்ற அளவிலே கீழைச்சேரிச் சேவலலைப்புண்டது என இனத்தைத் தருதலேயன்றி, அச்சேவலையுடையார்க்கு வெற்றியாயிற்று என்னும் இன மல்லாதனையுந் தந்தது. (51)

[மரபு வழுவாமற் காத்தலும் மரபு வழூவமைதியும்.]

**403.** அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செய்யுட்கே.

இ - ள். அடை சினை முதல் முறை அடைதலும் - ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலும் ஒன்றையொன்று விசேடித்து வருதலும்—ஈரடை முதலோடு ஆதலும் - இரண்டடை முதலை விசேடித்து வருதலும்—வழக்கு இயல் - வழக்கு நடையாம்—ஈரடை சினையொடு செறிதலும் - இரண்டடை சினையை விசேடித்து வருதலும்—மயங்கலும் - இவ்வரம்பு கடந்து வருதலும்—செய்யுட்கு - செய்யுணடையாம். எ - று.

வழக்கு: (1.) வேற்கை முருகன், செங்காலனாரை, முழங்கு திரைக் கடல் இவை ஓரடையும் ஒருசினையும் ஒருமுதலுமாகி ஒன்றையொன்று விசேடித்து வந்தன.

(2.) மனைச்சிறு கிணறு, சிறுகருங்காக்கை. இவை இரண்டடை முதலை விசேடித்து வந்தன.

செய்யுள்: (1.) "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த;" "கருநெடுங் கண்டருங் காமநோயே" இவை இரண்டடை சினையை விசேடித்து வந்தன.

(2.) "பெருந்தோட் சிறுமருங்கிற் பேரமர்க்கட் பேதை;" "சிறுநுதற் பேரமர்க் கட்செப்ப வாயைப நண்ணிடையாய்" இவை இவ்வரம்பு கடந்து வந்தன.

அடைசினை முதன்முறை யடைதலென்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்த மூன்றும் வழுவமைதியுமாமென்க. (52)

[மரபு வழுவமைதி]

**404. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.**

இ - ள். இயற்கைப் பொருளை - இயற்கைப்பொருள் செயற்கைப்பொருளென இருவகைப்படும் பொருள்களுள் இயற்கைப்பொருளை--இற்று எனக்கிளத்தல்-இத்தன்மைத் தென்று சொல்லுக. எ - று.

இயற்கைப்பொருள் தனக்குப் பின்றோன்றாது தான்றோன் றும்போது உடன்றோன்றிய தன்மையையுடைய பொருள். செயற்கைப்பொருள் தனக்குப் பின்றோன்றிய தன்மையை யுடைய பொருள். [இயற்கை - அவிகாரம். செயற்கை-விகாரம்.]

வ - று. நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; மயிர் கரிது; பால் வெளிது; பயிர் பசியது; மெய் யுள்ளது; பொய்யில் லது என வரும்.

இயற்கைப் பொருளை இற்றென்னும் வினைக்குறிப்பாகிய செயற்படுத்துக் கூறுதலின், இது வழுவமைதியாயிற்று. (53)

[மரபு வழுவாமற் காத்தலும் வழுவமைதியும்.]

**405. காரண முதலா வாக்கம் பெற்றுங்**
**காரண மின்றி யாக்கம் பெற்றும்**
**ஆக்க மின்றிக் காரண மடுத்தும்**
**இருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்.**

இ - ள். செயும்பொருள் - செயற்கைப் பொருள்—காரணம் முதலா ஆக்கம் பெற்றும் - காரணச்சொல் முன் வர ஆக்கச்சொற் பின்வரப்பெற்றும்—காரணம் இன்றி ஆக்கம் பெற்றும் - காரணச் சொற்றொக்கு நிற்க ஆக்கச் சொல் வரப்பெற்றும்—ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும்-

ஆக்கச்சொற் றொக்கு நிற்கக் காரணச்சொல் வரப்பெற்றும்—இருமையும் இன்றியும் இயலும் - இவ்விருவகைச் சொல்லுந் தொக்கு நிற்கவும் நடக்கும். எ - று.

வ - ு. (1) கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்லவாயின; எருப்பெய்து இளங்களைகட்டு நீர் கால் யாத்தமையாற் பயிர் நல்லவாயின. இவை முன் காரணச்சொல்லும் பின் ஆக்கச்சொல்லும் வரப் பெற்றன.

(2) மயிர் நல்லவாயின; பயிர் நல்லவாயின. இவை காரணச் சொற்றொக்கு நிற்க ஆக்கச்சொல் வரப் பெற்றன.

(3) கடுவுங் கைபிழியெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல; எருப்பெய்து இளங்களைகட்டு நீர் கால் யாத்தமையாற் பயிர் நல்ல. இவை ஆக்கச்சொற் றொக்கு நிற்கக் காரணச்சொல் வரப்பெற்றன.

(4) மயிர்நல்ல; பயிர்நல்ல. இவை காரணச்சொல் ஆக்கச் சொல் இரண்டுந் தொக்கு நிற்கப்பெற்றன.

காரணமுதலா ஆக்கம் பெறுதலொன்றும் வழுவாமற் காத்தலும், ஒழிந்த மூன்றும் வழுவமைதியுமாமென்க. (54)

[மரபு வழுவாமற் காத்தல்.]

**406.** தம்பா லில்ல தில்லெனி னினனாய்
உள்ளது கூறி மாற்றியு முள்ளது
சுட்டியு முரைப்பர் சொற்சுருங் குதற்கே.

இ - ள். தம்பால் இல்லது இல் எனின் - தம்மிடத்து இல்லாத பொருளை இல்லையெனப் புகின்—இனன் ஆய் உள்ளது கூறி மாற்றியும் - வினவப்பட்டதற்கு இனமாய்த் தம்மிடத்துள்ள பொருளைச்சொல்லி அச்சொல்லைக்கொண்டு அதனையில்லையென்றும்—உள்ளது சுட்டியும் - உள்ளபொரு

ளாயின் இவ்வளவுண்டென்றும்—உரைப்பர் சொற் சுருங்குதற்கு - சொல்லுவர் வினாவும் விடையுமாகிய சொற்கள் சுருங்குதற்பொருட்டு. எ - று.

று. (1) பயறுண்டோ வணிகீரே என்றவருக்கு, அஃதில்லையென்பார், உழுந்துண்டு, உழுந்துந்துவரையுமுண்டு என அதனினத்தைச் சொல்லக்கடவர், இவ்வினமொழிகள் பயறில்லையென்னும் விடைப்பொருளைத் தந்து நிற்றலேயன்றி, மேலே உழுந்துண்டோ துவரையுண்டோ என்னும் வினாக்களும் அவற்றிற்கு விடைகளும் பல்காமற் காத்து நிற்றலுமுடையனவாதல் காண்க.

(2) பயறுண்டோ வணிகீரே என்றவருக்கு அஃதுண்டென்பார், இருகலமுண்டு, இருதூணியுண்டு என அதனளவைச் சொல்லக்கடவர். இவ்வளவைமொழிகள் பயறுண்டென்னும் விடைப்பொருளைத் தந்து நிற்றலே யன்றி, மேலே எவ்வளவுண்டு என்னும் வினாவும் அதற்கு விடையும் பல்காமற் காத்துநிற்றலுமுடையனவாதல் காண்க. (55)

**407. ஈதா கொடுவெனு மூன்று முறையே
இழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை.**

இ - ள். ஈ தா கொடு எனும் மூன்றும் - ஈ தா கொடு என்னும் மூன்று சொற்களும்—முறையே இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை - முறையே இழிந்தவனும் ஒப்பவனும் உயர்ந்தவனும் இரத்தற்கு வருஞ் சொற்களாகும். எ - று.

எனவே, ஈ என்பது இழிந்தோன் உயர்ந்தோனிடத்து இரக்கும் இரப்புரையும், தா என்பது ஒப்போன் ஒப்போனிடத்து இரக்கும் இரப்புரையும், கொடு என்பது உயர்ந்தோன் இழிந்தோனிடத்து இரக்கும் இரப்புரையுமாமெனக் கொள்க.

வ - று. தந்தாயீ இழிந்தோனிரப்பு. தோழா தா ஒப்போனிரப்பு. மைந்தா கொடு உயர்ந்தோனிரப்பு என வரும். பிறவழி வரும் ஒப்புயர்வு தாழ்வுகளிலும் இப்படியேயொட்டுக. ()

[மரபு வழுவமைதி]

**408. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே.**

இ - ள். முன்னத்தின் உணருங் கிளவியும் உள - வெளிப்படையானன்றிக் குறிப்பினாற் பொருளறியப்படுஞ் சொற்களுஞ் சிலவுளவாம். எ - று. [முன்னம் - குறிப்பு.]

அவையாவன ஒன்றொழி பொதுச்சொன் முதற் சொல்லு வான் குறிப்பீறாகப் பெயரியலிலே பன்னிரண்டாஞ் சூத்திரத்துச் சொல்லப்பட்டனவாம்.

வ - று. குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர் என்றவழிப், பெருஞ் செல்வவாழ்க்கையர் என்பது குறிப்பினானுணரப்பட்ட பொருளாம். பிறவுமன்ன.

கேட்பவர்கள் வருத்தப்படாமல் அவர்களுக்குப் பொருள் விளங்கச்சொல்லல் மரபாதலால், இது வழுவமைதியாயிற்று. ()

**409. கேட்குந போலவும் கிளக்குந போலவும்**
**இயங்குந போலவு மியற்றுந போலவும்**
**அஃறிணை மருங்கினு மறையப் படுமே.**

இ - ள். கேட்குந போலவும் - கேளாதனவற்றைக் கேட்பனபோலவும்—கிளக்குந போலவும் - பேசாதனவற்றைப் பேசுவனபோலவும்—இயங்குந போலவும் - நடவாதனவற்றை நடப்பனபோலவும்—இயற்றுந போலவும்-இத்தொழில்களல்லன பிற செய்யாதனவற்றைச் செய்வன போலவும்—அஃறிணை மருங்கினும் அறையப்படும் - அஃறிணையிடத்துஞ் சொல்லப்படும். எ - று.

வ - று. (1) "நன்னீரை வாழி யனிச்சமே" என்புழிக், கேளாதது கேட்பது போலச் சொல்லப்பட்டது.

(2) "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்" என்புழிப், பேசாதது பேசுவதுபோலச் சொல்லப் பட்டது.

(3) "இவ்வழி யவ்வூர்க்குப்போகும்" என்புழி, நடவாதது நடப்பது போலச் சொல்லப்பட்டது.

(4) "தன்னெஞ்சே தன்னைச் சுடும்" என்புழிச், செய்யாதது செய்வது போலச் சொல்லப்பட்டது. (58)

**410.** **உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்**
**பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.**

இ - ள். உருவக உவமையில் - உருவகத்திலும் உவமையிலும்—திணை (பிறழ்தலும்) - உயர்திணை யஃறிணை தம்முண் மயங்குதலும்—சினை முதல்கள் பிறழ்தலும்-சினை முதல் தம்முண் மயங்குதலும்—பிறவும் - இவ்வியலுட் சொல்லாதொழிந்தவையும் — பேணினர் கொளல் - பாதுகாத்துக்கொள்க எ - று.

**வரலாறு.**

**உருவகம்.** (1) தம்மரசனாகிய சிங்கத்திற்குப் பகைவர் கூட்டமாகிய யானைகளஞ்சியோடின என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. கல்விமங்கையை நல்லோர் விரும்புவார் என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

(2) அவ்வரசனுக்குத் தம்பியரிருவரு மிரண்டு தோள்கள் என உயர்திணைமுதல் உயர்திணைச் சினையோடு மயங்கிற்று. முகமாகிய மதி என உயர்திணைச் சினை அஃறிணைமுதலோடு மயங்கிற்று.

**உவமை:** (1) மயில்போலு மங்கை என உயர்திணை அஃறிணையோடு மயங்கிற்று. நெற்பயிர்கள் கல்வியுடையார் போலிறைஞ்சிக் காய்த்தன என அஃறிணை உயர்திணையோடு மயங்கிற்று.

(2) கயல்போலுங் கண் என உயர்திணைச்சினை அஃறிணை முதலோடு மயங்கிற்று. தளிர்போலு மேனி என உயர்திணை முதல் அஃறிணைச்சினையோடு மயங்கிற்று.

இனிப் பிறவுமென்றதனால், இவன் சரசுவதிக் கொப்பானவன் எனப் பால் மயங்கக் கூறுதலும், செங்கோல், வீரக்கழல் என ஒருபொருட்டன்மையை மற்றொரு பொருண்மேல் வைத்துக் கூறுதலும், ஈந்தான் என்பதற்கு அருளினான் என ஒருவினையை மற்றொரு வினையாற் கூறுதலும், அரசு, வேந்து என உயர்திணையை அஃறிணையாகக் கூறுதலும் பிறவுங் கொள்க. (59)

**பரீக்ஷை வினாக்கள்**:—24. வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளுங் களைதற்பாலனவாகிய வழுக்கள் எவை? 25. திணையயத்திணையும் பாலையத்திணையும் எவ்வெச்சொல்லாற் கூறல் வேண்டும்? திணையயத்திலும் பாலையத்திலும் பொருளிதுவென்று துணிந்த விடத்து, மற்றொன்றல்லாத தன்மையை எதன் மேல் வைத்துக் கூறல்வேண்டும்? 26 உயர்திணைப்பெயரெழுவாயைச் சார்ந்து நிற்கும் அஃறிணைப்பொருளாதியாறும் எத்திணை வினையான்முடியும்? 27. திணைகளும் பால்களும் வெவ்வேறு வினைக்குரிய பலபொருள்களுந் தத்தமிற் கலந்து வருங்கால், அவை பலவும் எவ்வாறு முடியும்? 28 திணையும் பாலும் வழுக்கிவரின், எவ்வெவ்விடங்களில் வழுவென்று களையாது அமைத்துக் கொளளத்தகும்? 29. ஒருமைப்பாலிற் பன்மைச்சொல்லும் பன்மைப்பாலில் ஒருமைச்சொல்லும் கூறுதலுமுண்டோ? ஓரிடத்திற் பிறவிடச்சொல்லைச் சேர்த்துக் கூறுதலுமுண்டோ? 30. தா வா கொடு செல் இம்முதனிலையிற் பிறந்த சொற்கள் வருதரகு இடமரபுண்டோ? 31. காலம் எத்தனை? 32. முக்காலத்தினும ஒருதன்மையாகிய தொழிலையுடைய பொருளை எக்காலத்தாற் கூறத்தகும்? 33. முக்காலங்களும் எவ்வெவ்விடத்திற் பிறழ்ந்து வரும்? 34 வினா எத்தனை வகைப்படும்? 35. விடை எத்தனை வகைப்படும்? 36. வினாவும் விடையும் முதல்சினையொற்றுமைகருதி வழுவக் கூறப்படுமோ? 37. மரபென்பதியாது? 38. வெவ்வேறு வினைகட்

குரிய பலபொருள்களை ஒருங்கு தழுவி நிற்கும் பொதுச் சொல்லும், அவற்றிற்குரிய சிறப்புச்சொற்களாக எண்ணலுற்ற பல சொற்களும் எவ்வாறு முடியும்? 39. வினை சார்பு இனம் இடம் முதலியவைகளைப் பொருந்திக் குறித்த பொருள் விளங்காத பலபொருளொருசொற்களை எவ்வாறு சொல்லத்தகும்? 40. எழுத்தினது தன்மை வேறுபடாது பொருள் வேறுபட்டு நிற்குந் தொடர்மொழிகள் எவ்வாறு பொருள் துணியப்படும்? 41. ஒரு தொடரினுள், ஒரு பொருளுக்கே பலபெயர் வரின், அவை எவ்வாறு முடியும்? 42. ஒருகாரணம் பற்றி வருஞ் சிறப்புப் பெயரினாலும் காரணம் பற்றாது வரும் இயற்பெயரினாலும் ஒருபொருளைச் சொல்லுமிடத்து, அவ்விரண்டனுள் எது பின்வரிற் சிறப்பாம்? 43. படர்க்கைப்பெயரோடு சுட்டுப் பெயர் சேர்ந்துவரின், அச்சுட்டுப்பெயர் அதற்கெவ்விடத்து வரும்? 44. அடுக்குத்தொடருள், ஒரு சொல்லே அடுக்கி வருங்கால், எவ்வெவ்விடத்தில் எத்தனை யெத்தனை யடுக்கி வரும்? 45. சலசல கலகல என்பவை முதலியவையும் அடுக்கிய சொல்லல்லவோ? 46 ஒரு பொருளின்மேற் பலபெயர் சொல்லும்போது, எவ்வியல்புடையவை நீக்காது கொள்ளப்படும்? 47. ஒரு பொருளையே விளக்கி நிற்கும் இருசொற்கள் காரணமின்றிக் கூடி வருதலுமுண்டோ? 48. முற்றும்மை பெறுவன எவை? 49 செயப்படுபொருளை வினைமுதலைப்போலவைத்து, அவ்வினை முதல்வினையை அதனுக்கேற்றிக் கூறுதலுண்டோ? 50. அடையடுத்து வரு மொழிகள் எத்தனை வகைப்படும்? இனச்சுட்டுள்ள வடை எவ்வாறு பெயர் பெறும்? இனச்சுட்டில்லாவடை எவ்வாறு பெயர் பெறும்? 51. அடைமொழி இனமல்லாதவையும் உணர்த்துதலுண்டோ? 52. அடைச் சொல்லுஞ் சினைச்சொல்லும் முதற்சொல்லும் எவ்வாறு தொடர்ந்து வரும்? 53. இயற்கைப்பொருளாவதியாது? செயற்கைப்பொருளாவதியாது? இயற்கைப்பொருள் எவ்வாறு கூறப்படும்? 54. செயற்கைப்பொருள் எவ்வாறு கூறப்படும்? 55. ஒருவன் வினவிய பொருள் தம்பக்கவில்லையாயின், எவ்வாறு விடை கூறல்வேண்டும்? வினவிய பொருள் தம்பக்க

லுளதாயின், எவ்வாறு விடைகூறல்வேண்டும்? 56. கொடைப் பொருளின் வரும் ஈ தா கொடு என்னு முன்னிலைவினைச் சொற்கள் வருதற்கு மரபுண்டோ? 57. வெளிப்படையாலன்றிப் பிறவழியாற் பொருளறியப்படுஞ் சொற்களுமுளவோ? 58. கேட்டல் பேசல் நடத்தல் முதலியவையில்லாத அஃறிணைப் பொருள்களை அவையுடையனபோலக் கூறுதலுமுண்டோ? 59 இருதிணை தம்முள்ளே மயங்குதலும், சினை முதல் தம்முள்ளே மயங்குதலும், எவ்வெவ்விடத்திலே போற்றிக் கொள்ளப்படும்?

---

## பொருள் கோள்

[பொருள் கோளின் பெயருந் தொகையும்.]

**411. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
டாப்பிசை யளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.**

இ - ள். யாற்றுநீர் - யாற்றுநீர்ப்பொருள்கோளும்—மொழிமாற்று - மொழிமாற்றுப் பொருள்கோளும் — நிரனிறை - நிரனிறைப் பொருள்கோளும் — விற்பூண் - விற்பூட்டுப்பொருள்கோளும்--தாப்பிசை-தாப்பிசைப்பொருள் கோளும் — அளைமறிபாப்பு - அளைமறி பாப்புப்பொருள் கோளும் — கொண்டுகூட்டு - கொண்டுகூட்டுப் பொருள் கோளும்—அடிமறிமாற்று என-அடிமறிமாற்றுப் பொருள் கோளுமென—பொருள்கோள் எட்டு - பொருள்கோளெட்டாம். எ - று. (60)

[யாற்றுநீர்ப் பொருள்கோள்.]

**412. மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.**

இ - ள். மற்றைய நோக்காது - மொழிமாற்று முதலியவைபோலப் பிறழ்ந்து செல்லவேண்டாது—அடிதொறும்

வான்பொருள் அற்று அற்று ஒழுகும் அஃது - யாற்று நீரொழுக்குப்போல நெறிப்பட்டு அடிதோறுஞ் சிறந்த பொருள் அற்றற்றொழுகுவதாகிய அப்பொருள்கோள்— யாற்றுப்புனல் - யாற்று நீர்ப்பொருள் கோளாம். எ - று.

வ - று. "சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போன் — மெல்லவே கருவிருந் தீன்று மேலலார் — செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற் — கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே" எனவரும். இப்பாட்டினுட் சொல்லென்னும் எழுவாயினை முதலெடுத்து, அதன் தொழிலாகிய இருந்து ஈன்று, நிறுவி, இறைஞ்சி யென்னும் வினையெச்சங்கள் ஒன்றனையொன்றுகொள்ள இடையே முறை நிறுத்திக், காய்த்தவென்னும் பயனிலையை யிறுதியிலே தந்து முடித்தமையால், இப்பொருளொழுகுதல் யாற்றுநீரொழுக்குப் போலுதல் காண்க. [சொல் - நெற்பயிர்.] (61)

[மொழிமாற்றுப் பொருள்கோள்.]

413. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன்மொழி மாற்றே.

இ - ள். ஏற்றபொருளுக்கு இயையும் மொழிகளை - ஏற்றவிரண்டு பயனிலைகளுக்குப் பொருந்துமொழிகளை— மாற்றி - ஏலாத பயனிலைகளுக்குத் தனித்தனி கூட்டி— ஓரடியுள் வழங்கல்மொழி மாற்று - ஓரடியுள்ளே சொல்லும் பொருள்கோண் மொழிமாற்றுப் பொருள் கோளாம். எ-று.

வ - று. "சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய—யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப—கானக நாடன் சுனை" என வரும்.

இதனுள், ஆழவென்னும் பயனிலைக் கியைந்த அம்மியென்னுமொழியினை மிதப்பவென்னும் பயனிலைக்கும், மிதப்பவென்னும் பயனிலைக்கு இயைந்த சுரையென்னு மொழியினை ஆழவென்னும் பயனிலைக்கும், நீத்தென்னும் பயனிலைக்கியைந்த முயலென்னு மொழியினை நிலையென்னும்

பயனிலைக்கும், நிலையென்னும் பயனிலைக்கியைந்த யானை யென்னுமொழியினை நீத்தென்னும் பயனிலைக்குமாக மாற்றிக் கூறியவாறு காண்க.. (62)

[நிரனிறைப் பொருள்கோள்.]

**414.** **பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்**
**வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினும்**
**நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே.**

**இ - ள்.** பெயரும் வினையும் ஆம் சொல்லையும் பொருளையும் - பெயரும் வினையுமாகிய சொற்களையும் அவை கொள்ளும் பெயரும் வினையுமாகிய பயனிலைகளையும்—வேறு நிரல் நிறீஇ - வேறுவேறு வரிசையாக நிறுத்தி முறையினும் எதிரினும் - முறையாகவேனும் எதிராகவேனும்—நேரும் பொருள்கோள் - இதற்கிது பயனிலையென்பதுபடக் கூறும் பொருள்கோள்—நெறி நிரனிறை-நெறிப்பட்ட நிரனிறைப் பொருள்கோளாம். எ - று.

**வ - று.** (1) "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி—மதிபவள முத்த முகம்வாய் முறுவல்—பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்—வடிவினளே வஞ்சி மகள்" இது, கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டை மேனி. எ-ம். மதி முகம், பவளம் வாய், முத்தம் முறுவல். எ-ம். பிடி நடை, பிணை நோக்கு, மஞ்ஞை சாயல். எ-ம். பெயர்ச்சொற்களும் பெயர்ப் பயனிலைகளுமாய் நின்ற முறை நிரனிறை:

(2) "காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப போதுசோ தார்மார்ப போர்ச்செழிய - நீதியான்—மண்ணமிர்த மங்கையர்தோண் மாற்றாரை யேற்றார்க்கு—நண்ணிய வாயபொருள்" இது, கா மண், து, அமிர்தம், சேர் மங்கையர்தோள், தாழ் மாற்றாரை குழை ஏற்றார்க்கு, ஆய் நண்ணிய வாய

பொருள் என வினைப்பயனிலைகளும் பெயர்களுமாய் நின்றமுறை நிரனிறை.

(3) "களிறுங் கந்தும் போல நளிகடற்—கூம்புங் கலனுந் தோன்றுந்—தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே." இது, களிறு கலன், கந்து கூம்பு எனப் பெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற எதிர் நிரனிறை. [கந்து - யானைகட்டுந்தறி. கூம்பு - பாய்மரம். கலன் - தோணி]

(4) "ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்— பாடகமு மூரகமும் பஞ்சரமா - நீடியமா—னின்று னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ—மன்றார் மதிற் கச்சிமாண்பு." இது, வெஃகா கிடந்தான், பாடகம் இருந்தான், ஊரகம் நின்றான் எனப் பெயர்ச்சொற்களும் வினைப்பயனிலைகளுமாய் நின்ற எதிர்நிரனிறை.

[பூட்டுவிற் பொருள்கோள்.]

**415. எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்**
**பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.**

இ - ள். எழுவாய் இறுதி நிலைமொழி - செய்யுண் முதலினும் இறுதியினும் நிற்கு மொழிகள்—தம்முள் பொருள் நோக்கு உடையது - தம்முள்ளே பொருளை நோக்குதலுடைய பொருள்கோள்—பூட்டுவில் ஆகும் - பூட்டுவிற்பொருள்கோளாம். எ - று.

உ - ம். "திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத—ரிறந்து படிற் பெரிதா மேத - முறந்தையர்கோன்—றண்ணார மார்பிற் றமிழர்பெருமானைக்—கண்ணாரக் காணக் கதவு." இதிலே, திறந்திடுமின் கதவு என நோக்கிற்று. (64)

[தாப்பிசைப் பொருள்கோள்.]

**416. இடைநிலை மொழியே யேனையி ரிடத்தும்**
**நடந்து பொருளை நண்ணுத லுப்பிசை.**

இ - ள். இடை நிலை மொழி - இடையிலே நிற்கு மொழி—ஏனை ஈரிடத்தும் நடந்து பொருளை நண்ணுதல் - ஒழிந்த முதலினு மீற்றினுஞ் சென்று பொருளைக் கூடும் பொருள்கோள்—தாப்பிசை - தாப்பிசைப் பொருள்கோ ளாம். எ - று.

தாப்பிசை யென்பதற்கு ஊசல்போல் இடை நின்று இரு மருங்குஞ் செல்லுஞ் சொல்லென்பது பொருள். [தாம்பு - ஊசல். இசை - சொல்.]

உ - ம். "உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண—வண்ணாத் தல்செய்யா தளறு." இதனுள்; ஊன் என இடையிலே நின்றமொழி ஊனுண்ணாமையுள்ளது என முதலினும், ஊனுண்ண எனப் பின்னருஞ் சென்று கூடுதல் காண்க.

[அளைமறிபாப்புப் பொருள்கோள்.]

417. செய்யு ளிறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

இ - ள். செய்யுள் இறுதி மொழி - செய்யுளின் இறுதி யில் நின்றசொல்—இடை முதலினும் எய்திய பொருள் கோள்—இடையிலும் முதலிலுஞ்சென்ற பொருள்கோள்— அளைமறிபாப்பு-அளைமறிபாப்புப் பொருள்கோளாம். எ-று.

புற்றிலே தலைவைத்து மடங்கும் பாம்பு போலுதலால், அப் பெயர் பெற்றது. [அளை - புற்று, மறிதல் - மடங்குதல்.]

உ - ம். "தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமுஞ்—சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியிற் சுழல்வார் தாமு—மூழ்ந்த பிணிநலிய முன் செய்த வினையென்றே முனிவார் தாமும்—வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே."
என வரும். இதனுள், வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலாதார் மூழ்ந்த பிணி நலிய முன்

செய்த வினையென்றே முனிவார், சூழ்ந்த வினையாக்கை சுட விளிந்து நாற்கதியிற் சுழல்வார், தாழ்ந்த வுணர்வின ராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் எனத் தலை கீழாய் இடையிலு முதலிலுஞ் சென்று கூடுதல் காண்க.

[கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

418. யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே.

இ - ள். யாப்பு அடி பலவினும் கோப்பு உடைமொழிகளை - செய்யுளடிகள் பலவற்றினுங் கோக்கப்படுதலையுடைய சொற்களை—ஏற்புழி இசைப்பது - எடுத்துப்பொருளுக் கேற்றவிடத்துக் கூட்டும் பொருள்கோள்—கொண்டுகூட்டு- கொண்டுகூட்டுப் பொருள்கோளாம். எ- று.

வ - று. "தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்— வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி—யஞ்ச னத் தன்ன பசலை தணிவாமே—வங்கத்துச் சென்றார் வரின்." என வரும். இதனுள் வங்கத்துச் சென்றார் வரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலை யுடையாளது மாமேனிமேல் தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட கோழி வெண்முட்டை யுடைத்தன்ன பசலை தணிவாம் எனக்கொண்டு கூட்டுக. (67)

[அடிமறிமாற்றுப் பொருள்கோள் ]

419. ஏற்புழி யெடுத்துடன் கூட்டுறு மடியவும்
யாப்பி நிடைமுத லாக்கினும் பொருளிசை
மாட்சியு மாறு வடியவு மடிமறி.

இ - ள். ஏற்புழி எடுத்து உடன் கூட்டுறும் அடிய வும் - பொருளுக்கேற்குமிடத்து எடுத்து நீங்காது கூட்டும் அடியையுடையவையும்—யாப்பு ஈறு இடை முதல் ஆக்கி னும் - யாதானுமோரடியை எடுத்து அச்செய்யுளின் இறுதி

நடு முதல்களில் யாதானுமோரிடத்துக் கூட்டினும்—பொருள் இசை மாட்சியும் மாறு அடியவும் - பொருளோடு ஓசைமாட்சியும் ஓசையொழியப் பொருண்மாட்சியும் வேறுபடாத அடியையுடையவையும்—அடிமறி - அடிமறிமாற்றுப் பொருள்கோளாம். எ - று.

வ - று. (1) "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந்துடையார்—கொடுத்துத் தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு—மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்—விடுக்கும் வினையுலந்தக் கால்" என்பதனுள், கொடுத்துத் தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டும் விடுக்கும் வினையுலந்தக்கா லிடுக்குற்றுப் பற்றினுநில்லாது செல்வம் (இஃதறியார்) நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார் என அடிகளை ஏற்குமிடத்து எடுத்துக் கூட்டுக.

(2) "மாறாக் காதலர் மலைமறந் தனரே—யாறாக் கட்பனி வரலா னாவே—வேறா மென்றோள் வளைநெகி ழும்மே—கூறாய் தோழியான் வாழு மாறே." இதனுள் எவ்வடியை எங்கே கூட்டினும் பொருளும் ஓசையும் வேறுபடாமை காண்க.

(3) "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்—விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்—சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்—கொலைப்பாலுங் குற்றமேயாம்" இதனுள், ஈற்றடியொழிந்த மூன்றடியுள் யாதானு மொன்றை யெடுத்து யாதானு மோரிடத்துக் கூட்டி யுச்சரித்துப் பொருளுமோசையும் வேறுபடாமையும், ஈற்றடியையெடுத்து யாதானுமோரிடத்துக் கூட்டியுச்சரித்து ஓசை வேறுபட்டுப் பொருள் வேறுபடாமையுங் காண்க. (68)

**பரீக்ஷ வினாக்கள்:**—60. நால்வகைச்சொற்களாலுஞ் செய்யப்படுஞ் செய்யுள் கொள்ளும் பொருள்கோள்கள் எவை? 61. யாற்றுநீர்ப் பொருள்கோளாவதியாது? 62. மொழிமாற்றுப்

பொருள்கோளாவதியாது? 63. கிரணிறைப் பொருள்கோளாவதியாது? 64. பூட்டுவிற் பொருள்கோளாவதியாது? 65. தாப்பிசைப் பொருள்கோளாவதியாது? 66. அளைமறி பாப்புப் பொருள்கோளாவதியாது? 67. கொண்டுகூட்டுப் பொருள்கோளாவதியாது? 68. அடிமறிமாற்றுப் பொருள்கோளாவதியாது?

**பொதுவியல் முற்றிற்று.**

---

# 4. இடையியல்

[இடைச்சொல்லின் பொதுவிலக்கணம்.]

**420.** **வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்**
**தத்தம் பொருள விசைநிறை யசைநிலை**
**குறிப்பெனெண் பகுதியிற் றனித்திய லின்றிப்**
**பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்**
**தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.**

இ - ள். வேற்றுமை (யுருபுகள்) - ஐம்முதலிய வேற்றுமையுருபுகளும்—வினை (யுருபுகள்) - விகுதிகளும் இடைநிலைகளுமாகிய வினையுருபுகளும்—சாரியை (யுருபுகள்) - அன் ஆன் முதலிய சாரியையுருபுகளும்—ஒப்புருபுகள் - போலப் புரைய முதலிய உவமவுருபுகளும்—தத்தம் பொருள - பிறவாறு தத்தமக்குரிய பொருளையுணர்த்தி வருபவையும்—இசைநிறை - வேறுபொருளின்றி இசைநிறையே பொருளாக வருபவையும்—அசைநிலை - அசைநிலையே பொருளாக நிற்பவையும்—குறிப்பு - வெளிப்படையின் வரும் இவை போலாது ஒலி அச்சம் விரைவு இவற்றைக் குறிப்பாலுணர்த்தி வருபவையும்—என் எண் பகுதி

யின் - என்னும் எட்டுவகையினையுடையனவாய்—தனித்து இயல் இன்றி - தனித்து நடத்தலின்றி—பெயரினும் வினையினும் பின் முன் ஓரிடத்து - பெயரினகத்தும் வினையினகத்தும் அவற்றின் புறமாகிய பின்னும் முன்னும் இவ்விடங்களாறனுளோரிடத்து—ஒன்றும் பலவும் வந்து ஒன்றுவது - ஒன்றாயினும் பலவாயினும் வந்து அப்பெயர்வினைகளுக்கு அகத்துறுப்பாயும் புறத்துறுப்பாயும் ஒன்றுபட்டு நடக்குந் தன்மையது—இடைச்சொல்-இடைச்சொல்லாகும். எ-று.

பெயர்ச்சொல் வினைச்சொற்களுமாகாது; அவற்றின் வேறுமாகாது; இடைநிகரனவாய் நிற்றலின், இடைச்சொல்லெனப் பட்டன; தனித்து நடத்தலின்றிப் பெயர்வினைகளிடமாக நடத்தலின், இடைச்சொல்லெனப்பட்டனவெனினும் அமையும்.

இசைநிறையென்பது வேறுபொருளுணர்த்தாது செய்யுளில் ஓசையை நிறைத்து நிற்பது.

அசைநிலையென்பது வேறுபொருள் உணர்த்தாது பெயர்ச்சொல்லோடும் வினைச்சொல்லோடுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்பது. [அசைத்தல் - சார்த்துதல்.]

உ - ம். (1) குழையன் என்புழிப், பெயரினகத்துறுப்பாய் விகுதியிடைச்சொல் ஒன்று வந்தது. தச்சிச்சி, நிலத்தினன் என்புழிப், பெயரினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச்சொற்கள் பல வந்தன.

(2) உண்ணும் என்புழி, வினையினகத்துறுப்பாய் விகுதியிடைச்சொல் ஒன்று வந்தது. நடந்தான், நடந்தனன் என்புழி, வினையினகத்துறுப்பாய் முறையே இடைநிலையும் விகுதியும், இடைநிலையுஞ் சாரியையும் விகுதியுமாகிய இடைச் சொற்கள்பல வந்தன.

(3) அதுமன், கொன்னூர் என்புழிப், பெயரின்புறத்துறுப்பாய்ப் பின்னுமுன்னும் ஒன்று வந்தது. அது

மற்றம்ம, இனி மற்றென்ற என்புழிப், பெயரின் புறத்தறப்பாய் பின்னுமுன்னும் பல வந்தன.

(4) வந்தானே, ஐயோவிறந்தான் என்புழி. வினையின் புறத்தறப்பாய்ப் பின்னுமுன்னும் ஒன்ற வந்தது. கொன்றான் கூகூ, சீசீ போ, என்புழி, வினையின் புறத்தறப்பாய்ப் பின்னு முன்னும் பல வந்தன. (1)

[இடைச்சொற் பொருள்கள்.]

**421. தெரிநிலை தேற்ற மையமுற் றெண்சிறப்**
**பெதிர்மறை யெச்சம் வினாவிழை வொழியிசை**
**பிரிப்புக் கழிவாக்க மின்னன விடைப்பொருள்.**

**இ - ள்.** தெரிநிலை - தெரிநிலையும்—தேற்றம் - தெளிவும்—ஐயம் - சந்தேகமும் — முற்று - முற்றும் — எண் - எண்ணும்—சிறப்பு - சிறப்பும்—எதிர்மறை - எதிர்மறையும்—எச்சம் - எச்சமும் — வினா - வினாவும் — விழைவு - விருப்பமும்—ஒழியிசை - ஒழிந்த சொல்லும்—பிரிப்பு - பிரிநிலையும்—கழிவு - கழிவும் — ஆக்கம் - ஆக்கமும்—இன்னன - இவை போல்வன பிறவும்—இடைப்பொருள் - தத்தம் பொருளவென்ற இடைச்சொற்களுடைய பொருள்களாம். எ - று.

இன்னனவென்றதனால் சில வருமாறு:—

(1) அ, இ, உ என்பன சுட்டுப்பொருளைத் தருவன.

(2) எ, ஏ, யா, ஆ என்பன வினாப்பொருளைத் தருவன.

(3) முன், பின் என்பன காலப்பொருளையும் இடப்பொருளையுந் தருவன.

(4) இனியென்பது கால இடங்களின் எல்லைப்பொருளைத் தருவது.

(5) தொறும், தோறும் என்பன இடப்பன்மைப் பொருளையுந் தொழிற்பயில்வுப் பொருளையுந் தருவன.

(6) வாளா, சும்மா என்பன பயனின்மைப்பொருளைத் தருவன.

(7) ஆவது, ஆதல், ஆயினும், தான் என்பன விகற்பப்பொருளைத் தருவன.

(8) ஐயோ, அந்தோ முதலியவை இரக்கப்பொருளைத் தருவன.

(9) ஆ, அம்ம, ஓ, ஓகோ, முதலியவை வியப்புப்பொருளைத் தருவன.

(10) கூகூ, ஐயோ முதலியவை அச்சப்பொருளைத் தருவன.

(11) சீ, சிச்சீ, சை முதலியவை இகழ்ச்சிப்பொருளைத் தருவன.

குறிப்பின் வருமிடைச்சொற்கள் வருமாறு:—

(1) அம்மென, இம்மென, கோவென, சோவென, துடுமென, ஒல்லென, கல்லென, சுல்லென. எ-ம். கடகடென, கனகனென, திடுதிடென, நெறுநெறென, படபடென. எ-ம். வருவன ஒலிக்குறிப்புப்பொருளைத் தருவன.

(2) துண்ணென, துணுக்கென, திட்கென, திடுக்கென, என்றாற்போல்வன அச்சக்குறிப்புப் பொருளைத் தருவன.

(3) பொள்ளென, பொருக்கென, கதுமென, ஞரேலென, சரேலென என்றாற்போல்வன விரைவுக்குறிப்புப்பொருளைத் தருவன (2)

[ஏகார விடைச்சொல்.]

**422. பிரிநிலை வினாவெண் ணீற்றசை தேற்றம்**
**இசைநிறை யெனவா றேகா ரம்மே.**

**இ-ள்.** பிரிநிலை - பிரிநிலையும் — வினா - வினாவும்— எண் - எண்ணும் — ஈற்றசை - ஈற்றிலசைத்தலும்—தேற்றம் - தெளிவும்—இசை நிறை - இசைநிறைத்தலும்—என ஆறு ஏகாரம் - என்று ஆறுபொருளைத் தரும் ஏகாரவிடைச்சொல். எ-று.

வ-று (1) அவருள் இவனே கள்வன். இங்கே ஒருகூட்டத்தினின்றும் ஒருவனைப் பிரித்துநிற்றலாற் பிரிநிலை.

(2) நீயே கொண்டாய்? இங்கே நீயா கொண்டாயென்னும் பொருளைத் தருமிடத்து வினா.

(3) நிலமே நீரே தீயே வளியே. இங்கே நிலமும் நீருந் தீயும் வளியும் எனப் பொருள்பட எண்ணிநிற்றலால் எண்.

(4) "என்று மேத்தித் தொழுவோ மியாமே" இங்கே வேறுபொருளின்றி இறுதியிலே சார்த்தப்பட்டு நிற்றலால் ஈற்றசை.

(5) உண்டே மறுமை. இங்கே உண்டென்பதற்கு ஐயமில்லையென்னுந் தெளிவுப்பொருளைத் தருதலால் தேற்றம்.

(6) "ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்." இங்கே வேறுபொருளின்றிச் செய்யுளில் இசை நிறைத்து நிற்றலால் இசைநிறை.

"அவனே கொண்டான்" என்பது ஓரோரிடத்து அவன் கொண்டிலன் என எதிர்மறைப்பொருள்பட நிற்றல் "புதியன புகுதலும் வழுவல" என்பதனாற் கொள்க. (3)

[ஓகார இடைச் சொல்.]

**423.** ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.

இ - ள். ஒழியிசை - ஒழியிசையும்—வினா-வினாவும்—சிறப்பு - சிறப்பும் — எதிர்மறை - எதிர்மறையும் — தெரிநிலை - தெரிநிலையும் — கழிவு - கழிவும் — அசைநிலை - அசைநிலையும்—பிரிப்பு-பிரிநிலையும்—என எட்டு ஓ - என்று எட்டுப் பொருளைத் தரும் ஓகாரஇடைச்சொல். எ - று.

சிறப்பு உயர்வுசிறப்பும் இழிவுசிறப்பும் என இருவகைப்படும். உயர்வுசிறப்பு ஒருபொருளினது உயர்வைச் சிறப்பித்தல்.

இழிவு சிறப்பு ஒரு பொருளினது இழிவைச் சிறப்பித்தல். இங்கே சிறப்பித்தல் என்றது, உயர்வேயாயினும் இழிவேயாயினும் அதனது மிகுதியை விளக்குதல்.

உ - ம். (1) படிக்கவோ வந்தாய். இங்கே படித்தற்கன்று விளையாடுதற்கு வந்தாய் என ஒழிந்த சொற்களைத் தருதலால் ஒழியிசை.

(2) "குற்றியோ மகனோ" இங்கே குற்றியா மகனா என வினாப்பொருளைத் தருதலால் வினா.

(3) ஓஒ பெரியன். இங்கே ஒருவனது பெருமையாகிய உயர்வின் மிகுதியை விளக்குதலால் உயர்வுசிறப்பு.

ஓஒ கொடியன். இங்கே ஒருவனது கொடுமையாகிய இழிவின் மிகுதியை விளக்குதலால் இழிவுசிறப்பு.

(4) அவனோ கொண்டான். இங்கே கொண்டிலன் என்னும் பொருளைத் தருமிடத்து எதிர்மறை.

(5) ஆணோ அதுவுமன்று பெண்ணோ அதுவுமன்று இங்கே அத்தன்மையில்லாமையைத் தெரிவித்து நிற்றலாற்றெரிநிலை.

(6) உறுதியுணராது கெட்டாரை, ஓஒ தமக்கோருறுதியுணராரோ என்னுமிடத்துக் கழிவிரக்கப்பொருளைத் தருதலாற் கழிவு. [கழிவிரக்கம் - கழிந்ததற்கிரங்குதல்.]

(7) "காணியவம்மினோ" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(8) இவனோ கொண்டான். இங்கே பலருள் நின்றும் ஒருவனைப் பிரித்து நிற்குமிடத்துப் பிரிநிலை. (4)

[என, என்று இடைச்சொற்கள்]

**424. வினைப்பெயர் குறிப்பிசை யெண்பண் பாறினும்**
**எனவெனு மொழிவரு மென்று மற்றே.**

இ - ள். வினை - வினையும் — பெயர் - பெயரும் — குறிப்பு-குறிப்பும் — இசை-இசையும் — எண்-எண்ணும் — பண்பு ஆறினும் - பண்புமாகிய ஆறுபொருளிலும் — என எனும் மொழி வரும் - எனவென்னுமிடைச்சொற் சேர்ந்து வரும் — என்றும் அற்று - என்றென்னுமிடைச்சொல்லும் அப்படியே ஆறுபொருளிலும் வரும். எ - று.

வ - று. (1) மைந்தன்பிறந்தானெனத் தந்தை யுவந்தான். இங்கே வினையோடியைந்தது.

(2) "அழுக்கா றெனவொரு பாவி" இங்கே பெயரோ டியைந்தது.

(3) "பொள்ளென வாங்கே புறம் வேரார்" இங்கே குறிப் போடியைந்தது.

(4) "பொம்மென வண்டலம்பும் புரிகுழலை" இங்கே இசையோடியைந்தது.

(5) நிலமென நீரெனத் தீயென வளியென வானெனப் பூதங்களைந்து, இங்கே எண்ணோடியைந்தது.

(6) வெள்ளென விளர்த்தது. இங்கே பண்போடியைந் தது. என்று என்பதையும் இப்படியே இவைகளோ டும் ஒட்டிக்கொள்க. (5)

[உம்மையிடைச்சொல்.]

**425. எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை**
**தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே.**

இ - ள். எதிர்மறை - எதிர்மறையும் — சிறப்பு - சிறப் பும் — ஐயம் - ஐயமும் — எச்சம் - எச்சமும் — முற்று - முற் றும் — அளவை - எண்ணும் — தெரிநிலை - தெரிநிலையும் — ஆக்கம் - ஆக்கமுமாகிய — எட்டு உம்மை - எட்டுப்பொருளை யுந் தரும் உம்மையிடைச்சொல். எ - று.

எச்சம் இறந்ததுதழீஇய எச்சமும், எதிரதுதழீஇய எச்சமும் என இருவகைப்படும்.

வ - று. (1) "மறப்பினு மோத்துக் கொளலாகும்" இங்கே மறக்கலாகாது என்னும் பொருளைத் தருதலால் எதிர்மறை.

(2) "குறவரு மருளுங் குன்றம்" இங்கே குன்றினுயர்வைச் சிறப்பித்தலால் உயர்வுசிறப்பு.

"புலையனும் விரும்பாப் புன்புலால் யாக்கை" இங்கே உடம்பினிழிவைச் சிறப்பித்தலால் இழிவுசிறப்பு.

(3) அவன் வெல்லினும் வெல்லும். இங்கே துணியாமையை உணர்த்தலால் ஐயம்.

(4) சாத்தனும் வந்தான். இங்கே கொற்றன் வந்ததன்றி என்னும் பொருளைத் தந்தால் இறந்ததுதழீஇய எச்சம்; இனிக்கொற்றனும் வருவான் என்னும் பொருளைத் தந்தால் எதிரதுதழீஇய எச்சம்.

(5) எல்லாரும் வந்தார். இங்கே எஞ்சாப்பொருளைத் தருதலால் முற்று.

(6) இராவும் பகலும். இங்கே எண்ணுதற்கண் வருதலால் எண்.

(7) ஆணுமன்று பெண்ணுமன்று. இங்கே இன்னதெனத் தெரிவித்து நிற்றலாற் றெரிநிலை.

(8) பாலுமாயிற்று. இங்கே அதுவே மருந்துமாயிற்று என்னும் பொருளைத் தருதலால் ஆக்கம். (6)

[முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி.]

**426. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.**

இ - ள். முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும் - மேற்கூறிய முற்றும்மை ஓரோவிடத்து எச்சவும்மையுமாம். எ - று.

வ - று. எல்லாரும் வந்திலர், அவர் பத்துங் கொடார். இங்கே சிலர் வந்தார், சில கொடுப்பார் எனவும் பொருள் படுத லால், எச்சவும்மையுமாயிற்று. (7)

[எச்சவும்மைக் காவதோர் விதி.]

**427. செவ்வெண் ணீற்றதா மெச்ச வும்மை.**

இ - ள். எச்சவும்மை செவ்வெண் ஈற்றது ஆம் - எச்சவும்மை செவ்வெண்ணில் வருமாயின் ஈற்றில் வரும். எ - று.

செவ்வெண்ணாவது எண்ணிடைச்சொற்றொக்குநிற்பவருவது

வ - று. கல்வி செல்வ மொழுக்கங் குடிப்பிறப்பும் பெறுவாரு முளர் என்புழி, இவற்றுட் சிலபெறுவாருமுளர் எனப் பொருள் படுதல் காண்க. (8)

[சில எண்ணிடைச் சொற்களுக்காவதோ ரிலக்கணம்.]

**428. பெயர்ச்செவ் வெண்ணே யென்று வெனுவெண்**
**ணான்குந் தொகைபெறு மும்மையென் றெனவோ**
**டிந்நான் கெண்ணு மஃதின்றியு மியலும்.**

இ - ள். பெயர்ச்செவ்வெண் ஏ என்று எனு எண் நான்கும் தொகை பெறும் - பெயர்களினிடையே யெண்ணி டைச் சொற்றொக்கு நிற்ப வருஞ் செவ்வெண்ணும் பெய ரோடு தொகாது வரும் ஏகாரவெண்ணும் என்றுவெண்ணும் எனுவெண்ணுமாகிய நான்கெண்களுந் தொகையைப்பெற்று நடக்கும்—உம்மை என்று என ஒடு இந்நான்கு எண்ணும் - உம்மையெண்ணும் என்றெண்ணும் எனவெண்ணும் ஒடெண்ணுமாகிய இந்த நான்கெண்களும்—அஃது இன்றி யும் இயலும் - அத்தொகை பெறாதும் நடக்கும். எ - று.

வ - று. (1) சாத்தன் கொற்றனிருவரும் வந்தார்; சாத்தனே கொற்றனே யிருவரும் வந்தார்; சாத்தனென்று

கொற்றனென்று இருவரும் வந்தார்; சாத்தனெனக் கொற்றனென இருவரும் வந்தார் இவை தொகை பெற்றே வந்தன. இவை வழக்கிடத்து ஒரோவழித் தொகை பெறாது வரின், இசையெச்சமாகவும், செய்யுளிலே தொகை பெறாது வரின் தொகுத்தல் விகாரமாகவுங் கொள்க.

(2) சாத்தனுங் கொற்றனு மிருவரும் வந்தார்; சாத்தனென்று கொற்றனென் றிருவருளர், சாத்தனெனக் கொற்றனென விருவருளர்; சாத்தனோடு கொற்றனோ டிருவருளர். இவை தொகை பெற்று வந்தன. சாத்தனுங் கொற்றனும் வந்தார்; நிலனென்று நீரென்று தீயென்று காற்றென் றளவறு காயமென்றாகிய வுலகம்; நிலனென நீரெனத் தீயெனக் காற்றென அளவறு காயமென வாகிய வுலகம்; நிலனோடு நீரோடு தீயோடு காற்றோடளவறு காயமோடாகிய பூதம். இவை தொகை பெறாது வந்தன. (9)

[சில எண்ணிடைச்சொற்களுக்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி.]

**429.** என்று மெனவு மொடுவு மொரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருடொறு நேரும்.

**இ - ள்** என்றும் எனவும் ஒடுவும் - என்று என ஒடு வென்னும் இம்மூன்றிடைச்சொற்களும்—ஒரோவழி நின்றும் பிரிந்து எண்பொருடொறும் நேரும் - எண்ணப்படும் பொருடோறு நிற்றலையன்றி ஓரிடத்து நின்றும் பிரிந்து எண்ணப்படும் பொருடோறுஞ் சென்று பொருந்தும். எ - று.

வ - று (1) "வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்—றீயெச்சம் போலத் தெறும்." இங்கே என்றென்பது, வினையென்று பகையென்று என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(2) "பகைபாவ மச்சம் பழியென நான்கு - மிகவாவா மில்லிறப்பான் கண்." இங்கே எனவென்பது, பகையெனப் பாவமென அச்சமெனப் பழியென, என்று நின்றவிடத்துப் பிரிந்து பிறவழியுஞ் சென்று பொருந்தியது.

(3) "பொருள் கருவி காலம் வினையிடனொ டைந்து — மிருடீர வெண்ணிச் செயல்." இங்கே ஒடுவென்பது, பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடனொடு என நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழியுஞ் சென்று பொருந்தியது. (10)

[பெயரொடு வரும் இடைச்சொற்கள் வினையொடும் வருமாறு.]

**430. வினையொடு வரினு மெண்ணினைய வேற்பன.**

இ - ள் ஏற்பன எண் - பொருந்துவனவாகிய எண்ணிடைச் சொற்கள்—வினையொடு வரினும் இனைய - வினையோடு வரினும் மேற்பெயரோடு வந்தாற்போலும். எ-று.

வ - று. மயிலாடக் குயில் வாடமாமுகிலெழுந்தது. இது செவ்வெண். கற்றுங் கேட்டுங் கற்பனை கடந்தார். இது உம்மையெண். உண்ணவென் றுடுக்கவென்று வந்தான். இது என்றெண். உண்ணவென வுடுக்கவென வந்தான். இது எனவெண். உண்ணவுடுக்கவென்று வந்தான். இது பிரிந்து கூடுமெண். (11)

[தில்லிடைச்சொல்.]

**431. விழைவே கால மொழியிசை தில்லே.**

இ - ள். விழைவு காலம் ஒழியிசை தில் - ஆசையுங் காலமும் ஒழிந்த சொல்லுமாகிய மூன்றுபொருளையுந் தருந் தில்லென்னு மிடைச்சொல். எ - று.

வ - று. (1) "வார்ந்தி லங்குவை யெயிற்றுச் சின்மொழி—யரிவை யைப் பெறுகதில் லம்ம யானே" இங்கே அரிவை யைப் பெறுதல் வேட்கையையுணர்த்தலால் விழைவு.

(2) "பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே" இங்கே பெற்ற காலத்தறிக எனக் காலத்தை யுணர்த்தலாற் காலம்.

(3) "வருகதில் லம்மவெஞ் சேரி சேர" இங்கே வந்தால் ஒன்று செய்வேன் என்னும் ஒழிந்தசொற்பொருளை யுணர்த்தலால் ஒழியிசை. (12)

[மன்னிடைச்சொல்.]

**432. மன்னே யசைநிலை யொழியிசை யாக்கங்**
**கழிவு மிகுதி நிலைபே றாகும்.**

இ - ள். மன் - மன்னென்னுமிடைச்சொல் — அசை நிலை-அசைத்து நிற்றற் பொருளினும்—ஒழியிசை - ஒழிந்த சொற்பொருளினும் — ஆக்கம் - ஆக்கப் பொருளினும் — கழிவு - கழிதற்பொருளினும் — மிகுதி - மிகுதிப்பொருளி னும்—நிலைபேறு ஆகும்-நிலை பெறுதற்பொருளினும் வரும். எ - று.

வ - று. (1) "அதுமற் கொண்கன் றேரே" இங்கே வேறுபொரு ளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(2) "கூரியதோர் வாண்மன்" இங்கே இரும்பை அறத் துணித்தது என்னும் ஒழிந்த சொற்களைத் தருத லால் ஒழியிசை.

(3) "பண்டு காடுமன்" இங்கே இன்று வயலாயிற்று என் னும் ஆக்கப்பொருளைத் தருதலால் ஆக்கம்.

(4) "சிறியகட்பெறினே யெமக்கீயு மன்னே" இங்கே இப்பொழுது அவன் இறந்ததனால் எமக்குக் கொடுத் தல் கழிந்தது என்னும் பொருளைத் தருதலாற் கழிவு.

(5) "எந்தை யெமக்கருளுமன்" இங்கே மிகுதியும் அருளுவன் என்னும் பொருளைத் தருதலால் மிகுதி.

(6) "மன்னுவுலகத் தன்னியது புரிமோ" இங்கே இவ்விடைச்சொல்லடியாகப் பிறந்த வினைகள் நிலைபெறாத வுலகத்திலே நிலைத்ததைச் செய் என்னும் பொருள்பட நிற்றலால் நிலைபேறு. (13)

[மற்றென்னு மிடைச்சொல்.

**433. வினைமாற் றசைநிலை பிறிதெனு மற்றே.**

இ - ள். மற்று - மற்றென்னு மிடைச்சொல்—வினைமாற்று - வினைமாற்றுப் பொருளையும்—அசைநிலை - அசைநிலை அசைத்து நிற்றற்பொருளையும்—பிறிது எனும்-பிறிது பொருளையுந் தரும். எ - று.

வ - று. (1) "மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது" இங்கே விரைந்தறிவாமென்னும் வினையையொழித்து விரையாதறிவாமென்னும் வினையைத் தருதலால் வினைமாற்று.

(2) "மற்றென்னை யாள்க" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

(3) "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று—சூழினுந் தான்முந் துறும்." இங்கே ஊழல்லதொன்றென்னும் பொருளைத் தருதலாற் பிறிது. (14)

[முன்னதற்கோர் புறனடை.]

**434. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.**

இ - ள். மற்றையது என்பது - மற்றையதென்னும் பொருளாகிய வினைமாற்றும் பிறிதும்—சுட்டியதற்கு இனம்-கருதியதற்கு இனமாகிய மறுதலை வினையும் இனமாகிய பிறிதுமாம். எ - று.

மூன்றுதாரணங்களுள், நல்வினையை விரைந்தறிவாம் எனக் கருதியதற்கு இனமாகிய வினைமாற்றுவது, விரையாதறி வாமென்பது; ஊழொன்றெனக் கருதியதற்கு இனமாகிய பிறிதாவது ஊழல்லதொன்றென்பது. (15)

[கொல்லிடைச் சொல்.]

**435. கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.**

இ - ள். கொல் - கொல்லென்பது—ஐயம் அசைநிலைக் கூற்று - ஐயப்பொருளையும் அசைநிலைப்பொருளையும் தரு மிடைச்சொல்லாம். எ - று.

வ - று. (1) இவ்வுருக் குற்றிகொல் மகன்கொல். இங்கே குற்றியோ மகனோ என்னும்பொருளைத் தருதலால் ஐயம்.

(2) "கற்றதனா லாய பயனென்கொல்": இங்கே வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசை நிலை. (16)

[ஒடு, தெய்ய.]

**436. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.**

இ - ள். ஒடுவும் தெய்யவும் - ஒடு தெய்ய என்னு மிரண்டும்—இசைநிறைமொழி - இசைநிறைத்தற் பொருளைத் தருஞ் சொற்களாம். எ - று.

வ - று. "விதைக்குறு வட்டிற்போதொடு பொதுள" எ - ம். "சொல்லேன் தெய்ய நின்னொடும் பெயர்த்தே" எ - ம். வரும். (17)

[அந்தில், ஆங்கு]

**437. அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே.**

இ - ள். அந்தில் ஆங்கு - அந்தில் ஆங்கு என்னும் இவ்விரண்டிடைச்சொல்லும்—அசைநிலை இடப்பொருள் - அசைநிலைப் பொருளவாயும் இடப்பொருளவாயும் வரும். எ - று.

உ - ரு. (1) "அந்திற் கழலினன் கச்சினன்" இங்கே வேறு பொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை.

"வருமே - சேயிழை யந்திற் கொழுநற்காணிய" இங்கே அவ்விடத்து வரும் என்னும் பொருளைத் தருதலால் இடம்.

(2) "ஆங்கத் திறனல்ல யாங்கழற" இங்கே வேறுபொருளின்றிச் சார்த்தப்பட்டு நிற்றலால் அசைநிலை. இதனுள், ஆங்கென்னுமசைநிலை ஆங்கவென இறுதி விகாரமாய் நின்றது.

"ஆங்காங்காயினுமாக" இங்கே அவ்விடத்து என்னும் பொருளைத் தருதலால் இடம். (18)

[அம்மவிடைச்சொல்.]

**438.** அம்ம வுரையசை கேண்மினென் றாகும்.

இ - ள். அம்ம - அம்மவென்பது—உரையசை - உரையசைப்பொருளைத் தருவதும்—கேண்மின் என்று ஆகும் - ஒன்று சொல்லுவேன் கேண்மினென்னும் ஏவற்பொருளைத் தருவதுமாம். எ - று.

உ - ரு. (1) "அதுமற்றம்ம" இங்கே சுட்டுரைக்கண் வருதலால் உரையசை.

(2) "அம்ம வாழி தோழி" இங்கே ஒன்று சொல்லுவேன் கேள் என்னும் ஏவற்பொருளில் வந்தது. (19)

[வியங்கோளசை.]

**439.** மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

இ - ள். மா என் கிளவி - மாவென்னுஞ்சொல்—வியங்கோள் அசைச்சொல் - வியங்கோளிடத்து வரும் அசைச்சொல்லாம். எ - று.

உ - ம். "உப்பின்று - புற்கை யுண்கமா கொற்கையோனே"
இங்கே மாவென்னும் அசைச்சொல் உண்கவென்னும்
வியங்கோள் வினையை யடுத்து வந்தது. (20)

[முன்னிலையசைச்சொல்.]

**440. மியாயிக மோமதி யத்தை யித்தை
வாழிய மாளவீ யாழமுன் னிலையசை.**

இ - ள். மியா***யாழ - மியா இக மோ மதி அத்தை இத்தை வாழிய மாள ஈ யாழ என்னும் பத்திடைச் சொற்களும்—முன்னிலை அசை - முன்னிலையிடத்துவரும் அசைச் சொற்களாம். எ - று.

உ - ம். மியா——"சிலையன் செழுந்தழையன் சென்மிய வென்று
மலையகலான் வாடி வரும்"
இக———"தண்டுறையூர காணிக வெனவே."
மோ———"காமஞ் செப்பாது கண்டது மொழிமோ."
மதி———"சென்மதி பெரும."
அத்தை—"சொல்லிய ரத்தைநின் வெகுளி."
இத்தை—"வேய் நரல் விடரக நீ யொன்று பாடித்தை."
வாழிய——"காணிய வாவா ழியமலைச் சாரல்."
மாள ——"சிறிது-தவிர்ந்தீக மாளநின் பரிசிலரும்மார்."
ஈ————"சென்றீ யெருமநிற் றகைக்குநர் யாரே."
யாழ——"நீயே-செய்வினை மருங்கிற் செலவயர்ந்தியாழ."

[எல்லாவிடத்தும் வரும் அசைச்சொல்.]

**441. யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்
சின்குரை யோரும் போலு மிருந்திட்
டன்றுந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.**

இ - ள். யா***நின்று - யா கா பிற பிறக்கு அரோ போ மாது இகும் சின் குரை ஓரும் போலும் இருந்து இட்டு

அன்று ஆம் தாம் தான் கின்று கின்று என்னும் இருபது இடைச்சொற்களும் — அசைமொழி - எல்லாவிடங்களிலும் வரும் அசைச்சொற்களாம். எ - று.

உ - ம். யா ——"யா பன்னிருவர் மாணாக்க ரகத்தியனார்க்கு."
கா ——"புறநிழற் பட்டாளோ இவளிவட் காண்டிகா."
பிற——"ஆயினை யல்ல பிற."
பிறக்கு—"பிறக்கிதனுட் செல்லான் பெருந்தவம் பட்டான்."
அரோ—"நோதக இருங்குயி லாலுமரோ.
போ——"பிரியின் வாழா தென்போ."
மாது——"விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே."
இகும்——"காண்டிகு மல்லமோ கொண்க."
சின் ——"தீங்கா கிபவா லென்றிசின்."
குரை——"அது பெறலருங் குரைத்தே."
ஒரும்—"அஞ்சுவ தோரு மறனே."
போலும்-"வடுவென்ற கண்ணுப் வருந்தினைபோலும்."
இருந்து—"நனவென் றெழுந்திருந்தே னல்வினைபொன் றில்லேன்."
இட்டு—"நெஞ்சம் பிளந்திட்டு."
அன்று—"பிரமாபுர மேவிய பெம்மா னிவ னன்றே."
ஆம் ——"பணியுமா மென்றும் பெருமை சிறுமை அணியுமாந் தன்னை வியந்து."
தாம்——"நீர் தாம்."
தான்——"நீ தான்."
கின்று—"வாழ்வா ஞசைப்பட்டிருக்கின்றேன்."
கின்று—"அழலடைந்த மன்றத் தரந்தையராய் நின்றார் நிழலடைந்தே னின்னையென் றேத்த." (22)

பரீக்ஷை வினுக்கள்:—1. இடைச்சொல்லாவன யாவை? இவை யாதுகாரணத்தால் இடைச்சொலெனப்பட்டன? இசைநிறையென்பதியாது? அசைநிலையென்பதியாது? 2. பிறவாறு

தத்தமக்குரிய பொருள்களை உணர்த்தி வருமென்ற இடைச்சொற்களின் பொருள்கள் யாவை? 3. ஏகாரவிடைச்சொல் எவ்வெப்பொருளைத் தரும்? 4. ஓகாரவிடைச்சொல் எவ்வெப் பொருளைத் தரும்? சிறப்பு எத்தனை வகைப்படும்? உயர்வுசிறப் பென்பதியாது? இழிவுசிறப்பென்பதியாது? 5. என என்று என்னும் இரண்டிடைச்சொற்களும் எவ்வெவ்விடத்து வரும்? 6. உம்மென்னுமிடைச்சொல் எவ்வெப்பொருளைத்தரும்? எச்சவும்மை எத்தனைவகைப்படும்? 7. ஒருபொருளில் வரும் உம்மை மற்றொரு பொருளிலும் வருமோ? 8. செவ்வெண்ணாவதியாது? எச்சவும்மை செவ்வெண்ணில் வருமாயின் எவ்விடத்து வரும்? 9. தொகைபெற்றே வரும் எண்களெவை? தொகை பெற்றும் பெறாதும் வரும் எண்களெவை? 10. எண்ணிடைச்சொற்கள் எண்ணுப்பொருடோறும் நிற்கவே பெறுமோ? 11. வினையெண்ணப்படுங்கால், எண்ணிடைச்சொற் பெறாதோ? 12. தில்லென்னுமிடைச்சொல் எவ்வெப் பொருளைத் தரும்? 13. மன்னென்னுமிடைச்சொல் எவ்வெப்பொருளைத் தரும்? 14. மற்றென்னுமிடைச்சொல் எவ்வெப்பொருளைத் தரும்? 15. இங்கே வினைமாற்றென்றதெது? பிறிதென்றதெது? 16. கொல்லென்னுமிடைச்சொல் எவ்வெப்பொருளைத்தரும்? 17. ஒடு தெய்ய என்னுமிடைச்சொற்கள் எப்பொருளைத்தரும்? 18. அந்தில் ஆங்கு என்னுமிடைச்சொற்கள் எவ்வெப்பொருளைத் தரும்? 19. அம்மவென்னுமிடைச்சொல் எவ்வெப்பொருளைத் தரும்? 20. மாவென்னுமிடைச்சொல் எவ்விடத்து வரும்? 21. முன்னிலையில் வரும் அசைச்சொற்கள் எவை? 22. எல்லாவிடத்தும் வரும் அசைச்சொற்களெவை?

## இடையியல் முற்றிற்று

---

# 5. உரியியல்

[உரிச்சொல்லின் பொதுவிலக்கணம்.]

**442.** **பல்வகைப் பண்பும் பகர்பெய ராகி**
**ஒருகுணம் பலகுணந் தழுவிப் பெயர்வினை**
**ஒருவா செய்யுட் குரியன வுரிச்சொல்.**

**இ - ள்.** *பல்வகைப் பண்பும் பகர் பெயர் ஆகி - இசையுங் குறிப்பும் பண்புமாகிய பலவேறுவகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தும் பெயராகி—ஒருகுணம் பலகுணம் தழுவி-அவ்வாறுணர்த்தும்போது ஒருசொல் ஒருகுணத்தையுணர்த்துவனவும் பலகுணங்களையுணர்த்துவனவுமாய் — பெயர் வினை ஒருவா - பெயர் வினைகளைவிட்டு நீங்காவாய்— செய்யுட்கு உரியன உரிச்சொல் - செய்யுளுக்கு உரியவையாய்ப் பொருட்குரிமை பூண்டு நிற்பவை உரிச்சொற்களாம். எ - று.*

*இசை ஓசை. குறிப்பு மனத்தாற் குறித்துணரப்படுவது. பண்பு பொறியாலுணரப்படுங் குணம்.* (1)

[பண்பிது வென்பது.]

**443.** **உயிருயி ரல்லதாம் பொருட்குணம் பண்பே.**

**இ - ள்.** *உயிர் உயிர் அல்லது ஆம் பொருட்குணம் பண்பு - உயிராகிய பொருளும் உயிரல்லாத பொருளுமென இருவகையுளடங்கும் உலகத்துப் பொருள்களின் குணங்கள் பண்புகளாம். எ - று.* (2)

[உயிர்ப்பொருள்.]

**444.** **மெய்ந்நா மூக்கு நாட்டஞ் செவிகளின்**
**ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமே லுணர்தலின்**
**ஓரறி வாதியா வுயிரைந் தாகும்.**

இ - ள். மெய் நா மூக்கு நாட்டம் செவிகளின் - மெய்யும் நாவும் நாசியுங் கண்ணுங் காதுமாகிய ஐம்பொறிகளாலும்—ஒன்று முதலா - மெய்யாற் பரிசத்தையுணருமுணர்ச்சி யொன்று முதலாக—கீழ்க்கொண்டு-கீழ்ப்போனவுணர்ச்சியுங்கொண்டு—மேல் உணர்தலின் - இரதங் கந்தம் உருவஞ் சத்தமென மேல் வரும் புலன்களை யொன்றோடொன்றாக உணர்தலின்—ஓரறிவு ஆதியா ஐந்து ஆகும் - ஓரறிவுயிர்முதலாக ஐந்துவகையாகும்—உயிர் - அவ்வுயிர். எ - று. (3)

[ஓரறிவுயிர்.]

**445.** புன்மர முதலவுற் றறியுமோ ரறிவுயிர்.

இ - ள். புல் மரம் முதல - புல்லும் மரமும் முதலியவை—உற்று அறியும் ஓரறிவு உயிர் - மெய்யாற் பரிசித்துப் பரிசத்தையறியும் ஓரறிவுயிர்களாம். எ - று. (4)

[ஈரறிவுயிர்]

**446.** முரணந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்.

இ - ள். முரள் நந்து ஆதி - இப்பியுஞ்சங்கும் முதலியவை—நா அறிவொடு ஈரறிவு உயிர் - கீழ்ப்போன மெய்யறிவையன்றி நாவாலிரசத்தைபறியும் அறிவோடு ஈரறிவுயிர்களாம். எ - று. (5)

[மூவறிவுயிர்.]

**447.** சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.

இ - ள். சிதல் எறும்பு ஆதி - கறையானும் எறும்பும் முதலியவை—மூக்கு அறிவின் மூவறிவு உயிர் - கீழ்ப்போன இரண்டறிவுகளையன்றி மூக்கால் கந்தத்தையறியும் அறிவோடு மூவறிவுயிர்களாம். எ - று. (6)

[நாலறிவுயிர்]

**448. தும்பிவண் டாதிகண் ணறிவினு லறிவுயிர்.**

இ - ள். தும்பி வண்டு ஆதி - தும்பியும் வண்டும் முதலியவை—கண் அறிவின் நாலறிவு உயிர் - கீழ்ப்போன மூன்றறிவுகளையன்றிக் கண்ணால் உருவத்தையறியும் அறிவோடு நாலறிவுயிர்களாம். எ - று. (7)

[ஐயறிவுயிர்.]

**449. வானவர் மக்க ணரகர் விலங்குபுள்**
**ஆதிசெவி யறிவோ டையறி வுயிரே.**

இ - ள். வானவர் மக்கள் நரகர் விலங்கு புள் ஆதி - தேவரும் மனிதரும் நரகரும் மிருகங்களும் பறவைகளும் முதலியவை—செவி அறிவோடு ஐயறிவு உயிர் கீழ்ப்போன நாலறிவுகளையன்றிச் செவியாற் சத்தத்தையறியும் அறிவோடு ஐயறிவுயிர்களாம். எ - று. (8)

[உயிரல்லாத பொருள்.]

**450. உணர்விய லாமுயி ரொன்று மொழித்த**
**உடன்முத லனைத்து முயிரல் பொருளே.**

இ - ள். உணர்வு இயல் ஆம் உயிர் ஒன்றும் ஒழித்த - அறிவுமயமாகிய உயிரொன்றுமேயன்றி — உடல் முதல் அனைத்தும் உயிர் அல் பொருள்-உடம்பு முதலாகிய உலகத்துப் பொருள்களெல்லாம் உயிரல்லாத பொருள்களாம். எ - று. (9)

[முன்னதற்கு ஒரு புறனடை.]

**451. ஒற்றுமை நயத்தி னொன்றெனத் தோன்றினும்**
**வேற்றுமை நயத்தின் வேறே யுடலுயிர்.**

**இ - ள்.** ஒற்றுமை நயத்தின் - எவ்வுயிர் எவ்வுடம்பை யெடுத்ததோ அவ்வுடம்பின் மயமாய் நிற்கும் ஒற்றுமை நயங்கருதியவழி — ஒன்றனைத் தோன்றினும் - ஒன்று போற்றோன்றுமாயினும் — வேற்றுமை நயத்தின் - உயிர் சித்தாயும் உடம்பு சடமாயும் நிற்கும் வேற்றுமை நயமாகிய உண்மை கருதியவழி—உடல் உயிர் வேறு - அவ்வுடலு முயிரும் வேறாம். எ - று. (10)

[உயிர்ப்பொருள்களின் குணப்பண்பு]

**452.** அறிவரு ளாசை யச்சமான
நிறைபொறை யோர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை யெய்த்தல்
துன்ப மின்ப மிளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்க மறமதம்
மறவி யினைய வுடல்கொ ளுயிர்க்குணம்.

**இ - ள்.** அறிவு***மறவி - அறிவு அருள் ஆசை அச்சம் மானம் நிறை பொறை ஓர்ப்புக் கடைப்பிடி மையல் நினைவு வெறுப்பு உவப்பு இரக்கம் நாண் வெகுளி துணிவு அழுக்காறு அன்பு எளிமை எய்த்தல் துன்பம் இன்பம் இளமை மூப்பு இகல் வென்றி பொச்சாப்பு ஊக்கம் மறம் மதம் மறவியென்னுமுப்பத்திரண்டும் — இனைய - இவை போல்வன பிறவும்— உடல் கொள் உயிர்க்குணம் - உடம்போடு கூடிய உயிர்களினுடைய குணங்களாம். எ-று. (11)

[உயிர்ப்பொருள்களின் தொழிற்பண்பு.]

**453.** துய்த்த றுஞ்ச றொழுத லணிதல்
உய்த்த லாதி யுடலுயிர்த் தொழிற்குணம்.

இ - ள். துய்த்தல்***உய்த்தல் - துய்த்தல் அஞ்சல் தொழுதல் அணிதல் உய்த்தலென்னும் ஐந்தும்—ஆகி இவை போல்வன பிறவும்—உடல் உயிர்த்தொழிற்குணம் - உடம்போடு கூடிய உயிரினுடைய தொழிற்குணங்களாம். எ - று. (12)

[உயிரல்பொருள்களின் குணப்பண்பு.]

**454.** பல்வகை வடிவிரு நாற்றமை வண்ணம்
அறுசுவை யூறெட் டுயிரல் பொருட்குணம்.

இ - ள். பல்வகை வடிவு - வட்டம் இருகோணம் முக்கோணஞ் சதுரமுதலிய பலவகை வடிவுகளும்—இருநாற்றம் - நற்கந்தந் துர்க்கந்தமென்னும் இருநாற்றங்களும்—ஐவண்ணம் - வெண்மை செம்மை கருமை பொன்மை பசுமையென்னும் ஐந்து வண்ணங்களும்—அறுசுவை - கைப்புப் புளிப்புத் துவர்ப்பு உவர்ப்புக் கார்ப்பு இனிப்பு என்னும் அறுசுவைகளும்—ஊறு எட்டு - வெம்மை தண்மை மென்மை வன்மை நொய்மை சீர்மை இழுமெனல் சருச்சரை யென்னும் எட்டூறுகளும்—உயிரல் பொருட்குணம் - உயிரல்லாத பொருள்களினுடைய குணங்களாம். எ - று. (13)

[இருபொருள்களுக்கும் பொதுவாகிய தொழிற்பண்பு.]

**455.** தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்க லடைத னடுங்க லிசைத்தல்
ஈத லின்னன விருபொருட் டொழிற்குணம்.

இ - ள். தோன்றல்***ஈதல் - தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல் நீங்கல் அடைதல் நடுங்கல் இசைத்தல் ஈதலென்னும் ஒன்பதும்—இன்னன - இவை போல்வன பிறவும்—இருபொருட் டொழிற்குணம் - உயிர்ப்பொருளும்

உயிரல்பொருளுமாகிய இரண்டற்கும் பொதுவாகிய தொழிற்குணங்களாம். எ - று.

வ - று. உயிர் தோன்றி மறைந்தது; உடறோன்றிமறைந்தது; நெருப்புத்தோன்றி மறைந்தது என வரும். (14)

[ஒருகுணந்தழுவிய உரிச்சொல்.]

**456. சால வுறுதவ நனிகூர் கழிமிகல்.**

இ - ள். சால***கழி-சாலவென்பது முதலாகிய இவ்வாறுரிச்சொற்களும்—மிகல் - மிகுதியாகிய ஒருகுணத்தையுணர்த்தும் உரிச்சொற்களாம். எ - று.

வ - று. சால—"பருவந்து சாலப் பலகொலென் றெண்ணி."
உறு—"உறுவளி தூக்கு முயர்சினை மாவின்."
தவ—"தவச்சேய நாட்டாராயினும்."
நனி—"வந்துநனி வருந்தினை வாழிய நெஞ்சே."
கூர்—"துனிகூ ரெவ்வமொடு"
கழி—"காமங் கழிகண்ணோட்டம்."

சாலவென்பது சாலென்னுமுரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சக்குறிப்பு. (15)

[பலகுணந்தழுவிய உரிச்சொல்.]

**457. கடியென் கிளவி காப்பே கூர்மை**
**விரையே விளக்க மச்சஞ் சிறப்பே**
**விரைவே மிகுதி புதுமை யார்த்தல்**
**வரைவே மன்றல் கரிப்பி னாகும்.**

இ - ள். கடி என் கிளவி - கடியென்னுமுரிச்சொல்—காப்பு - காவலும்—கூர்மை - கூர்மையும்—விரை - வாசனையும் — விளக்கம் - விளக்கமும் — அச்சம் - அச்சமும் — சிறப்பு - சிறப்பும் — விரைவு - விரைவும் — மிகுதி - மிகுதியும்—புதுமை - புதுமையும் — ஆர்த்தல் - ஒலித்தலும் —

வரைவு - நீக்கலும்—மன்றல் - மணமும்—கரிப்பின் ஆகும் - கரிப்புமாகிய பதின்மூன்று குணங்களினும் வரும். எ - று.

உ - ம். "கடிநகரடைந்து" ............................காப்பு.
"கடி நுனைப்பகழி" ............................கூர்மை.
"கடிமாலைசூடி" ............................நாற்றம்.
"கண்ணாடியன்ன கடிமார்பன்" .......... ..விளக்கம்.
"கடியரமகளிர்க்கே கைவிளக்காகி" ........அச்சம்.
"அம்புநாஞ்சுங்கடியரண்" ....................சிறப்பு.
"எம்மம்பு கடிவிடுதும்" ......................விரைவு.
"கடிபுண் கடவுட்கிட்ட செழுங்குரல்" ......மிகுதி.
"கடிமணச்சாலை" ... ............................புதுமை.
"கடிமுரசு" ...... ............... ..............ஆர்த்தல்.
"கடிமது நுகர்வ" ............................வரைவு.
"கடிவினைமுடுகினி" ............................மன்றல்.
"கடிமிளகுதின்ற கல்லாமந்தி" ..............கரிப்பு. (16)

[ஒருகுணந்தழுவிய உரிச்சொல்]

**458.** மாற்ற நுவற்சிசெப் புரைகரை நொடியிசை
கூற்றுப் புகறன் மொழிகிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி யியம்பல் சொல்லே.

இ - ள். மாற்றம்***இயம்பல் - மாற்றமுதலாகிய பதினாறும்—சொல் - சொல்லென்னும் ஒருகுணத்தை யுணர்த்தும் உரிச்சொற்களாம். எ - று.

உ - ம். "கோவலர்வாய் மாற்ற முணர்ந்து;" "இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல;" "தெருண்டாரவை செப்பலுற்றேன்;" "உரைப்பா ருரைப்பவை யெல்லாம்;" "அறங் கரைநாவி னான்மறை முற்றிய;" "அஞ்சொற் பெரும் பணைத்தோ ளாயிழையா டானொடியும்;" "நசையுநர்க் கடையா நன்பெருவாயி - லிசையெனப் புக்கு;" "உற்றது நாங்கள் கூறவுணர்ந்தனை;" "புகன்ற வன்றியும் பூமி கவருமே;" "காமஞ்செப்பாது கண்டது மொழிமோ;"

"கிளந்த கிளைமுதலுற்ற;" "மெய்ம்மூவாறெனவிளம்பி னர்புலவர்;" "அச்சுதனடிதொழு தறைகுவன்சொல்லே;" "ஒருவன் - செய்தி கொன்றார்க்குய்தி யில்லென் - றறம்பா டின்றே;" "வார்த்தைபகர்குற்றேன்;" "இடிபோலவியம்பி னானே" என முறையே காண்க. (17)

**459. முழக்கிரட் டொலிகலி யிசைதுவை பிளிறிரை**
**இரக்கமுங் கியம்ப லிமிழ்குளி றதிர்குரை**
**கனைசிலை சும்மை கௌவை கம்பலை**
**அரவ மார்ப்போ டின்னன வோசை.**

**இ - ள்.** முழக்கு*** ஆர்ப்போடு-முழக்கு முதலாகிய இருபத்திரண்டும்—இன்னன - இவை போல்வன பிறவும்— ஓசை - ஓசையென்னும் ஒருகுணத்தை யுணர்த்து முரிச் சொற்களாம். எ - று.

வ - று "முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇ;" "குடிஞையிரட்டுங் கோடுயர் நெடுவரை;" "ஒல்லென வொலிக்கு மொலி புன லூரற்கு;" "கலிகெழு மூதூர்;" "பறையிசை யருவி;" "பல்லியந் துவைப்ப;" "பிளிறுவார் முரசம்;" "இரைக்கு மஞ்சிறைப் பறவைகள்;" "இரங்கு முரசினம்;" "இரும் பிழிமாரி யழுங்கின மூதூர்;" "காலை முரசமதியம்ப;" "இமிழ்கடல் வளைஇய;" "குளிறுமுரசங்குணில்பாய;" "களிறு களித்ததிருங்கார்;" "குரைபுனற் கன்னி;" "கனை கடற் சேர்ப்ப;" "சிலைத்தார்முரசங்கறங்க;" "தள்ளாத சும்மை மிகுதக்கிண நாடுகண்ணி;" "கௌவை நீர்வேலி;" "வினைக்கம்பலை மனைச் சிலம்பவும்;" "அறைகடலரவத் தானை;" "ஆர்த்த பல்லியக்குழாம்" என முறையே காண்க. (18)

[இவ்வியலுக்குப் புறனடை.]

**460. இன்ன தின்னுழி யின்னண மியலும்**
**என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்**

சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோ ருரிச்சொலி னயந்தனர் கொளலே.

இ - ள். இன்னது இன்னுழி இன்னணம் இயலும் என்று நூலுள் - பெயர்வினையிடையுரிகளில் இன்னசொல் தன்மை முன்னிலை படர்க்கைகளிலும் வழக்குச் செய்யுள் களிலும் இவ்விடத்தே இவ்விலக்கணமுடையதாய் நடக்கும் என்று சொல்லக்கடவதாகிய இந்நூலுள்—குணகுணிப் பெயர்கள் சொல்லாம் பரத்தலின் - குணப்பெயர்களையுங் குணிப்பெயர்களையும் வேண்டியமட்டுஞ் சொல்வதன்றி விரித்துச் சொல்லக்கடவமல்லம் விரிக்கின் மற்றொன்று விரித்தலென்னுங் குற்றம் வருமாதலின்—நல்லோர் பிங்கலம் முதலா உரிச்சொலில் நயந்தனர் கொளல் - அவற்றைக் கண்டறியவேண்டினோர் மற்றைப் புலவராற் கூறப்பட்ட பிங்கலந்தை திவாகர முதலிய நூல்களில் உரிச்சொற் றொகுதியுள் விருப்பிக்கொள்க. எ - று.

எனவே, பெயரியலுட்பெயர்ச்சொற்றொகுதியையும், வினையியலுள் வினைச்சொற்றொகுதியையும், இடையியலுள் இடைச்சொற்றொகுதியையும, விரிக்காமைக்கும் இதுவே புறனடையா மென்பதாயிற்று. (19)

**பரீக்ஷை வினாக்கள்:**—1. உரிச்சொல்லாவன யாவை? 2. பண்பாவதியாது? 3. உயிர்ப்பொருள்களாவன யாவை? 4. ஓரறிவுயிர்களெவை? 5. ஈரறிவுயிர்களெவை? 6. மூவறிவுயிர்களெவை? 7. நாலறிவுயிர்களெவை? 8. ஐயறிவுயிர்களெவை? 9. உயிரல் பொருள்களாவன யாவை? 10 உயிரோடு கூடிநின்ற உடம்பை உயிரல்பொருளென்றதென்னை? 11. உயிர்ப்பொருள்களின் குணப்பண்புகளெவை? 12. உயிர்ப்பொருள்களின் றொழிற் பண்புகளெவை? 13. உயிரல்பொருள்களின் குணப்பண்புகளெவை? 14. உயிர்ப்பொருளும் உயிரல்பொருளுமாகிய

இரண்டற்கும் பொதுவாகிய தொழிற்பண்புகளெவை? 15. மிகுதியென்னும் ஒருபண்பையுணர்த்தும் உரிச்சொற்களெவை? 16. கடியென்னுமுரிச்சொல் எப்பண்பையுணர்த்தும்? 17. சொல்லென்னும் ஒருகுணத்தையுணர்த்தும் உரிச்சொற்களெவை? 18. ஓசையென்னும் ஒரு குணத்தையுணர்த்தும் உரிச்சொற்களெவை? 19. உரிச்சொற்களெல்லாம் இந்நூலிற் சொல்லப்படாமைக்குக் காரணமென்னை? அவை எங்கே காணப்படும்?

---

[இவ்வதிகாரத்துக்குப் புறனடை.]

**461. சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்து**
**முற்ற மொழிகுறின் முடிவில வாதலிற்**
**சொற்றவற் றியலான் மற்றைய பிறவுந்**
**தெற்றென வுணர்த தெள்ளியோர் திறனே.**

**இ - ள்.** சொற்றொறும் இற்று இதன்பெற்றி என்று - சொற்றோறும் இத்தன்மைத்து இதனிலக்கணமென்று—அனைத்தும் முற்ற மொழிகுறின் முடிவு இல ஆதலின் - முழுதும் நிறைவுறச் சொல்லப்புகுந்தால் முடிவு இல ஆதலால்—சொற்றவற்று இயலான் - எடுத்துச் சொல்லப்பட்ட சொற்களுடைய இலக்கணங்களைக்கொண்டு—மற்றைய பிறவும் தெற்றென உணர்தல் - சொல்லப்படாதவற்றின் இலக்கணங்களையும் ஒப்புமை கருதி இதுவுமதுவென வுணர்தல்—தெள்ளியோர் திறன் - நூலோதித் தெளிதற்குரிய மாணாக்கரது கடனாம். எ - று.

இவற்றிற்குதாரண முன் வந்தன காண்க. (20)

[இந்நூலிற்குப் புறனடை.]

**462. பழையன கழிதலும் புதியன புகுதலும்**
**வழுவல கால வகையி னானே.**

இ - ள். பழையன கழிதலும் - முற்காலத்துள்ள இலக்கணங்களுட் சில பிற்காலத்திறத்தலும் — புதியன புகுதலும் - முற்காலத்தில்லன சில பிற்காலத் திலக்கண மாதலும்—வழு அல கால வகையினான் - குற்றமல்லவாங் கால வேற்றுமை யதுவாகலால். எ - று.

இவற்றிற்கும் உதாரணம் முன் வந்தன காண்க. (21)

உரியியல் முற்றிற்று.

சொல்லதிகாரம் முற்றுப்பெற்றது.

---

## நன்னூற்காண்டிகையுரை

முற்றுப்பெற்றது.

---

# அப்பியாசம்

## 1. அப்பியாசம்.

மேல் வரும் பெயர்களுள் இன்னது இன்னது இன்ன இன்ன ஏதுவால் இன்ன இன்ன பெயர் என்று எழுதுக:—

மலை, கடல், நிலம், பறவை, அலரி, யாக்கை, யாறு, சோறு, விளா, விலங்கு, குமிழி, மாதவன், கணபதி, முருகன், செட்டி, வேலன், பார்ப்பதி, புலவன், ஆதித்தியன், நிசாபதி, பயோதரம், கந்தரம், நள்ளார், எச்சம், படை, உயிர்நிலை, பஞ்சானனம், வாரிசம், மலயசம், சடிப்படை, பங்கயம், தொடை, தேட்டம், இறை, எழுத்து, பாட்டு, கறவை.

## 2. அப்பியாசம்.

மேல் வரும் உதாரணங்களுள், இன்ன இன்ன சொல்லில், இன்ன இன்ன இடத்தில், இன்ன இன்ன எழுத்து, இன்ன இன்ன ஏதுவின்பொருட்டு, இன்ன இன்னபடி அளபெடுத்தது என்று எழுதுக:—

(1) 'நற்றா டொழாஅ ரெனின்.' (2) 'துப்பாய தூஉ மழை.' (3) 'வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்.' (4) 'புறத்தார்க்குப் போஒய்ப் பெறுவ தெவன்.' (5) 'உடுப்ப தூஉ முண்பதூஉ மின்றிக் கெடும்.' (6) 'அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே - புறனழீஇப் பொய்த்து நகை.' (7) 'இசை யென்னு மெச்சம் பெறாஅ விடின்' (8) 'தவாஅப் பிறப்பீனும் வித்து.' (9) 'சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ - நன் றின்பா லுய்ப்பதறிவு.' (10) 'கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி.' (11) 'குருதியொடு விரைஇத் தூவெள்ளரிசி சில் பலிச் செய்து.' (12) 'கலங்ங் கொண்ட கண்மார்பர்.' (13) அரண்ண் கொண்ட வடுதோளினர்—வலம்ம் பட்ட வாள் வயவர்—பகல்ல் லன்ன பண்புரையீர்—திரள்ள் சேனை செலீக்கி.' (14) 'கசடற வல்லதூஉ மையர் தரும்' (15) 'குதிரை

வென்றதூஉந் தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.' (16) 'இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப - முழத்தொறூஉங் காதற் றுயிர்.' (17) பொருள்கெடுத்துப் பொய்ம்மேற் கொளீஇ யருள்கெடுத் - தல்ல லுழப்பிக்குஞ் சூது.'

## 3. அப்பியாசம்

மேல் வருஞ் சொற்களுள், இன்ன இன்ன சொல்லின் ஈற்றுகரம், இன்ன இன்ன ஏதுவால், இன்ன இன்ன தொடர்க் குற்றியலுகரம், இன்ன இன்ன சொல்லின் ஈற்றுகரம் இன்ன இன்ன ஏதுவால் முற்றியலுகரம் என்று எழுதுக:—

பொருப்பு, வருவது, அரிது, வெஃது, நசு, காட்டு, பசு, அரக்கு, கரும்பு, உறு, கதவு, மால்பு, ஞாயிறு, ஒல்கு, நடு, பஞட்டு, நெல்லு, புணர்வு, மரபு, செலவு, உயர்த்து, அது, தொடர்பு, இந்து, உரிஞு, அலாபு, செவிடு, ஏது, தாலு, வெள்கு, இங்கு, போவது, எய்து, மூழ்கு, ஓர்ப்பு, ஆமணக்கு, நீடாது, குறுகாது, பாட்டு, பொச்சாப்பு, விராவு, எழுத்து, இஃது.

## 4. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்களுள், இன்ன இன்ன இடத்து மகரமெய், இன்ன இன்ன ஏதுவால், மகரக்குறுக்கம்; இன்ன இன்ன ஏதுவால் மகரக்குறுக்கமன்று என்று எழுதுக:—

(1) 'பாயும் விடையரன் றில்லை.' (2) 'நற்றவம் வேள்வி மல்க.' (3) 'திருச்சிற்றம்பலம் போற்றி.' (4) 'அறுமுகம் வாழ்க.' (5) 'பொன்னங் குன்றின்மே லவன்கொடை போன்ம்.' (6) 'இருவ ராகத்து ளோருயிர் கண்டனம் யாம்.' (7) 'வீறு சேதனம் வச்சிரமங்குசம் விசிகம்.' (8) 'இத்திசைக் கையநீ புதியை போன்ம்.'

## 5. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்களுள், ஆய்தக்குறுக்கம் அமையப்பெறுந்தொடர்களை அவ்வாறு புணர்த்தெழுதுக; ஆய்தக்

குறுக்கம் அமையப்பெறாத தொடர்கள் இவையிவையெண நியாயத்தோடு காட்டுக:—

வேல்+தொட்டான்; வாள்+தந்தான்; அல்+திணை; கல்+தீமை; பல்+தொடை; விரல்+தேய்ந்தது; பொருள்+தேட்டம்; முள்+தீமை; சில்+தாழிசை; கல்+தேய்ந்தது; முள்+தீந்தது.

## 6. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்களுள், இடைநிலைமெய்ம்மயக்க விதியிற் பிழைபட்டவை உளவாயின், அவைகளை விதி காட்டி எழுதுக:—

உரிஞ் கொற்றா, காணும் கண்; மேலாம் நன்னெறி; இத் திறம் ஞானயோகம்; அறம் செய்தான்; மண் தீது; மீன் தலை; பண் நன்று; தேன் நன்று; புலால் தீது; நல் நூல்; ஆலயம் தொழுவது; பொருள் தேடினான்; செங்கோல் முறை; நல் ஞானம்; அருள் நலம்; இருள் ஞாலம்; தெவ் முனை; கொடிது; வெரிந் புறம்.

## 7. அப்பியாசம்.

1. மேல்வருஞ்சொற்களைப் போலிப்படுத்தெழுதுக:—

அறம், புலம், பொதும்பு, குடல், அரும்பு, மனம், ஆலயம், இமயம், 'வயல் காட்டு மைந்நீல மதிகாட்டும்;' ஐந்நான்கு, மெய்ந்நெறி, மாது, வண்டு, அனந்தல்.

2. மேல் வருஞ் சொற்றொடர்களில் உள்ள போலிகளை எடுத்துக்காட்டுக:—

(1) 'சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல.' (2) 'கொம்பரில்லாக் கொடி போலல மந்தனன் கோமளமே.' (3) 'அகனமர்ந்து செய்யாளுறையும்,' (4) 'முன்றில்களல்லன முத்தின் பந்தரே.' (5) 'குலனரு டெய்வங் கொள்கை மேன்மை.' (6) 'மெய்ஞ்ஞெறியைத் தான் காட்டும் வேதமுதலானே.' (7) 'மெள்ளப்படிறு துணி' (8) 'தழலெழ விழித்தனன் சாம்பராயினன்.' (9) 'அலமரு குயிலினம்.'

## 8. அப்பியாசம்.

மேல் வரும் பகாப்பதங்களுள், பெயர்ப்பகாப்பதங்கள் எவை? வினைப்பகாப்பதங்கள் எவை? இடைப்பகாப்பதங்கள் எவை? உரிப்பகாப்பதங்கள் எவை? என்று எழுதுக:—

சோறு, சினம், தேன், போ, தேடு, நெல், எறி, விடு, சக்கு, வாழ், கிரை, மற்று, அம்ம, மாடு, நிகர், நனி, தேய், வாள், பொன், செல், மரம், அணில், தொழு, கொன், தவ, இனி, பலா, உம் கேள், தோறும், உறு, தோண்டு, கூர்.

## 9. அப்பியாசம்.

1. மேல் வரும் பகுபதங்களுள், இன்னதின்னது இன்ன இன்ன பகுபதமென்றெழுதுக:—

குழையன், நிலத்தன், வெற்பன், செய்தான், செய்வான், வேனிலான், படியான், பொருளன், மாசியான், செய்கின்ற, படியாத, மதுரையான், தசசன், செய்கின்றான், படித்து, படியாமல், மற்றையான், முடியன், நெடுங்கையன், பல்லன், கணக்கன் பெரியன், கூனன், கற்கின்றிலன், ஈகை, அல்லால், குறளன் கூனி, தின்றனள், சிவப்பன், மூவாட்டையான், அவள், யாவன், படிக்க, செய்த, நடத்தல், வந்தனன், நல்லன், பாடுவான் கொடை, வெண்மை, கூத்தன், தீமை, படிக்கின், தந்தனள் சிறியன், செய்யும், எவர், பிறன், செக்கான், இவள்.

2. மேற்போந்த பகுபதங்களைப் பகுதி விகுதி முதலிய பிரித்தெழுதுக:—

## 10. அப்பியாசம்.

மேல் வரு மொழிகளிற் பண்புப் பதங்கள் விகாரப்பட்ட வகையை விவரித்தெழுதுக:—

செய்ய, சிற்றூர், சிறடி, சிறுவர், சேந்தது, செவ்விய, சேப்ப சேய்த்து, தீயார், வெந்நீர், சிறு துரும்ப, வெவ்விய, புதுப்புனல் புத்தூர், முதியோன், மூதுரை, திண்டோள், பாசடை, பை

பொன், அரும்பொருள், ஆமுதா, இளம்பிறை, பெரும்புகழ்; வெறுங்கை, உறி, வெய்ய, சிற்றுரை, நெட்டிணை, சேதா, மேலோர், காரா, பேரொலி, குறுந்தாள், பெரியன், தீங்கனி, உண்டு, உள்பொருள், இல்பொருள். வெம்போர், மெல்லிய, மெல்ல, இலது, உளது, தீவினை, அன்று, இன்று, முதுபொருள், குற்றுடைவாள், நெடுஞ்சுவர், பேராசை, ஆருயிர், புதுதுரை.

## 11. அப்பியாசம்.

மேல் வருந் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதங்களின் பகுதிகளை யெடுத்தெழுதுக:—

கிடந்தான், பறந்தது, ஒடித்தான், விடிந்தது, நீத்தான், வீந்தான், நட்டான். தொடுத்தான், தூவினான், பூத்தது, மேவினான், கைத்தது, நைந்தான், மோந்தான், கௌவினான், எண்ணினான், கண்டான், உன்னினான், வேய்ந்தான், சேர்ந்தான், வென்றான், புல்லினான், சொற்றான், ஆழ்ந்தான், வேட்டான், நகினான், அஃகினான், குறுகினான், நச்சினான், அஞ்சினான், மூழ்கினான், விசுவசித்தான், சிருட்டித்தான், திதித்தான், சங்கரித்தான், அநுமித்தான், ஆவாகித்தான், பிரசரித்தான், புலியொத்தான், சேர்ந்தான், சிறுத்தான்.

## 12. அப்பியாசம்

மேல் வரும் வினைப்பகுதிகளைப் பிறவினைப் பகுதிகளாக்குக:—

தா, கொடு, விடு, வை, அஞ்சு, ஆ, கிட காய், வெருள், பயில், பெருகு, இரு, ஓடு, ஆறு, தேறு, வருந்து, கூடு, உணர், அடங்கு, காண், வீழ், அருந்து, பிழை, எழும்பு, இறுத, ஆழ், பொருந்து, புகு, விளங்கு, நீங்கு, நில், ஒழுக, தியங்கு, தாங்கு, எய்து, துடை, தாழ், தூங்கு, ஏங்க, கிள, பூண், தங்கு, மாறு.

## 13. அப்பியாசம்.

1. மேல்வரும் விகுதிகளையுடைய பெயர்கள் எழுதுக:—

மார், தை, பி, கை, மன், மான்; முன், வை, அல், வ், து, இ, ன்.

2. மேல் வரும் விகுதிகளையுடைய தொழிற்பெயர்கள் எழுதுக:—

வி, காடு, தி, உள், அரவு, ஆனை, வை, இ, அம், ஐ, மை, து, ப, உ, சி, அல்.

3. மேல் வரும் விகுதிகளையுடைய பண்புப்பெயர்கள் எழுதுக:—

சி, உ, அம், ஐ, மை, ப, ர்.

4. மேல் வரும் விகுதிகளையுடைய வினையெச்சங்கள் எழுதுக:—

இ, கால், டை, ய், கு. இன், அ, றி. மல், ஆல், உம், கடை, இயர்.

5. மேல் வருஞ் சொற்களுள், இ, ஐ, அம், என்னும் விகுதிகள் எவ்வெப்பொருளில் வருகின்றன?—நியாயத்தோடெழுதுக:—

சேர்ந்தார்க்கொல்லி, விடை, போர்வை, உடை, தொன்னூற்கஞ்சி, கறவை, தேட்டம், நாட்டம், கூட்டம், இறை, சுற்றம், யாக்கை, சமையோட்டி, அகத்தியம், குகிழி, உடுக்கை, ஆக்கம், கொடை, அளபெடை, பாக்குவெட்டி, சுமைதாங்கி, அடை, நிறை, பொறை, ஓடை, மயிர்மாட்டி, எடை, மடை, [=சோறு] உண்டி, பூணி, [=எருது,] தொடி, நடவை, அகழி, ஏற்றம், ஆத்திசூடி, வன்புறை, கையுறை, கோவை.

6. மேல் வரும் தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய முதனிலைகளினின்றும் தன்வினை பிறவினைப் பகுபதங்கள் பிறப்பிக்க:—

அடி, மடி, முடி, பிரி, எரி, தீர், தெரி, விரி, ஓடி, அறு, இமை, அமை, இடி.

## 14. அப்பியாசம்.

மேல் வரும் பெயர்ப் பகுபதங்களில் உள்ள இடைநிலைகளை எழுதுக:—

குறத்தி, அருளாட்டி, சோழிச்சி, எயிற்றி, உழத்தி, செறுநர், உழுநர்.

## 15. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள வினைப்பகுபதங்களிற் காலங்காட்டும் உறுப்புக்களை எடுத்துக் காட்டி, அவை இன்ன காலங் காட்டுமென்றெழுதுக:—

(1) 'வாழ்கவந்தணர் வானவரானினம்.' (2) 'காலமுண்டாகவே காதல்செய்துய்மின்.' (3) 'எண்ணென்பவேனை யெழுத்தென்ப.' (4) 'மஞ்சிவரிஞ்சி மன்றமிறைஞ்சீர் நமரங்காள்.' (5) 'அந்தமாதியென்மனார் புலவர்.' (6) 'நம்மையர்க்காய குற்றேவல செய்கோ.' (7) 'தசரதன் மதலைபால் வருதுந்தாரணி.' (8) 'நன்னகரமானது நவின்றும்.' (9) 'மிதிலைபார் கோமான் புரியும்வேள்வியுங் காண்டு நாம்.' (10) 'மலைவளம் பெரிதென்கோ யான்.' (11) 'சென்னியுற வணங்கிச் சேர்தும்.' (12) 'நின் கருத்தினை முடித்துமென் றகன்றான்.' (13) 'கெடுவல் யானென்பதறிக.' (14) 'நின்று மாதவம் புரிதியே னினைவு மூற்றும்.' (15) 'விடை பொறித்ததறைந்தும்.' (16) வஞ்சித்தோகென்று மகிழன்மின்.' (17) 'எருமேற்புழி யென்மனார் புலவர்.' (18) 'வள்ளவாய்ச்செழுங்கமலத்தில் வண்டு பாண் மிழற்றும்.' (19) 'அன்றறிவாமென் னுதறஞ்செய்க.' (20) 'ஏதிலாளனை வேறுக.' (21) 'நான்மறை யறங்களோங்க.' (22) 'ஞஃகானுறழுமென் மருமுளரே.' (23) 'ஒருபிடிசோறிடு மினப்புறஞ் சோறும்.

## 16. அப்பியாசம்.

மேல்வரும் வடமொழிகளைத் தமிழில் எழுதி, அவ்வவற்றிற்கு விதிகாட்டுக:—

𑌵𑍃𑌷𑌭𑌃, 𑌧𑍃𑌷𑍍𑌟𑌿𑌃, 𑌦𑍇𑌵𑌃, 𑌵𑍃𑌦𑍍𑌧𑌿𑌃, 𑌜𑌿𑌷𑍍𑌣𑍁𑌃, [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible],

[illegible]

## 17. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்கள் இன்ன இன்ன தொடர் என்றெழுதுக; அவைகளுள்ளே, தொகைநிலைத்தொடர்களை விரித்துக் காட்டுக:—

பிரமன் படைத்தான், உண்டு வந்தான், எறிபடை, வீழ்புனல், பவளவாய், நன்மை தீமை, சிவபிரான், அறை புகழ், கொற்றன் புத்தகம், கைவேல், போனான் கொற்றன், நெருப்பு நெருப்பு, உண்ட கொற்றன், வேய்த் தோள், எய்கணை, கைகால், வேங்கைப் பூ, முண் மரம், வேற்கண், செஞ்ஞாயிறு, சுடலையாடி, கருங்குவளை, விரி கதிர், ஒரு பொருள், ஈட்டு தனம், கொற்றா கொள், அதுமற்றம்ம, கழிபேருவகை, பொற்சுணங்கு, அடுகளிறு. உண்கலம், வெந்நீர், ஐம்முகன், தரள நகை, பூங் குழல், முருக வேள், கண்ணுதல், ஆக்கக் கேடு, தாழ்குழல், பிறைசூடி, நாட்டு புகழ், கைலையாளி, வினை கலன், கவிழ் தும்பை, துடி யிடை, கற்பக வள்ளல், அமுருணம், தண்ணீர், செய்கடன், வட்டக் கல், ஆயன் சாத்தன், துவர்க்காய், கறையடி, புழைக்கை, நால்வாய், கொடுங்கோல், குன்றவில்லி, தீங்கனி, மாணாக்கனைக் கற்பித்

தான், புகழ் பொருள் புண்ணியம், தின் பண்டம், படை படை, கொள் கடை, நெடுந் தெரு, கிளி மொழி, போன கொற்றன், சதுரப் பலகை, சாத்தன் புதல்வன், பால் குடித்தான், வாளால் வெட்டினான், தலை வணங்கினான், ஊர் நீங்கினான், மணி யொளி, மலையினிழிந்தான், கரிய சாத்தன், குழையன் கொற்றன், தந்தை தாய், தயிர்க்குடம், அரன் மகன், கயந்தலை, நெற்பொரி, வாட்டழும்பு, மெல்லிலை, பனிக்கதிர், மெல்கோல், முந்நீர்.

## 18. அப்பியாசம்.

1. மேல்வருந் தொடர்களில் உள்ள புணர்ச்சி விகாரங்களை விளக்கி எழுதுக:—

பூங்குழல், பனைக்கொடி, பொற்குடம், பஃறலை, எழுபது, பல்கலை, மரவேலி, தமிழப்பிள்ளை, நாடுரி, சாரைப்பாம்பு, புளியங்காய், வட்டவாழி, பனங்காய், தாழக்கோல், புளியமரம், பனாட்டு, வேப்பங்காய்.

2. மேற்போந்த புணர்ச்சிகளுள், இன்ன இன்ன புணர்ச்சியில், இத்தனை இத்தனை விகாரம் வந்தன என்று காட்டுக:—

## 19. அப்பியாசம்.

மேல்வரும் வாக்கியங்களில் உள்ள செய்யுள்விகாரங்களை விளங்கக்காட்டுக:—

(1) 'சூழ்த்து மதுகரமுரலுந் தாரோயை.' (2) 'கொம்பரன்னீர்களின்னே வருங்கள்." (3) தினைத்தனைப்பொழுதும் மறந்துய்வனோ' (4) 'கருப்பனைத் தடக்கை வேழக் களிற்றினை யுரித்தகண்டன்.' (5) 'ஆளி பொங்கு மரம்பைய ரோதியே.' (6) 'அருப்போடு மலர் பறித்திட் டுண்ணாவூரும்' (7) 'காதமருங்கொடுங் குழையான்.' (8) 'தண்டப் புடையிற் றுளைசெய்ததனிற்-கண்டிக்கயிறுங் கடிதேயடைவார்.' (9) 'பிறைக்கடைபிறக்கிட மடித்த பிலவாயாள்.' (10) 'மத்தயானை மறுகவ்வுரி வாங்கியக் கத்தை போர்த்த கடவுள்.' (11) 'நன்பால் கலந்தீமை யாற்றிரிந் தற்று.' (12) 'புயலென்னும் வாரி வளங் குன்றிக்கால்.' (13) 'செங்கண் மாலுங் கடிக்கமலத் திருந்தயனும்

காணுவண்ணம்.' (14) 'பொய்குன்ற வேதியரோ திடமுந்திட மிந்திடமு-மெய் குன்ற வார்சிலை யம்பலவற் கிடம்.' (15) 'துறை வர் சென்றார் போரும் பரிசு புகன்றனரோ.' (16.) 'இவறன்மை யெற்றுள்ளு மெண்ணப்படுவ தொன்றன்று.' (17) 'புகழ்புரிந் தில்லிலோர்க்கு.' (18) 'கோணு கணையானுங் குளிர்தா மரையா னுங் காணார்.' (19) கோற்றொடி நலன்மே லுற்ற காதலைக் குறித்து.' (20) 'மாரிலனைக்கு மரற்று மால்.' (21) 'பல்பல விருங்கனி பருங்கிமிக வுண்டவை நெருங்கி.' (22) 'உம்பருள் ளார் தொழுதேத்த நின்ற பெற்றமரும் பெருமானை.' (23) 'எற்றி னார் கொடியாரிடை மருதினைப் பற்றினார்.'

## 20. அப்பியாசம்.

மேல்வரும் உதாரணங்களில் "எண்மூ வெழுத்திற் றெவ்வகை மொழிக்கும்" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த புணர்ச்சிகளை எடுத்துக் காட்டி விளக்குக.

(1) 'வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல் - வாடா மாலை யோடையொடு துயல்வர.' (2) 'யார்க்கு-மூலகாரணமாய் நின்ற மூர்த்தி யிம்மூர்த்தி யன்றோ.' (3) 'மெய்ஞ்ஞான மாகி மிளிர் கின்ற மெய்ச்சுடரே.' (4) 'கடவுள ரிரியல்போக - ஞாட்பியல் செருக்கில் வந்தான் ஞான நாயகன்றன் முன்னம்.' (5) 'ஏறு வெம்பரி வயப்புலி வல்லியம் யாளி.' (6) 'நெய்ஞ்ஞிறை 'நெடு வேல்.' (7) 'புன்னுனி மேனீர்போல்.' (8) 'உய்வில்லை - செய்ந் நன்றி கொன்றமகற்கு.' (9) 'கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப் - பண்ணவன்.' (10) "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் - நிலமிசை நீடுவாழ் வார்" (11) 'மெய்ம்மூ வாறெனை விளம்பினர் புலவர்.' (12) வியனுலகத் - துண்ணின் றுடற்றும் பசி' (13) 'பொன்னிறத் திருவொடும்.' (14) 'மண்யாத்த கோட்ட மழகளிறு தோன்றுமே.' (15) 'பூசையான் செய்தே னெனுமென் போதவாசனை.'

## 21. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகள், எவ்வெவ்வழியில் எவ் வெப் பெயரீற்று எவ்வெவ்வெழுத்து வல்லினம் வர இயல்

பாயின? எவ்வெப் பெயரீற்று எவ்வெவ்வெழுத்தின் முன் வரும் வல்லினம் இயல்பாயின? எப்பெயர்முன் நாற்கணமும் வர நிலைமொழி வருமொழிகள் விகாரப்பட்டன:—

(1) 'இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.' (2) 'சிவபெருமான் றிருவடிக்கே பதித்த நெஞ்சம்.' (3) 'வேதியர் சொன் மெய்யென்று மேவாதே.' (4) 'வேனில் வேள் கணை கிழித்திட.' (5) 'குமரவேள் சேவடிகள் வணக்கஞ் செய்வாம்.' (6) 'மறுவில் கற்பின் வாணுதல் கணவன்.' (7) 'விடையாய் விண்ணோர் பெருமானே.' (8) 'வாகீசப் பெருந்தகைதன் ஞானப் பாடற் றொடை.' (9) 'தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்று வான்.' (10) 'செவ்விய குரிசில் கூறத் தேர்வலான் செப்புவான்.' (11) 'தீயவர் சேனைவந்து சேர்ந்தமை' (12) 'மன்னவன் பரிமாக் கொள்ள நல்கிய பொருளெலாம்.' (13) 'தந்தைதாய் குரவனுசான் சங்கரன்.' (14) 'மைந்தர் பல்லுயிரும்.' (15) 'கந்தக் கடவுண் மணத்தன்மை கழறி.' (16) 'ஆனந்த போகந்தந்த தேசிக வுழவன்றன் கோயிலைச் சார்ந்தார்.' (17) 'தாதியர் செவிலியர் தாயர் தங்கையர் மாதுயருழந்தனர்.' (18) 'பிரமன்மால் காணுப் பெரியோன் காண்க' (19) 'அந்தமூர்த்தி விருநாமங் கண் மொழியக் கேண்மின்.' (20) 'மலைமுனி யுணர்வகை யருள் புரியுந் தேசிக முதல்வன்.' (21) 'தந்தைசொன் மிக்க மந்திர மில்லை.' (22) 'தில்லையெங்கூத்தப் பிரான் கயிலைச் சிலம்பில்.' (23) 'திருத்தொண்டத்தொகை.'

## 22. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில், எவ்வெச்சொன்முன் வரும் வல்லினம், எவ்வெவ்வேதுவால் இயல்பாயின:—

(1) 'மடுக்கோ கடலின் விடு திமில்.' (2) 'யா காவாராயினும்.' (3) 'ஆவியன்றோய் கவலேல்.' (4) 'இறைவா தடவரைத் தோட்கென் கொலாம் புகுந் தெய்தியதே' (5) 'சுடரிலை வேல கண்டே னென்று நின்றதுவே.; (6) 'பித்தா பிறைசூடி பெருமானே.' (7) 'ஆடுகின்றிலை கூத்துடையான் கழற் கன்பிலை.' (8) 'மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ.'

(9) 'வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய் பொருதி புலம்புதி நீயும்.' (10) 'நதியைச் சிந்திப் போவேனோ சிறிதுமென்னோ வகந்தையன் போலும்.'

## 23. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் உள்ள உடம்படுமெய்கள் இவை இவை என்றும் அவை இன்ன இன்ன எழுத்துக்கள் புணர்ந்தமையினாலே தோன்றினவென்றும் எழுதுக:—

(1) 'நீரிற்குமிழி யிளமை.' (2) 'வற்றியவோலை கலகலக்கும்.' (3) 'பச்சோலைக் கில்லையொலி.' (4) 'பையரா வமளியானும்.' (5) 'இருள்கடிந் தருளிய வின்ப வூர்தி.' (6) 'ஞானநாயகனே யோலம்.' (7) 'கோவிலின் மருங்கு முன்னும்.' (8) 'சேவேறு சேவடிக்கே சென்றூதாய்.' (9) 'பூவேறு கோனும்.' (10) 'ஆணோவலியோ வரிவையோ வென்றிருவர் காணுக்கடவுள்.' (11) 'அடியேனை யஞ்சே லென்பாரார்.'

## 24. அப்பியாசம்.

மேல்வரும் உதாரணங்களைக்கொண்டு "எகரவினாமுச்சுட்டின்" என்னுஞ் சூத்திரத்தை விளக்கிக் காட்டுக:—

(1) 'இத்திறம் பொருத காலை.' (2) 'அந்நெறியேகி.' (3) 'அத்தேவர் தேவர்.' (4) 'இப்பிறப்பினு ளிணைமலர் கொய்துநான்.' (5) 'இவ்வரும்பிறவிப் பௌவநீர் நீந்து மேழை யேற்கு.' (6) 'வணிக மாக்களை யொத்ததவ் வாரியே.' (7) 'நெருநலுளனொருவ னின்றில்லை யென்னும் - பெருமை யுடைத்திவ் வுலகு.' (8) 'எப்பெருந் தன்மையு மெவ்வெவர் திறமு மப்பரி சதனாலாண்டுகொண் டருளி.'

## 25. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளிலே, குற்றியலுகரமும், முற்றியலுகரமும், கெட்டே புணர்ந்தமையுங் கெடாது புணர்ந்தமையும் எடுத்து விளக்கிக் காட்டுக:—

(1) மாதாடும் பாகத்தன்.' (2) 'ஆரேனுந் தன்னடியார்க்கன்பன் கண்டாய்.' (3) 'வணிக மாக்களை யொத்ததவ் வாரியே.' (4) 'அனைத்துலகு மாக்குவாய்.' (5) 'ஆகமந் தோற்றுவித்தருளி

யும்.' (6) 'பிறவிலாத வின்னருள்கள்.' (7) 'கூத்துடையான் கழற் கன்பிலே.' (8) 'ஓய்விலாதன.' (9) 'செல்வ நல்குரவின்றி.'

## 26. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்களில் வல்லின மிகாமைக்குக் காரணம் எழுதுக:—

(1) 'பால் சுரந்த கலசம் போற்றி.' (2) 'கூவின பூங்குயில் கூவின கோழி.' (3) 'புலியூரன்ன பொன்.' (4) 'இயமன் விடுத்த தூதோ.' (5) 'தனதாண் முயங்குவித்த.' (6) 'இயம்பல தவைப்ப.' (7) 'பிணங்களைக் காணு கண்.' (8) 'ஐந்தெழுத்தும் பாடிய பொருளா யுள்ளான்.' (9) 'பல கற்றோம் யாமென்று தற்புகழ வேண்டா.' (10) 'உடன் பிறந்தேகொல்லும் வியாதி.' (11) 'அறுசுவை யுண்டி.' (12) 'ஒருகொம்பிருபதம்.' (13) 'இன்னதன் மைய பின்னு மியம்புவான்.' (14) 'தீயவை தீய பயத்தலாற் றீயவை தீயினு மஞ்சப்படும்.' (15) 'அணியாளோ கண்ணவாத் தக்ககலம்.' (16) 'ஐம்படை சதங்கைசாத்தி.' (17) 'வெண்ணெய் நல்லூரிலே நீ போதினு நன்று.' (18) 'அமுதொடு தேனொடு பால்.' (19) 'வாயுமற்றெனது கூறு மாருதி யெனலும்.' (20) 'ஒருபக லுலகெலா முதரத்துட் பொதிந்து.' (21) 'மன்னவர் தருதிறை.' (22) 'ஐயிரு தலையிறோன்.' (23) 'வீரமொடு தாக்க விரைகுவார்' (24) 'கைப்பரு பேய்ச்சுரையின் காய்.' (25) 'ஆ பயந்தபால்.' (26) 'பல குடை நிழல்.' (27) 'தெருவினிற் சிறியன திசைகள்.' (28) 'மலையென விழி துயில்.' (29) 'அது போர்த் தருளும்.' (30) 'திரைசெழுபயோததி.' (31) 'இந்திர னுவகை பூத்தான்.' (32) 'அது பழச்சுவை.' (33) 'பூசனை விடாது செய்து.' (34) 'பரந்து பல்லாய் மலரிட்டு.' (35) 'நுணங்கு கேள்வியாய்.' (36) 'இல்லாது செல்வம்.' (37) 'அகடு கீண்டொழுகிய தன்றே.' (38) 'எனைத் தொன்றுங் கள்ளாமை காக்க தன்னெஞ்சு.'

## 27. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்களில் வல்லினம் மிகுதற்குக் காரணம் எழுதுக:—

(1) 'நெளியராக் குருளை. (2) 'தில்லைச் சிந்தாமணி.' (3) 'கவிபாடிச் சிரிப்பிப்பரே.' (4) 'குறுகலரூர் நீங்கிற்புகச் செற்ற கொற்றவன்.' (5) 'சுரபித் தீம்பாலட்ட வின்னமுது.' (6) 'வெண்ணிறக் கஞ்சுகம்.' (7) 'முத்தம் மலைத் தேன் கொழி யாத் திகழும் பொழிற்கு.' (8) 'தில்லைச்சிற்றம்பலத்து மாணிக்கக் கூத்தன்.' (9) 'சோதீயினித் தான்றணியாயே.' (10) 'இணையிலி தொல்லைத் தில்லைமாதோ.' (11) 'வியன்மாத்தடக்கை.' (12) 'குழக்கன்றை யிழந்தலறுங் கோவுறு நோய் மருந்தாமோ.' (13) 'மழக் கை யிலங்கு பொற்கிண்ணம்.' (14) 'சோம்பித்திரி யேல்.' (15) 'மதிபாய் சடைமுடித்து மாசுணப் பைம்பூட்டுச்—சதிபாய் குறுத்தாட்டுத் தான - நதிபா—யிருகவுட்டு முக்கட்டு கால்வாய்த் தெனுள்ள—முருகவிட்டு நின்றவொளி.' (16) 'கொண் மூச் சூல்கொண்ட வயிற்றைக் கீண்டு.' (17) 'நந்தித்தே விளை யாடல் செய்து. (18) 'சேதுக்கட்டி.'

## 28. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் வரும் குற்றிய லுகர ஈற்றுப்புணர்ச்சியை எடுத்துக்காட்டி, விதியோடு விளக்குக:—

(1) 'கோட்டுப் பூப்போல் மலர்ந்தது.' (2) 'நாட்டியல் பதனை.' (3) 'ஆற்றொழுக்கரியாநோக்கம்.' (4) 'கருப்பு வில் லோன் மலரோ விருப்பு.' (5) 'வேத்தவை யிருந்தநீர்.' (6) 'பனிக்குமேனிலம.' (7) 'அற்புதத்தளையு மவிழ்ந்தன.' (8) 'குரக்கனத் தரசைக் கொல்லக் கூறிற்றே மனுநூலையா.' (9) 'கொன்றையந்தார் தணந்து வேப்பந்தொடை முடித்து.' (10) 'இருப்புநெஞ்ச வஞ்சனேனை.' (11) குரக்கு மனத்துக் கொடியோன்.' (12) 'நூற்றுப் பத்து நுவன்ற தோன்முகன் - மூற்றைக் கையினன்' (13) 'அமுத தாரைக ளெற்புத் துளை தொறு மேற்றினன்.'

## 29. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள ணகர னகர ஈற்றுப் புணர்ச்சியை எடுத்துக் காட்டி, விதியோடு விளக்குக:—

(1) 'பட்பகையாகுந் தீஞ்சொற் கடைசியர்.' (2) 'மட்புலந் திசை வான் புதைபூழி.' (3) 'கண்கெட்டவூரேறாய்.' (4) 'குவளை நீலங் கட்பகையாகு மென்றும்.' (5) 'களைபவோ கண் குத்திற் றென்று தங்கை' (6) 'புன்கணீர் பூசறரும்.' (7) 'மிக்க வானகணை விடு படை.' (8) 'மாண்டோய் துயர் நீத்தளித்தோய் நீ.' (9) 'தன்னைத் தான் காக்கிற் சினங்காக்க.' (10) 'விண்டலங் கலந்திலங்கு திங்கள்.' (11) 'சேணிமிர் வரைக்குலம்.' (12) 'இருந்தனனின்ற வேந்தனே' (13) 'விக்குண்மேல் வாராமு னல்வினை-மேற் சென்று செய்யப்படும்.' (14) 'எயின் சிறு மகளிர் (15) 'சிற்பிரிந்தஞ்சி.' (16) 'ஊண் புக்க வேற்காளி.' (17) 'அடியவர்கடற்சூழ.'

## 30. அப்பியாசம்.

மேல் வரும் தொடர்மொழிகளில் உள்ள மகரவீற்றுப் புணர்ச்சியை எடுத்துக்காட்டி விதியோடு விளக்குக:—

(1) 'அறவாழியந்தணன்.' (2) 'ஆலயந் தொழுவது சாலவு நன்று.' (3) 'இனந்தீதெனினு மியல்புடையார் கேண்மை-மனந் தீதாம் பக்க மரிது.' (4) 'இருவரேம் பாட்டுங்கேட்டு.' (5) 'தோயுநிலத்தடி.' (6) 'அருங்கடி மணம் வந்தெய்த.' (7) 'நீரி லெழுத்தாகும் யாக்கை.' (8) 'முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்.' (9) 'போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே.' (10) 'ஞானக் கரும்பின் றெளியை.' (11) வட்டமலர்க் கொன்றை மாலைபாடி.' (12) 'நீலவுருவிற்குயிலே.' (13) 'கிஞ்சுகவாயஞ்சுகமே.' (14) 'வேதநூலொரு மருங்கினும்.' (15) 'உவரி சூழ்ந்த பாரெலாம் பாயல்.'

## 31. அப்பியாசம்.

மேல் வரும் தொடர்மொழிகளில் உள்ள ய ர ழ வீற்றுப் புணர்ச்சியை எடுத்துக்காட்டி விதியோடு விளக்குக:—

(1) 'திருவளர் தாமரை.' (2) 'செந்தார்ப்பொழில் புடைசூழ்.' (3) 'தளிர்க்கை.' (4) 'மென்மொழியாள் கேழ் கிளரும் பாதியனை.' (5) 'தில்லை வாழ் கூத்தா.' (6) 'திண்ணமே யாண்டாய் சிவபுரத் தரசே.' (7) உருளாய மோவாது கூறிற் பொரு

ளாயம் - போஒய்ப் புறமே படும்.' (8) 'சிவந்தவாய்க் கருங்கயற் கணுன்.'

## 32. அப்பியாசம்.

மேல் வருந தொடர்மொழிகளில் உள்ள ல ள ஈற்றுப் புணர்ச்சியை எடுத்துக்காட்டி விதியோடு விளக்குக:—

(1) 'கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்' (2) 'ஞாயிறு கடற்கண்டா அங்கு.' (3) 'செல்வத்துட் செல்வஞ் செவிச் செல்வம்.' (4) 'வானணி மழுங்கிட மடங்கி.' (5) 'எம் மண்ண திருவிளையாட்டு.' (6) 'அமர்செயக் கற்சிறை குறைத்த வன்.' (7) 'நங்கணுதனு நந்தி தவஞ்செய்து.' (8) 'அண்ணருள் சிந்தியாவுணர்ந்து.' (9) 'தோட்கொண்ட நீற்றனும்.' (10) 'தக டீர் பெருஞ் செல்வம்' (11) 'இற்பூட்டிப் போயினர்.' (12) 'அனல்காலொடப்பானவனே.' (13) 'செந்நெற்பசுங்கதிர்.' (14) 'நெற்கரும்பெனக் கரும்பெலா நெடுங்கமு கென்ன.' (15) 'புன்னுனி மேனீர்போ னிலையாமை யென்றெண்ணி யின் னினியே செய்க வறவினை.' (16) 'கற்றூண் பிளந்திறுவ தல் லாற் பெரும்பாரந்தாங்கிற் றளர்ந்து வளையுமோ தான்.' (17) 'வேனெடுங் கண்ணாய்.' (18) 'ஒன்றுணர்ந்து கிற்பாரே நீணெறிச் சென்றார்.' (19) பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா பிற்பகற் றாமேவரும்.' (20) 'மக்கண் மெய்தீண்டல்.' (21) 'இலங்கலை நூன்மார்பன்.'

## 33. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் "இடையுரி வட சொலின்" என்னுஞ் சூத்திரவிதிப்படி அமைக்கப்படும் புணர்ச்சிகளை எடுத்துக் காட்டி விளக்குக:—

(1) 'தேவர்கோ வறியாத தேவதேவன்.' (2) 'காதல முற் றொளிர் நெல்லி' (3) 'ஆன்படுநெய் பெய் கலனுள்.' (4) 'மலர்க் கமல பாதனே.' (5) 'இகபரமாகி யிருந்தவனே. (6) 'வானா களித்திருந்தேன்' (7) 'தலைவனை நனிகாணேன்.' (8) 'பசுபாச மறுத்தருளி.' (9) 'முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே.' (10) 'அருமந்த தேவாயன் திருமாற்கரிய சிவம்.' (11) 'தெளி

வளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே.' (12) 'கடிகா நீங்கிச் சிந்தையி லருளோடேக.' (13) 'மழ களிறு.' (14) 'கமஞ்சூன் மாமழை.'

## 34. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் "ஒற்றுயிர் முதலீற் றுருபுகள்" என்னுஞ் சூத்திரத்தை விளக்கும் உதாரணங் களை எடுத்துக்காட்டி அவ்வுதாரணங்களில் இன்ன இன்ன உருபு இன்ன இன்ன சூத்திரவிதிப்படி புணர்ந்தது என்று விரித்தெழுதுக:—

(1) 'சித்தத்துட் டித்திக்குந்தேனே.' (2) 'அகறே யார் மாட்டு நில்லாது செல்வம்.' (3) 'என்னுளிருட் பிழம்பற.' (4) 'அருந்தவர்க்கரசா யாலின்கீ ழிருந்த வம்பலவா.' (5) 'தன்னைத் தான் காதல னாயின்.' (6) 'மனத்துக்கண் மாசில னாதல்.' (7) 'உன்னடிக்கீழ தென்னுயிரே.' (8) 'மாலயற்கரிய நாதன்.' (9) 'இறைப்பொழுதின்கட் கூடி.' (10) 'விசும்பிற்றுளி வீழின்.' (11) அண்டவானவர்கட் கெட்டா வருட்கழல்.

## 35. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் இன்ன இன்ன சாரியை இன்ன இன்ன புணர்ச்சியில் வந்தது என்றும், இன்ன இன்ன புணர்ச்சி சாரியை வாராப் புணர்ச்சி என்றும், எழுதுக:—

(1) 'கற்பகத்தின் புதியபூமழை.' (2) 'திங்களங் குழவி யென்ன.' (3) 'பந்தினை யிளையவர் பயிலிடம்.' (4) 'கொதிக்கும் வெம்மையை யாற்றுவான் போல்.' (5) 'பொற்கதவங்க டிறக் கும்.' (6) 'பதிற்றுப்பத்தந்தாதி.' (7) 'செல்வத் தோன்றியக் கால்.' (8) 'அவற்றவற் றினக்குறில் குறியே.' (9) 'களியானையி னீருரியாய்.' (10) 'தொல்லையின் முராரி தன்பாற் றோன்றிய விதனும்.' (11) 'தில்லை மெல்லங் கழிசூழ் கண்டலையே.' (12) 'என் முன்னைத் தவத்தால்.' (13) 'கூட்டி னுய்க்குங் குரீஇக் குழாமரோ.' (14) 'தண்ணந் தாமரைத் தாளென.' (15) 'விசும்பினுக் கேணி நெறி யன்ன.' (16) 'என்றுதை

தாதைக்கு மெம்மனைக்குந் தம்பெருமான்.' (17) 'மான்முதல் வானர்க் கப்பாற் செலவு.' (18) 'ஒருங்கு நீண்டக் கடைத்தும்.' (19) 'கூத்தனை நாத்தழும்பேற வாழ்த்தி.' (20) 'நுங்குருன் றிட்டன்ன.' (21) 'வலைத்தலை மானன்ன நோக்கியர்.' (22) நல்லாரிடைப்புக்கு.' (23) 'பிண்டிக் கண்ணார் நிழற்கீ ழெந்தமடிகள்.' (24) 'கடல்வாயமுது.'

## 36. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் 'இயல்பின்விகாரமும்' என்னும் புறனடைச் சூத்திரத்தால் அமைக்கப்படும் புணர்ச்சிகளை எடுத்து விளக்குக:—

(1) 'கற்றை வை கலாந்து தூற்றி.' (2) 'அட்ட மணல் கொட்டும்.' (3) 'இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி.' (4) 'விண்குத்துநீள் வரை வெற்ப.' (5) 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணி.' (6) 'எந்தை தாள் பணிந்து.' (7) 'கொண்டல் கிழித் தெழுவாயி னீங்கி.' (8) 'உறுகர்த் தாங்கிய மதனுடை நோன்றாள்.' (9) துன்னருங் கேளிர் துயர் களையான்.' (10) 'படைப்போற் படைக்கும் பழையோன்.' (11) 'சுடலை சேர்வது சொற் பிரமாணமே.' (12) 'தந்தை தாய்பேண் (13) 'ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்.'

## 37. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் வேற்றுமையிடத்து வரும் இயல்பு புணர்ச்சி எச்சூத்திரத்தால் அமைக்கப்படும்:—

(1) 'மலரடி நிழல்புக்கொன்றி.' (2) 'பொன்னடி பணிந்து தம்மூர் போகுவா ரினைய சொல்வார்.' (3) 'காடுபோந்தன னிந்திரன்.' (4) 'வரை பாய் வருடை.' (5) 'துன்பக் கடலில் வீழ்ந் திருக்கை புக்கான்.

## 38. அப்பியாசம்.

மேல் வரும் வடமொழிகளை வடநூல் விதிப்படி புணர்த்துக:—

## 39. அப்பியாசம்.

சரண + அரவிந்தம், சிவ + அனுபூதி, தாம + உதரன், உமா + ஈசன், ஞான + ஆகரன், மகா + ஆனந்தம், வல + அரி, விக்கின + ஈசுரன், வேத + அரணியம், பர + ஐக்கியம், தாரக + அரி, சந்திர + உதயம், கட + ஆகாசம், மகா + ஓடதி, சுயம்பூ + உபதேசம், சதா + ஏகரூபம், ரமா + ஔதாரியம், கங்கா + ஓகம், சின + இந்திரம், சபா + ஈசன், பரம + ஈசுரன், மகா + உற்சவம், அந்திய + இட்டி, விரத + உத்தியாபனம், இரத்தின + ஆபரணம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள புணர்ச்சி வழுக்களைத் திருத்தி, அந்தத் திருத்தங்களுக்கு நியாயம் எழுதுக:—

பொய் மொழி, இயல்புப் புணர்ச்சி, வரகுச்சோறு, உருபுப் புணர்ச்சி, ஆத்தீண்டுக் குற்றி, அருணாசலம்பிள்ளை வந்தான், செய்சிறைந்த சாடி, கை முதல், மெய் முனி, பிடித்துகொண்டுப் போனான், பசுபதியாபிள்ளை தந்தான், இஃது வென் தந்தைப் புத்தகம், பலாமரம், திருநீறு வெடுத்து தரித்தான், இதையுன் பிதாதந்தான், என்னை யங்கே வர சொன்னான், மிக பேசினான், எங்கு சென்றாய், அவன் யாண்டு சென்றான், ஈட்டுச்செல்வம், சுக்கு தா, என்னை வைதுக்கொண்டுபோனான், மாக் காய், வேம்புப் பூ, படித்து தெளிந்தப் பிள்ளை, வெளுத்தப் புடைவை, நல்லச் சரீரம், அங்கே போயினக் குதிரைகள், கீரை கறி, புழை கை யானை, அவனொடுச் சென்றேன், இருக்காதையு மறுத்தான், தினத் தாள்கள், என்னுடையத்தலை, அவனை யன்றுக் கண்டேன், காவேரியாறு சலமெடுத்து கொண்டுவா, சமட் பள்ளி, நன்னூற் படித்தான், நாய்ப் பிடித்தான், வேற்றொட்டான், மட்சுமந்தான், தமிழ்ப் படித்தான், சேதின் மூழ்கினேன், தழைவிரி கடுக்கை மாலை தனிமுதற் சடையிற் சூடும் குழவி வெண்டிங்கள்.

## 40. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள ஆகுபெயர்களை எடுத்துக் காட்டி, அவைகளுள் இன்னது இன்னது இன்ன இன்ன ஏதுவால் இன்ன இன்ன ஆகுபெயரென்றெழுதுக:—

(1) 'ஆத்திசூடி யமர்ந்த தேவனை.' (2) 'கார்த்திகை பூத்தது." (3) 'வெள்ளை வந்தது.' (4) 'நெஞ்சு நொந்தது.' (5) 'அவன்மொழி யுணர்ந்தான்.' (6) 'நுண்மை நுகரேல்.' (7) 'ஆம்பனூறுந் தேம்பொதி கிளவி.' (8) 'வடிவேற் கரத்தோனைத் தோகையாய் நின்று சுமக்குதியோ தோன்றலோ.' (9) 'திருவாய்மொழி யோதினான்.' (10) 'புழுக்கலுண்டான்.' (11) 'தோகை வந்தாள்.' (12) 'புறங்கொடை யறியா மறந்திகழ் வேலோன்.' (13) 'இந்நூல் பாட்டியல்.' (14) 'விசும்பிற்றுளி வீழின்.' (15) 'மோப்பக் குழையுமனிச்சம்' (16) 'தேசத்தோடொத்துவாழ்.' (17) 'துலாக்கோல்.' (18) 'மருந்தேயாயினும் விருந்தோ டுண்.' (19) 'தழை விரி கடுக்கை மாலை.' (20.) 'சுரும்புறு நீலங் கொய்யல்.' (21.) 'குழலினிது யாழினிதென்ப.' (22) 'இவ்வீடைம்பதடி.' (23) இவ்வெண்ணெயுழக்கு.' (24) 'அரைஞாண்.' (25) ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.'

## 41. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் உள்ள இரண்டாம் வேற்றுமைக்குப் பொருள் எழுதுக:—

(1) 'மரத்தை வளர்த்தான்.' (2) 'தேரையூர்ந்தான்.' (3) 'கயிற்றைபறுத்தான்.' (4) 'எயிலை யிழைத்தான்.' (5) 'குழையை உடையன்.' (6) 'தந்தையை நிகர்த்தான்.' (7) 'காசியைச் சார்ந்தான்.' (8) 'மனைவியைக் காதலித்தான்.' (9) 'கோயிலைக் கட்டினான்.' (10) 'புதல்வரைப் பெற்றான்.' (11) 'நூலைக் கற்றான்.' (12) 'பணத்தை எண்ணினான்.

## 42 அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள மூன்றாம் வேற்றுமைகளுக்குப் பொருள் எழுதுக:—

(1) 'தாயொடு வந்த மகள்.' (2) 'பொன்னானியன்றபணி.' (3) 'எள்ளொடு விராய வரிசி.' (4) 'அரசன் றச்சனாற் றேர்செய்வித்தான்.' (5) 'அறத்தான் வருவதே யின்பம்.' (6) 'பாணத்தாற் கொன்றான்.' (7) 'காதாற் செவிடன்.' (8) 'காவோ டறக்

குளந் தொட்டான்.' (9) 'அரிசியொடு பருப்பை யட்டான்.' (10) 'இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவன்.' (11) 'சூலொடு கழுதை பாரஞ் சுமந்தது.' (12) இன்சொலா லீத்தளிக்க வல் லாற்கு.'

## 43. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள நான்காம் வேற்றுமைக்குப் பொருள்கள் எழுதுக:—

(1) 'அந்தணனுக்காவை வழங்கினுன்.' (2) 'சோற்றிற் கரிசி.' (3) 'ஆடைக்கு நூல்.' (4) 'நட்டார்க்குக் காதலன்.' (5) 'அருமறை யந்தணற் குரித்து.' (6) 'தயிர்க்குப் பால்.' (7) 'ஈசற்கன்பன்.' (8) 'பிணிக்கு மருந்து.' (9) 'கரும்பிற்கு வேலி.' (10) 'கடிசூத்திரத்துக்குப் பொன்.' (11) 'கூழிற்குக் குற்றேவல் செய்தான்.' (12) 'அவற்குத் தக்காளிவள்.' (13) 'உற் றூற்குரியர் பொற்றொடிமகளிர்.' (14) 'கல்விக் கழகு கசடற மொழிதல்.' (15) 'கன்றுக்குப் பால்போதும்.' (16) 'பழத்துக் குச் சென்றான்.' (17) 'நெல்லுக்கிறைத்தநீர்.' (18) 'நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு புல்லிதழ் பூவிற்கு முண்டு' (19) 'தன்னடிக் கிரண்டு கரங்கடந்தான்.'

## 44. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள ஐந்தாம் வேற்றுமைக்குப் பொருள்கள் எழுதுக:—

(1) 'விசும்பிற்றுளிவீழின்.' (2) 'தமரிற் றீர்ந்தான்.' (3) 'பந்தியம் புரவி நின்றும் பாரிடையிழிந்து.' (4) 'பொலன் முகட்டுயர் பொன்னெடுங் குன்றின்வீ ழருவி.' (5) 'தலைபி னிழிந்த மயிரனையர்.' (6) 'உப்பினைச் சான்றோர் விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்.' (7) 'கருவூரிற் கிழக்கு மருவூர்.' (8) 'சென்னையின் மேற்குக் காஞ்சி.' (9) 'கச்சியினின்றுங் கடலைங்காவதம்' (10) 'பாலின் வெளிதுகொக்கு.' (11) 'அளிக்கு மன்னரிற்பொன்மழை வழங்கின வருவி.' (12) 'அறத்தினூஉங் காக்கமுமில்லை.' (13) 'நல்லார்கட்பட்ட வறுமையி னின்னாதே -

கல்லார்கட்பட்ட திரு.' (14) 'நாயிற் கடைப்பட்ட நம்மை.' (15) 'வில்விற்புரமூன்றெரித்தான்.'

## 45. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள ஆறாம் வேற்றுமைக்குப் பொருள் எழுதுக:—

(1) 'நிலத்ததகலம்.' (2) 'யானையதுகோடு.' (3) 'சாத்தனது செலவு.' (4) 'பாலினதுவெண்மை.' (5) 'சாத்தனது தோட்டம்.' (6) 'புலியதுகிர்.' (7) 'எள்ளது குப்பை.' (8) 'வெள்ளியதாட்சி.' (9) 'சங்கினது சுண்ணாம்பு.' (10) 'கொற்றனது பாட்டு.' (11) 'விலங்குகளினது குழாம்.' (12) 'சாத்தனது வில்.' (13) 'சனியது வாரம்.' (14) 'எள்ளது சாந்து.' (15) 'அருளாய் சுருங்க வெமதொல் வினையே.' (16) 'நுன கழவிணை.' (17) 'எனது தலை.' (18) 'தனதெயில்.'

## 46. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் ஏழாம் வேற்றுமையிலே பொருண் முதலிய ஆறனுள் இன்னது இன்னது இன்ன இன்ன கிழமைப் பொருளுக்கிடமாயிற்றென் றெழுதுக:—

(1) 'ஊரின்கட் குளம்.' (2) 'வருடத்தின் கண் மாதம்.' (3) 'மரத்தின்கட்காக்கை.' (4) 'மார்பின்கட் பதக்கம்.' (5) 'விரற்கண் மோதிரம்.' (6) 'நெற்றியின் கண் விழி' (7) 'சித்திரைக்கண் மல்லிகை மலர்ந்தது.' (8) 'பாலின்கட் சுவை.' (9) 'நாளின்கண் வைகறை' (10) 'கடற்கணுவாயோடுகின்றது.' (11) 'தீயின்கட்சூடு.' (12) 'மனத்துக்கணுணர்வு.' (13) 'கூத்தின்கணபிநயம்.' (14) 'எள்ளின்கணெய்.

## 47. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள உருபு மயக்கங்களை எடுத்துக் காட்டுக:—

(1) 'ஈசற்கியான் வைத்தவன்பினகன்று.' (2) 'வாய் மெய் சிந்தைதானரனடிக்கே செலுத்தினர்.' (3) 'பற்றி விடாஅ விடும்பைகள் பற்றிணைப் பற்றி விடாஅதவர்க்கு.' (4) 'மாந்தருறை

நிலத்தோ டொட்டலரிது.' (5) 'நின்றுணையடிககே புய்க்கு மருந் தவரிவரென்றறியாமையொறுத்தேனே.' (6) 'அவரைச்செறூஅ ரெனச் சேறியென் னெஞ்சு.' (7) 'இல்லை தவறவர்க்காயினும்.' (8) 'புலியூரம் பலவற்குற்ற பத்தியர்.' (9) 'கருங்கயற்கண்ணி ஞாளை யேதமொன் றின்றிப் பூம்பட் டொந்திர வெழினிவீழ்த் தார்.' (10) 'பூங்கழலானடிக் கெய்துகேனருளாயென் றிறைஞ்சி னன்.' (11) 'முனைவனுக்கிறைஞ்சினன் முருகவேளனன்.'

## 48. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ளபெயரெச்சங் களை எடுத்துக்காட்டி, இன்னது இன்ன வாய்பாட்டு இன்ன காலப் பெயரெச்சம் அது அறுவகைப்பெயர் முதலியவற் றுள் இன்ன பெயர் கொண்டது என்றெழுதுக:—

(1) 'வாழுமில்.' (2) 'கற்குநூல்.' (3) 'துயிலுங்காலம்.' (4) 'வளையுங்கோல்.' (5) 'ஓதும் பார்ப்பான்.' (6) 'கற்குங் கல்வி.' (7) 'புக்கசாலை.' (8) 'தின்றகனி' (9) 'வந்தநாள்.' (10) 'வென்றவேல்.' (11) 'ஆடிய கூத்தன்' (12) 'போயின போக்கு.' (13) 'நோய் தீருமருந்து' (14) 'நோய்தீர்ந்தமருந்து.' (15) 'அரசன் ஆகொடுக்கும் பார்ப்பான்.' (16) 'அரசன் ஆ கொடுத்த பார்ப்பான்.' (17) 'ஆடையொலிக்குங் கூலி' (18) 'ஆடையொலித்த கூலி.' (19) யாணிறங்கிய திண்ணை.' (20) 'வழி நடந்த வேர்வை.' (21) 'படத்த பாம்பு.' (22) 'நெடிய வில்.' (23) 'பெரிய களிறு.' (24) 'முகத்தயானை.'

## 49. அப்பியாசம்.

மேல் வருந் தொடர்மொழிகளில் உள்ள வினையெச்சங் களை எடுத்துக்காட்டி, இன்னது இன்ன வாய்பாட்டு இன்ன கால வினையெச்சம் அது தன் கருத்தாவின் வினை பிற கருத்தாவின் வினை என்பனவற்றுள் இன்ன வினை கொண் டது என்றெழுதுக:—

(1) 'எண்ணித் துணிக கருமம்.' (2) 'கல்லாக்கழிப்பர்தலை யாயார்.' (3) 'புணர்தருசெல்வந் தருபாக்குச் சென்றான்.' (4) 'காணிய வாழி தோழி.' (5) 'படுமகன் கிடக்கை காணூஉ

வின்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே." (6) 'பரிஇயுயிர் செருக்கும்.' (7) 'மோப்பக் குழையுமனிச்சம்.' (8) 'சோலை புக்கென வெப்ப நீங்கிற்று.' (9) 'இம்மலரை மோப்ப வெடுத்தேன்.' (10) 'உண்டெனப் பசிகெட்டது.' (11) 'மழைபெய்யிற் குள நிறையும்.' (12) 'மழை பெய்தன மரங் குழைத்தது.' (13) 'மெய் யுணரின் வீடெளிதாம்." (14) 'மருந்து தின்றெனப் பிணி நீங்கிற்று.' (15) 'மழை பெய்யக் குளநிறையும்.' (16) 'பசித்தெனப் புலி புன்மேயாது.' (17) 'மாரிபெய்தென முல்லை மலர்ந்தது.' (18) 'யானுண்ணினுவப்பேன்.' (19) 'அவர் காணிய வம்மின்.' (20) 'நாம் வாழியரெய்தினம்.' (21) 'நாம் வாழியரிரும் பொருளளித்தனர்." (22) 'விருந்தின்றி யுண்டபகல்.' (24) 'நன்னெனினதடியாரோடல்லால்.'

## 50. அப்பியாசம்

மேல்வருந் தொடர்மொழிகளிலே சினைவினை முதல் வினையோடு முடிவனவற்றை எடுத்து விளக்குக:—

(1) 'பீலி பெய் சாகாடுமச்சிறும்.' (2) 'சிந்திக் கலாபமயிற் கண்கள் சிவந்து போனர்.' (3) 'கண்ணேடியைந்து கண்ணேடாதவர்.' (4) 'மின்னினன்ன புருவமும் விண்ணினைத்—துன்னுதோளுமிடந் துடியாநின்றான்." (5) 'மாடு காலிற்று வீழ்ந்தது.' (6) 'ஈர்ங்கொடிமேற் புயலுளவேமலர் சூழ்ந்திருடேங்சிப் புரள் வனவே.'

## 51. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் உள்ள வினையெச்சத் திரிபுகளை எடுத்து விளக்குக:—

(1) 'கறந்த பாலினுட் காசிறிருமணி—நிறங்கிளர்ந்து தன் னீர்மை கெட்டாங்கு' (2) 'சுங்குல் போய் நாட்கடன் கழிந்த தென்பவே.' (3) 'நெடுங்கயிற்றூசல் பரிந்து கலுழ்காலை.'

## 52. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் எச்சமாய் வந்த முற்றுக்களை எடுத்து விளக்குக:—

(1) 'பயன்றூக்கார் செய்தவுதவி நயன்றூக்கின்.' (2) 'அறன் வரையா னல்ல செய்ினும்.' (3) 'கொல்லான் புலாலை மறுத் தானை.' (4) 'நெஞ்சிஃ றறவார் துறந்தார்போல் வஞ்சித்து—வாழ் வாரின் வன்கணூரில்.' (5) 'விண்ணின்று பொய்ப்பின்.' (6) 'பெருவேட்கையே னெற் பிரிந்து.' (7) 'உச்சிக் கூப்பிய கையினர் தற் புகழ்ந்து.' (8) 'அஞ்சாயலளாயிழைமூன்.' (9) 'தொடுமரைத் தோலன் வில்லன் மரவுரி யுடையன் ரேன்ற.' (10) 'வினைவேட்டையீர் வீரர் வம்மின்.' (11) 'கடற்றூனையர் கழல் வேந்தரை.' (12) 'கொடியைப் பார்த்தனர் வேர்த்தனர் வானவர் குலைந்தார்.' (13) 'அடுத்தனை யுதவவேண்டும்.'

## 53. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் உள்ள ஏகார இடைச் சொற்களுக்குப் பொருள் எழுதுக:—

(1) 'ஆதிபகவன் முதற்றே யுலகு' (2) 'யானை மருமம் பாய்ந் தொளித்ததே. (3) 'சுடலை சேர்வது சொற்பிர மாணமே.' (4) 'அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை.' (5) 'அறத்தான் வருவதே யின்பம்.' (6) 'ஒறுத்தாரை யொன்றூக வையாரே.' (7) 'வறியார்க்கொன் றீவதே யீகை' (8) 'நன்றே தரினு நடு விகந்தா மாக்கத்தை—யன்றே யொழிய விடல்.'

## 54. அப்பியாசம்.

மேல்வருக் தொடர்மொழிகளில் உள்ள ஓகார இடைச் சொற்களுக்குப் பொருள் எழுதுக:—

(1) 'அன்பிற்கு முண்டோ வடைக்குந் தாழ்.' (2) 'வித்து மிடல்வேண்டுங் கொல்லோ.' (3) 'யானோ தேறேனவர் பொய் வழங்கலரே' (3) 'திருமகளோவல்லள் அரமகளோவல்லள் இவள்யார்.' (5) 'மழை முழக்கொடு மாறுகொண் டொலித்தன மாதோ.' (6) 'அணியன்றே நாணுடைமை சான்றோர்க்கஃ தின் றேற்—பிணியன்றே பீடு நடை' (7) 'அம்பலக் கூத்தனைத் தினைத்தனைப்பொழுதும் மறந் துய்வனோ.'

## 55. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் உள்ள என, என்று என்னும் இடைச்சொற்களுக்குப் பொருள் எழுதுக:—

(1) 'துண்ணெனத் துடித்தது மனம்.' (2) 'கார் வருமெனக் கருதினோர்ந்தாள்.' (3) 'பச்சென்று பசந்தது.' (4) 'நரைவரு மென் றெண்ணி.' (5) 'பாரியென்றொருவனுளன்.' (6) 'ஏயெனப் பூதமொன் றெழுந்ததாமரோ.' (7) 'எனதெனதென்றிருக்கு மேழைபொருளை.' (8) சளசளவென மழை தாரை கான்றன.' (9) 'பொருக்கெனவெழுந்து தம் புரையுள் புக்கனர்.' (10) மெல்லென நடந்தது.' (11) 'முழுவதூஉங் கற்றனமென்று களியற்க.' (12) 'ஒல்லென்றொலிக்குமொலி புனலூரற்கு.'

## 56. அப்பியாசம்.

மேல்வருந்தொடர்மொழிகளில் உள்ள உம்மையிடைச் சொற்களுக்குப் பொருள் எழுதுக:—

(1) 'நெடுங் கடலுந் தன்னீர்மைகுன்றும்.' (2) 'அன்பிற்கு முண்டோ வடைக்குந் தாழ்' (3) 'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம்.' (4) 'நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை—யன்றே யொழிய விடல்.' (5) 'எல்லார்க்கு நன்றாம் பணிதல்.' (6) கல்லாதவரு நனி நல்லர்' (7) 'கற்றிலனாயினுங் கேட்க.' (8) 'நயனில சொல்லினுஞ் சொல்லுக' (9) நெடியனுமாயினான்.

## 57. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் மன்னிடைச் சொல் எவ்வெப் பொருளில் வந்தது—

(1) 'மன்னுயி ரெல்லாந் தொழும்.' (2) துறப்பார் மற்றுப் புரவில்லார்.' (3) 'உள்ளிய செய்த லெளிது மன்.' (4) கனவினு மின்னாது மன்னோ.' (5) 'சசதப மிகும் விதவாதன மன்னே.' (6) 'ஊடுகமன்னோ வொளியிழை' (7) 'கண்டது மன்னுமொருநாள்.' (8) 'உள்ளுவன் மன் யான்.'

## 58. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் மற்றிடைச் சொல் எவ்வெப் பொருளில் வந்தது.

(1) கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே—யெடுப்பதூஉ மெல்லாமழை.' (2) 'அன்றறிவாமென்னு தறஞ் செய்க (மற்றது)—பொன்றுங்காற் பொன்றாத் துணை.' (3) 'விசும்பிற் றுளிவீழி னல்லான் மற்றாங்கே—பசும்புற் றலைகாண் பரிது.' (4) 'மற்றை யண்டமுந் தன்பெயரே சொல வாழ்ந்தான்.' (5) 'இடர் பெரிது முடையேன் மற்றென் செய்கேனென் செய்சேன்.' (6) 'மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமே மனம் பாவித்தேன்.'

## 59. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் மற்றிடைச் சொல் எவ்வெப் பொருளில் வந்தது:—

(1) 'இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது—பின்றையே நின்றது கூற்றம்.' (2) 'என்னின் வேறாக்கியர் யாண்டையார் கொலோ.' (3) 'ஆசைநோய்க்கு மருந்துமுண்டாங் கொலோ.'

## 60. அப்பியாசம்.

மேல்வருந் தொடர்மொழிகளில் உள்ள இடைச்சொற்களை எடுத்துக் காட்டி, அவற்றிற்குப் பொருள் எழுதுக:—

(1) 'அந்தில்விற் பயிற்றுந் தானம் வழிபட வாங்குச் சென்றாள்.' (2) ஊடலிலுண்டாங் கோர்துன்பம்.' (3) 'மண்ணிடங் கொண்டயானை மணிமருப் பிடையிட்டம்ம.' (4) வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்—கனைவரைய மாராய்வ தொற்று.' (5) 'செறிகவின்றம்ம திருவொடும் பொலிந்தே.' (6) 'பிடவமுங் களவு மொடுகிறை பூப்ப.' (7) 'அம்ம மற்றதனை யோரீர்.'

---

# இலக்கணவமைதி

இலக்கணங் கற்றவர், இலக்கியத்தில் அவ்விலக்கணம் அமைந்து கிடக்குமுறைமையை ஆராய்ந்து விதியோடு கூறப் பயிலல்வேண்டும். அது செய்யப் பயிலாவிடத்து, இலக்கணநூற் கல்வியால் ஒருபயனும் இல்லை.

வாக்கியத்திலாயினுஞ் செய்யுளிலாயினும் இலக்கண வமைதி கூறுதல் ஆறுவகைப்படும்:—

(1) பதங்களைப்பிரித்து, இது பகாப்பதம் இது பகுபதம் என வகுத்துப், பகுபதங்கள் பகுதி முதலிய உறுப்புக்களான் முடிந்தமை கூறுதல்.

(2) பதங்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்குநிலையை நோக்கி, இது வேற்றுமை வழியில் இன்னதொடர், இது அல்வழியில் இன்ன தொடர் எனக் கூறுதல்.

(3) பதத்தோடு பதமும் பதத்தோடு உருபும் புணர்ந்து நின்ற முறைமையைச் சூத்திரவிதியோடும் எடுத்துக் கூறுதல்.

(4) ஒவ்வொரு சொற்கும் இலக்கணமும் முடிக்குஞ் சொல்லுங் கூறுதல்.

(5) முக்கியமாகிய எழுவாயையும், பயனிலையையும் செயப்படுபொருள் உண்டாயின் அதனையும், எடுத்துக் காட்டி, அதததனை விசேடித்து நிற்கும் விசேடணத்தை விளக்குதல்.

(6) முக்கியமாகிய பயனிலையை எடுத்துக் கூறி, அதனைத் தொடர்ந்து வரும் பதங்கள் ஒன்றையொன்று அவாவி நிற்கு நிலையை வினாவிடைகளான் இனிது விளக்குதல்.

---

# பகுபதமுடிபு

## பெயர்ப்பகுபதம்

**அவன்** என்னுஞ் சுட்டுப்பொருட் பெயர்ப்பகுபதம், அ என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, "எகர வினாமுச் சுட்டின் முன்னர்." என்னுஞ் சூத்திரவிதியால் இடையில் வகரமெய் தோன்றி, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அவ்வகர மெய்யின்மேல் விகுதி அகர வுயிரேறி, முடிந்தது.

**நமன்** என்னுங் கிளைப்பொருட்பெயர்ப் பகுபதம், தாம் என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, "தான்றாமாமுதல் குறுகும்" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதி முதல்குறுகி, "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இறுதி மகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**பொன்னன்** என்னும் பொருட்பெயர்ப்பகுபதம், பொன் என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, "தனிக்குறின் முன்னொற்றுயிர்" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதியீற்று னகரமெய் இரட்டித்து "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இரட்டித்த னகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**நிலத்தன்** என்னும் இடப்பெயர்ப்பகுபதம், நிலம் என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, பதமுன் விகுதியும் பதமு முருபும் புணர்வழி" என்னுஞ் சூத்திரவிதியால் அவைகளுக்கு இடையே அத்துச்சாரியை தோன்றி, "மவ்வீ றொற்றழிந்துயிரீ றொப்பவும்" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதியீற்று மகரமெய் கெட்டு அகரவுயிரீறாகநின்று, "அத்தினகர மகரமுனையில்லை" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியையின் முதல் அகர வுயிரும் "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியையீற் றுகரமுங் கெட்டு, "உடன்மேலுயிர்வந்து"

என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற தகரமெய்யின் மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**பிரபவன்** என்னும் காலப்பெயர்ப்பகுபதம், பிரபவம் என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, 'ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே" என்னுஞ் சூத்திர விதியாற் பகுதியீற்று அம் குறைந்து வகரமெய்யீறாக நின்று, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அவ்வகர மெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**திணிதோளன்** என்னுஞ் சினைப்பெயர்ப் பகுபதம், திணி தோள் என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, "உடன்மேலுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதியீற்று ளகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**நல்லன்** என்னுங் குணப்பெயர்ப் பகுபதம், நன்மை என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, "ஈறுபோதல்" என்னும் விதியாற் பகுதியீற்று மை விகுதி கெட்டு நல் என நின்று, "தனிக்குறின் முன்னொற்று" என்னுஞ் சூத்திரவிதியால் லகரமெய் இரட்டித்து, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இரட்டித்த லகரமெய்யின்மேல் விகுதி அகர வுயிரேறி, முடிந்தது.

**கரியன்** என்னுங் குணப்பெயர்ப்பகுபதம் கருமை என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று, "ஈறு போதல்" என்னும் விதியாற் பகுதியீற்று மைவிகுதி கெட்டு, "இடையுகர மிய்யாதல்" என்னும் விதியால் இடையுகரம் இகரமாகத் திரிந்து, "இ ஈ ஐவழி யவ்வும்" என்னுஞ் சூத்திரவிதியால் யகரவுடம்படுமெய் தோன்றி, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அம் மெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**செய்யன்** என்னும் குணப்பெயர்ப் பகுபதம், செம்மை என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் பெற்று,

"ஈறுபோதல்" என்னும் விதியாற் பகுதியீற்று மைவிகுதி கெட்டு, "முன்னின்ற மெய் திரிதல்" என்னும் விதியான் மகர மெய் யகர மெய்யாகத் திரிந்து, "தனிக்குறின் முன்னொற்று" என்னும் சூத்திரவிதியால் அவ் யகரமெய் இரட்டித்து, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இரட்டித்த யகர மெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**செவ்வியான்** என்னும் பண்புப்பெயர்ப்பகுபதம், செம்மை என்னும் பகுதியும், ஆன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே இகரச்சாரியையும் பெற்று, "ஈறு போதல்" என்னும் விதியாற் பகுதியீற்று மைவிகுதிகெட்டு, "முன்னின்ற மெய் திரிதல்" என்னும் விதியால் மகரமெய் வகரமெய்யாகத் திரிந்து "தனிக்குறின் முன்னொற்று" என்னுஞ் சூத்திரவிதியால் வகர மெய் இரட்டித்து, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இரட்டித்த மெய்யின்மேற் சாரியை இகரவுயிரேறி, "இ ஈ ஐவழி யவ்வும்" என்னுஞ் சூத்திரவிதியால் யகரவுடம்படுமெய் தோன்றி, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அம்மெய்யின்மேல் விகுதி ஆகாரவுயிரேறி, முடிந்தது.

**பாசி** என்னுங் குணப்பெயர்ப் பகுபதம், பசுமை என்னும் பகுதியும், இ என்னும் விகுதியும் பெற்று, "ஈறுபோதல்" என்னும் விதியாற் பகுதியீற்று மைவிகுதி கெட்டு, "ஆதி நீடல்" என்னும் விதியாற் பகுதி முதனீண்டு, "உயிர்வரினுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியாற் சகரமெய்யின்மேலுள்ள உகரங் கெட்டு, "உடன்மேலுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெடநின்ற சகரமெய்யின்மேல் விகுதி இகரவுயிரேறி, முடிந்தது.

**ஓதுவான்** என்னுந் தொழிற்பெயர்ப் பகுபதம், ஓது என்னும் பகுதியும், ஆன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே வகரஇடைநிலையும்பெற்று, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலை மெய்யின்மேல்

விகுதி ஆகாரவுயிரேறி, முடிந்தது. ஓதுதலுடையவன் என்பது பொருள்.*

**நன்மை** என்னும் பண்புப்பெயர்ப் பகுபதம், நல் என்னும் பகுதியும், மை என்னும் பண்புப்பெயர் விகுதியும்பெற்று, "மெலி மேவினணவும்" என்னும் விதியாற் பகுதியீற்று லகரமெய் னகர மெய்யாகத் திரிந்து, முடிந்தது.

**வருதல்** என்னுந் தொழிற்பெயர்ப்பகுபதம், வா என்னும் பகுதியும், தல் என்னுந் தொழிற்பெயர் விகுதியும் பெற்று, "வலித்தன் மெலித்தல்" என்னுஞ் சூத்திரத்துக் "குறுக்கல்" என்னும் விதியாற் பகுதி முதல் குறுகி, 'விரித்தல்' என்னும் விதியால் ரகரவுகரம் விரிந்து முடிந்தது.

**உடுக்கை** என்னுந் தொழிற்பெயர்ப்பகுபதம், உடு என்னும் பகுதியும், கை என்னுந் தொழிற்பெயர் விகுதியும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திர விதியால் விகுதிக் ககரமிகுந்து, முடிந்தது. உடுத்தல் என்பது பொருள்.

**உடுக்கை** என்னுஞ் செயப்படுபொருட்பெயர்ப் பகுபதம் உடு என்னும் பகுதியும் ஐ என்னுஞ் செயப்படுபொருள் விகுதியும் அவைகளுக்கு இடையே குச்சாரியையும் பெற்று, "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியைக் ககரமிகுந்து, "முற்றுமற் றொரோவழி" என்னும் விதியாற் சாரியையீற்றுகரங் கெட்டு "உடன்மேலுயிர் வந்து" என்னுஞ் சூத்திர விதியால் உகரங் கெடநின்ற ககரவொற்றின்மேல் விகுதி ஐகாரவுயிரேறி, முடிந்தது. உடுக்கப்படுவது என்பது பொருள்.

**தொல்காப்பியம்** என்னுஞ் செயப்படுபொருட் பெயர்ப் பகுபதம், தொல்காப்பியன் என்னும் பகுதியும், அம் என்னுஞ்

---

* ஓதுவான் என்பது எதிர்காலத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதமாயின், ஓது பகுதி; ஆன் விகுதி; வகரமெய் எதிர்கால இடைநிலை. எதிர்காலவினையெச்சப் பகுபதமாயின், ஓது பகுதி; வான் எதிர்கால வினையெச்ச விகுதி.

செயப்படுபொருள் விகுதியும் பெற்று, "ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதியீற்று அன் குறைந்து யகரமெய்யீறாக நின்று, உடன்மேலுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அவ் யகரமெய்யின்மேல் விகுதி அகர வுயிரேறி, முடிந்தது. தொல்காப்பியனாற் செய்யப்பட்டது என்பது பொருள்.

**எழுத்து** என்னுஞ் செயப்படுபொருட்பெயர்ப் பகுபதம், எழுது என்னும் பகுதியும், ஐ என்னுஞ் செயப்படுபொருள் விகுதியும் பெற்று, அவ்விகுதி கெட்டுக், கெட்டவிடத்துத் தகரவொற் றிரட்டித்து, முடிந்தது. எழுதப்படுவது என்பது பொருள், பாட்டென்பது முதலியனவும் இவ்வாறே முடிதலறிக.

**ஊண்** என்னுஞ் செயப்படுபொருட்பெயர்ப் பகுபதம், உண் என்னும் பகுதியும், ஐ என்னுஞ் செயப்படுபொருள் விகுதியும் பெற்று, அவ்விகுதி கெட்டுப் பகுதி முதனீண்டு, முடிந்தது. உண்ணப்படுவது என்பது பொருள். தீன், கோள், என்பன முதலியனவும் இவ்வாறே முடிதலறிக.

**காய்** என்னும் வினைமுதற்பொருட் பெயர்ப் பகுபதம், காய் என்னும் பகுதியும், இ என்னும் வினைமுதற்பொருள் விகுதியும் பெற்று, அவ்விகுதி கெட்டு, முடிந்தது. காய்ப்பது என்பது பொருள், தளிர், பூ, கனி, திரை, நுரை, அலை, என்பன முதலி யனவும் இவ்வாறே முடிதலறிக.

---

## வினைமுற்றுப்பகுபதம்

**உண்டான்** என்னும் இறந்தகாலத் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதம், உண் என்னும் பகுதியும் ஆன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே இறந்தகாலங் காட்டும் டகர இடைநிலையும் பெற்று, "உடன்மேலுயிர் வந்து" என்னுஞ் சூத் திரவிதியால் இடைநிலை டகரமெய்யின்மேல் விகுதி ஆகார வுயிரேறி முடிந்தது.

**உண்கின்றான்** என்னு நிகழ்காலத் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதம், உண் என்னும் பகுதியும், ஆன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே நிகழ்காலங் காட்டுங் கின்றிடைநிலையும் பெற்று, "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலையீற்று உகரங் கெட்டு, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற றகர மெய்யின்மேல் விகுதி ஆகாரவுயிரேறி, முடிந்தது.

**உண்ணுவான்** என்னும் எதிர்காலத் தெரிநிலைவினை முற்றுப் பகுபதம், உண் என்னும் பகுதியும், ஆன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்காலங் காட்டும் வகர இடைநிலையும் பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையே உகரச் சாரியையும் பெற்று, "தனிக்குறின் முன்னொற்று" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதியீற்று ணகரமெய் இரட்டித்தது, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இரட்டித்த ணகர மெய்யின்மேற் சாரியை உகரவுயிரேறி, இன்னும் அச்சூத்திர விதியால் இடைநிலை வகரமெய்யின்மேல் விகுதி ஆகாரவுயிரேறி முடிந்தது.*

**நடந்தனன்** என்னும் இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதம், நட என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே இறந்தகாலங் காட்டுந் தகர இடைநிலையும், இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையே அன் சாரியையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரமிகுந்து, "வலித் தன் மெலித்தல்" என்னுஞ் சூத்திரவிதியால் மிகுந்த தகரவல் லொற்று மெல்லொற்றாக விகாரப்பட்டு, "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரமெய்யின்மேற் சாரியை அகரவுயிரேறி, இன்னும் அச்சூத்திரவிதியாற் சாரியை யீற்று னகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

---

* உண்ணுவான் என்பது எதிர்காலவினையெச்சப் பகுபதமாயின், உண் பகுதி; உ சாரியை; வான் எதிர்கால வினையெச்ச விகுதி.

**வருகின்றனன்** என்னும் நிகழ்காலத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதம், வா என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும் அவைகளுக்கு இடையே நிகழ்காலங் காட்டுங் கின்றிடை நிலையும், இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையே அன் சாரியையும் பெற்று, "வலித்தன் மெலித்தல்" என்னும் சூத்திரத்துக் 'குறுக்கல்' என்னும் விதியாற் பகுதி முதல் குறுகி, 'விரித்தல்' என்னும் விதியால் ரகரவுகரம் விரிந்து, "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலையீற்றுகரங் கெட்டு, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங்கெட நின்ற றகர வொற்றின்மேற் சாரியை அகரவுயி ரேறி, இன்னும் அச்சூத்திரவிதியாற் சாரியையீற்று னகரமெய் யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**நடப்பான்** என்னும் எதிர்காலத் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதம், நட என்னும் பகுதியும், ஆன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்காலங் காட்டும் பகர இடைநிலையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைப் பகர மிகுந்து, "உடன் மேலுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைப் பகர மெய்யின்மேல் விகுதி ஆகாரவுயிரேறி, முடிந்தது.

**நடந்தது** என்னும் இறந்தகாலத் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதம், நட என்னும் பகுதியும், து என்னும் ஒன்றன்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே இறந்தகாலங்காட்டுந் தகர இடைநிலையும், இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையே அகரச் சாரியையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரமிகுந்து, "வலித் தன் மெலித்தல்" என்னுஞ் சூத்திரவிதியால் மிகுந்த தகரவல் லொற்று மெல்லொற்றாக விகாரப்பட்டு, "உடன்மேலுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரவல்லொற்றின்மேற் சாரியை அகரவுயிரேறி, முடிந்தது.

**நடப்பித்தான்** என்னும் பிறவினைப் பகுபதம், நட என் னும் பகுதியும் பி என்னும் பிறவினை விகுதியும் பெற்று, "இயல்

பினும் விதியினு னின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் விகுதிப் பகரமிகுந்து, அனைத்தும் ஒரு பகுதியாய் நின்று, ஆன் என்னும் ஆண்பால் விகுதியும், பகுதிக்கும் விகுதிக்கும் இடையே இறந்தகாலங் காட்டுந் தகர இடைநிலையும் பெற்று, "இயல்பினும் விதியினு னின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரமிகுந்து, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திர விதியால் இடைநிலைத் தகர மெய்யின்மேல் விகுதி ஆகார வுயிரேறி, முடிந்தது.

**அடிக்கப்பட்டான்** என்னுஞ் செயப்பாட்டு வினைமுற்றுப் பகுபதம், அடி என்னும் பகுதியும், படு என்னுஞ் செயப்பாட்டு வினை விகுதியும், அவைகளுக்கு இடையே குச்சாரியையும், அகரச்சாரியையும் பெற்று, "இயல்பினும் விதியினு னின்ற வுயிர் முன்" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியைக் ககரமிகுந்து, "முற்று மற்றொரோவழி" என்னும் விதியாற் சாரியையீற்று உகரங் கெட்டு, "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங்கெட நின்ற ககரமெய்யின்மேலே சாரியை அகர வுயிரேறி, "இயல்பினும் விதியினு னின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் விகுதிப் பகர மிகுந்து, அடிக்கப்படு என அனைத்தும் ஒருபகுதியாக நின்று, ஆன் என்னும் ஆண்பால்விகுதி பெற்று, படு என்பதனுடைய உகரமூர்ந்த டகரமெய் இரட்டித்து, "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியால் உகர வுயிர் கெட்டு, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற டகரமெய்யின்மேல் விகுதி ஆகார வுயிரேறி முடிந்தது.

**நடவான்** என்னும் எதிர்மறைத் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதம், நட என்னும் பகுதியும், ஆன் என்னும் விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்மறை ஆகார இடைநிலையும் பெற்று, அவ்விடைநிலை கெட்டு "இ ஈ ஐவழி" என்னுஞ் சூத்திர விதியால் வகரவுடம்படுமெய்தோன்றி, உடன்மே லுயிர் வந்து" என்றுஞ் சூத்திரவிதியால் அம்மெய்யின்மேல் விகுதி ஆகார வுயிரேறி, முடிந்தது.

**நடக்கின்றிலன்** என்னும் எதிர்மறைத் தெரிநிலைவினை முற்றுப் பகுபதம், நட என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்

பால் விகுதியும், அவைகளுக்கு இடையே நிகழ்காலங்காட்டும் கின்றிடைநிலையும், இல் என்னும் எதிர்மறையிடைநிலையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன" என்னுஞ் சூத்திரவிதியாற் கின்றிடைநிலைக ககரமிகுந்து, "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியால் அவ்விடைநிலையீற் றுகரங் கெட்டு, "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற றகர மெய்யின்மேல் எதிர்மறையிடைநிலை இகரவுயிரேறி, இன்னும் அச்சூத்திரவிதியால் அவ்விடைநிலை யீற்று லகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**எழுந்திட்டான்** என்னும் இறந்தகாலத் தெரிநிலைவினை முற்றுப்பகுபதம், எழு என்னும் பகுதியும், இடு என்னும் பகுதிப் பொருள் விகுதியும், அவைகளுக்கு இடையே துச்சாரியையும் பெற்று "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியைத் தகரமிகுந்து, "வலித்தன் மெலித்தல்" என்னுஞ் சூத்திரவிதியான் மிகுந்த தகரவல்லொற்று மெல்லொற்றாக விகாரப்பட்டு, "முற்றுமற்றொரோவழி" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியையீற்று உகரங்கெட்டு, "உடன்மேல் உயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங்கெட நின்ற தகரமெய்யின்மேல் விகுதி இகரவுயிரேறி, எழுந்திடு என அனைத்தும் ஒரு பகுதியாக நின்று, ஆன் என்னும் ஆண்பால் விகுதி பெற்று, இடு என்பதனுடைய உகரமூர்ந்த டகரமெய் இரட்டி, "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியால் உகர வுயிர்கெட்டு, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதி யால் உகரங்கெடநின்ற டகர மெய்யின்மேல் விகுதி ஆகாரவுயி ரேறி, முடிந்தது.

**கழிந்தன்று** என்னும் இறந்தகாலத் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதம், கழி என்னும் பகுதியும், று என்னும் ஒன்றன்பால், விகுதியும், அவைகளுக்கு இடையே இறந்தகாலங் காட்டுந் தகர இடைநிலையும், இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையே அன்சாரி யையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என் னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரமிகுந்து, 'வலித்தன் மெலித்தல்" என்னுஞ் சூத்திரவிதியால் மிகுந்த தகரவல் லொற்று மெல்லொற்றாக விகாரப்பட்டு, "உடன்மேலுயிர்வந்து"

என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரவல்லொற்றின்மேற் சாரியை அகரவுயிரேறி முடிந்தது. கழிந்தது என்பது பொருள்.

**கழிந்தின்று** என்னும் எதிர்மறைஇறந்தகாலத் தெரிநிலை வினை முற்றுப் பகுபதம், கழி என்னும் பகுதியும், று என்னும் ஒன்றன்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே இறந்தகாலங் காட்டுந் தகர இடைநிலையும், அவ்விடைநிலைக்கும் விகுதிக்கும் இடையே இல் என்னும் எதிர்மறையிடைநிலையும் பெற்று, "இயல் பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியாற் கால இடைநிலைத் தகரமிகுந்து, "வலித்தன் மெலித்தல்" என் னுஞ் சூத்திரவிதியான் மிகுந்த வல்லொற்று மெல்லொற்றாக விகாரப்பட்டு, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதி யால் இடைநிலைத் தகரமெய்யின்மேல் எதிர்மறை யிடைநிலை இகரவுயிரேறி, இடைநிலையீற்று லகரமெய் னகரமெய்யாகத் திரிந்து, முடிந்தது. கழிந்திலது என்பது பொருள்.

**கோடும்** என்னும் எதிர்காலத் தெரிநிலைவினைமுற்றுப் பகு பதம், கொள் என்னும் பகுதியும், தும் என்னும் தன்மைப் பன்மை எதிர்காலவிகுதியும் பெற்று, "வலித்தன் மெலித்தல்" என்னுஞ் சூத்திரத்து 'நீட்டல்' என்னும் விகியாற் பகுதி முத னீண்டு, "குறில்செறியா லள" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதி யீற்று ளகரங்கெட்டு, "னலமுன்றனவும்" என்னுஞ் சூத்திரவிதி யால் விகுதித் தகரம் டகரமாகத் திரிந்து, முடிந்தது.

**அற்று** என்னும் குறிப்புவினைமுற்றுப் பகுபதம், அ என் னும் பகுதியும், று என்னும் ஒன்றன்பால் விகுதியும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்றவுயிர்முன் க ச த ப மிகும்" என் றமையாலே றகரமும் வல்லினமாதலால் விகுதி றகரவல் லொற்று மிகுந்து முடிந்தது.*

**அனையர்** என்னுங் குறிப்புவினைப் பகுபதம், அற்று என் னும் பகுதியும், அர் என்னும் பலர்பால்விகுதியும், அவைகளுக்

* அற்று என்பது இறந்தகாலவினையெச்சப் பகுபதமாயின், அறு பகுதி; உகரமூர்ந்த றகரமெய் இரட்டித்து முடிந்தது எனக் கொள்க.

கிடையே னகரச்சாரியையும், ஐகாரச்சாரியையும் பெற்று, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியை னகரமெய்யின்மேற் சாரியை ஐகாரவுயிரேறி, "இ ஈ ஐ வழி யவ்வும்" என்னுஞ் சூத்திரவிதியால் யகரவுடம்படுமெய் தோன்றி "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அம்மெய் யின்மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

**இன்று** என்னுங் குறிப்புவினைமுற்றுப் பகுபதம், இல் என் னும் பகுதியும், று என்னும் ஒன்றன்பால் விகுதியும் பெற்று, பகுதியீற்று லகரமெய் னகரமெய்யாகத் திரிந்து முடிந்தது.

**உணர்த்துகிற்பன்** என்னும் எதிர்காலத்தெரிநிலை வினை முற்றுப் பகுபதம், உணர்த்து என்னும் பகுதியும், அன் என்னும் ஆண்பால் விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்காலங் காட்டும் பகர இடைநிலையும், பகுதிக்கும் கால இடைநிலைக்கும் இடையேகில் என்னும் ஆற்றலிடைநிலையும் பெற்று, ஆற்றலிடை நிலையீற்று லகரமெய் றகரமெய்யாகத் திரிந்து, "உடன் மேலுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைப் பகரத்தின்மேல் விகுதி அகரவுயிரேறி முடிந்தது.

**செய்** என்னு முன்னிலையேவலொருமை வினைமுற்றுப் பகு பதம், செய் என்னும் பகுதியும், ஆய் என்னு முன்னிலையேவல் விகுதியும் பெற்று, அவ்விகுதி கெட்டு, முடிந்தது.

---

## பெயரெச்சப்பகுபதம்

**அடித்த** என்னும் இறந்தகாலப் பெயரெச்சப்பகுபதம், அடி என்னும் பகுதியும், அ என்னும் பெயரெச்சவிகுதியும், அவைக ளுக்கு இடையே இறந்தகாலங் காட்டுந் தகர இடைநிலையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரமிகுந்து, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைத் தகரமெய்யின் மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**அடிக்கின்ற** என்னும் நிகழ்காலப் பெயரெச்சப் பகுபதம் அடி என்னும் பகுதியும், அ என்னும் பெயரெச்சவிகுதியும், அவைகளுக்கு இடையே நிகழ்காலங்காட்டுங் கின்றிடைநிலையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலைக் ககரமிகுந்து "உயிர்வரினுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலையீற்றுகரங்கெட்டு, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற றகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**அடிக்கும்** என்னும் எதிர்காலப் பெயரெச்சப் பகுபதம், அடி என்னும் பகுதியும், உம் என்னும் எதிர்காலப் பெயரெச்ச விகுதியும், அவைகளுக்கு இடையே குச்சாரியையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதி யாற் சாரியைக் ககரமிகுந்து, "முற்றுமற் றொரோவழி" என்னும் விதியாற் சாரியையீற்றுகரங் கெட்டு, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங்கெட நின்ற ககர மெய்யின்மேல் விகுதி உகரவுயிரேறி, முடிந்தது.

**சிறிய** என்னுங் குறிப்புவினைப் பெயரெச்சப் பகுபதம், சிறுமை என்னும் பகுதியும், அ என்னும் பெயரெச்சவிகுதியும் பெற்று, "ஈறுபோதல்" என்னும் விதியால் மைவிகுதி கெட்டு, "இடையுகர மிய்யாதல்" என்னும் விதியால் இடையுகரம் இகர மாகத் திரிந்து, "இ ஈ ஐ வழி யவ்வும்" என்னுஞ் சூத்திரவிதி யால் யகர வுடம்படுமெய் தோன்றி, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அம்மெய்யின்மேல் விகுதி அகர வுயிரேறி, முடிந்தது.

**உண்ணாத** என்னும் எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெய ரெச்சப் பகுபதம், உண் என்னும் பகுதியும், அ என்னும் பெய ரெச்ச விகுதியும், அவைகளுக்கு இடையே எதிர்மறை ஆகார இடைநிலையும் தகரவெழுத்துப்பேறும் பெற்று, "தனிக் குறின் முன்னொற்று" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதியீற்று ணகர மெய் இரட்டித்து "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திர விதியால் இரட்டித்த ணகர மெய்யின்மேல் இடைநிலை ஆகார

வுயிரேறி, இன்னும் அச்சூத்திரவிதியால் எழுத்துப்பேறாய் வந்த தகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

**செய்கிலாத** என்னும் எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சப்பகுபதம், செய் என்னும் பகுதியும், அ என்னும் பெயரெச்ச விகுதியும், அவைகளுக்கு இடையே, இல் என்னும் எதிர்மறையிடைநிலையும், பகுதிக்கும் இடைநிலைக்கும் இடையே குச்சாரியையும், இடைநிலைக்கும், விகுதிக்கும் இடையே ஆகாரச் சாரியையும் தகரவெழுத்துப்பேறும் பெற்று, "முற்றுமற் றொரோவழி" என்னும் விதியாற் குச்சாரியையின் உகரங் கெட்டு, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற ககரமெய்யின்மேல் இடைநிலை இகரவுயிரேறி, இன்னும் அச்சூத்திரவிதியால் இடைநிலையீற்று லகர மெய்யின்மேற் சாரியை ஆகாரவுயிரேறி, இன்னும் அச்சூத்திர விதியால் எழுத்துப்பேறாய் வந்த தகரமெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

---

## வினையெச்சப்பகுபதம்

**நின்று** என்னும் இறந்தகாலவினையெச்சப் பகுபதம், நில் என்னும் பகுதியும், உ என்னும் வினையெச்ச விகுதியும், அவைகளுக்கு இடையே இறந்தகாலங்காட்டும் றகரஇடைநிலையும் பெற்று, பகுதியீற்று லகரமெய் இடைநிலை றகரமெய்க்கு இனமாகிய னகரமெய்யாகத் திரிந்து, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் இடைநிலை றகரமெய்யின்மேல் விகுதி உகரவுயிரேறி, முடிந்தது.

**நிற்க** என்னும்முக்காலத்திற்குமுரிய வினையெச்சப்பகுபதம், நில் என்னும் பகுதியும், அ என்னும் வினையெச்சவிகுதியும், அவைகளுக்கு இடையே குச்சாரியையும் பெற்று, பகுதியீற்று லகரமெய் றகரமெய்யாகத் திரிந்து, "முற்றுமற் றொரோவழி" என்னும் விதியாற் சாரியையீற்று உகரங் கெட்டு, "உடன்மே லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற ககர மெய்யின்மேல் விகுதி அகரவுயிரேறி, முடிந்தது.

நிற்கின் என்னும் எதிர்கால வினையெச்சப் பகுபதம் நில் என்னும் பகுதியும், இன் என்னும் எதிர்காலவினையெச்ச விகுதியும், அவைகளுக்கு இடையே குச்சாரியையும் பெற்று, பகுதியீற்று லகரமெய் றகரமெய்யாகத் திரிந்து, "முற்றுமற் றொரோவழி" என்னும் விதியாற் சாரியை ஈற்றுகரங் கெட்டு, "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெடநின்ற ககரமெய்யின்மேல் விகுதி இகரவுயிரேறி, முடிந்தது. *

தோன்றியக்கால் என்னும் எதிர்காலவினையெச்சப் பகுபதம், தோன்று என்னும் பகுதியும், கால் என்னும் எதிர்கால வினையெச்ச விகுதியும், அவைகளுக்கு இடையே இன்சாரியையும், அகரச்சாரியையும் பெற்று, "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திரவிதியாற் பகுதியீற்று உகரங் கெட்டு, "உடன்மே லுயிர் வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற றகரமெய்யின்மேற் சாரியை இகரவுயிரேறி, "ஒருமொழி மூவழி" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியையீற்று னகரமெய் குறைந்து, "இ ஈ ஐ வழி" என்னுஞ் சூத்திரவிதியால் யகரவுடம்படு மெய் தோன்றி, "உடன்மேலுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் அம்மெய்யின்மேற் சாரியை அகரவுயிரேறி, 'இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் விகுதிக் ககரமிகுந்து, முடிந்தது. தோன்றிய என்பது இங்கே பெயரெச்சமாகாமை, ககரத்தோற்றத்தால், விளங்கும்.

வறந்தக்கால் என்னும் எதிர்காலவினையெச்சப் பகுபதம், வற என்னும் பகுதியும், கால் என்னும் எதிர்கால வினையெச்ச விகுதியும், அவைகளுக்கு இடையே துச்சாரியையும், அகரச் சாரியையும் பெற்று, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியாற் சாரியைத் தகரமிகுந்து, "வலித்தன் மெலித்தல்" என்னுஞ் சூத்திரவிதியால் மிகுந்த தகரவல்லொற்று மெல்லொற்றாக விகாரப்பட்டு, "முற்றுமற் றொரோவழி" என்னும் விதியாற் சாரியையீற் றுகரங்கெட்டு, "உடன்மே

* நிற்க என்பது வியங்கோள் வினைமுற்றுப் பகுபதமாயின், நில் பகுதி; க வியங்கோள் விகுதி.

லுயிர்வந்து" என்னுஞ் சூத்திரவிதியால் உகரங் கெட நின்ற தகரமெய்யின்மேற்சாரியை அகரவுயிரேறி, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்" என்னுஞ் சூத்திரவிதியால் விகுதி ககர மிருந்து, முடிந்தது.

---

பின்வரும் பொதுப் பகுபதங்களை முடிக்க.

**சாவான்.** (1) உடன்பாட்டுத் தெரிநிலைவினைமுற்று.
(2) எதிர்மறைத் தெரிநிலைவினைமுற்று.
(3) எதிர்கால வினையெச்சம்.

**செய்யாய்:** (1) முன்னிலையேவலொருமை வினைமுற்று.
(2) முன்னிலையொருமை யெதிர்மறை வினைமுற்று.

**செய்யீர்:** (1) முன்னிலையேவற் பன்மை வினைமுற்று,
(2) முன்னிலைப்பன்மை யெதிர்மறை வினைமுற்று.

**நுழைப்ப:** (1) பலர்பாற் படர்க்கை வினைமுற்று.
(2) பலவின்பாற் படர்க்கை வினைமுற்று.
(3) செயவெனெச்சம்.

**அன்ன.** (1) குறிப்பு வினைமுற்று.
(2) குறிப்புவினைப்பெயரெச்சம்.

**செவ்விய:** (1) குறிப்பு வினைமுற்று.
(2) குறிப்புவினைப்பெயரெச்சம்.

**கேட்கும்:** (1) நிகழ்கால எதிர்காலவினைமுற்று
(2) எதிர்காலப் பெயரெச்சம்.

**வந்து:** (1) தன்மையொருமை வினைமுற்று.
(2) இறந்தகால வினையெச்சம்.

**உண்டு:** (1) தன்மையொருமை வினைமுற்று.
(2) இறந்தகால வினையெச்சம்.
(3) அஃறிணையொன்றன்பாற் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று.

தேடிய: (1) இறந்தகால வினைமுற்று.
(2) வியங்கோள் வினைமுற்று.
(3) இறந்தகாலப் பெயரெச்சம்.
(4) எதிர்கால வினையெச்சம்.

பின் வரும் பகுபதங்களை முடிக்க:—

பிறன், அறிஞன், நடை, நட்பு, நுட்பம், பிறிது, ஆய, நண்பு, ஐவர், இன்றி, வெற்பன், செய்ய, எழுவர், எச்சம், அல்லால், வலைச்சி, எற்று, ஒருவன், உழுநன், புலைச்சி, நால்வர், இடைச்சி, வானத்தி, சேர்ந்தது, எனைத்து, அல்லாமல், ஒருத்தி, தருகின்ற, ஓணத்தான், அல்லது, வாராத, மற்றையான், கரியவை, வெந்தது, தச்சிச்சி, கூயிற்று, வண்ணாத்தி, சென்றும், இல்லன, ஏமாந்தேம், கடவுள், மாண்டார், பாணத்தி, நின்றனெம், செய்தென, வாழிய, மலையாட்டி, சொன்னான், சேறு, என்றிசினோர், கனன்று, வேளாட்டி, குன்றிட்டது, சேறி, பொருட்டு, இல்லாத, எண்மர், உண்டனென், செய்தக்கடை, சேறும், உண்ணா, சோகாப்பர், உண்ணாதி, அழுக்கறுப்பான், வந்தன்று, செய்துகொண்டான், உண்டேல், கொணர்ந்தான், உணர்த்துகிற்றும், உண்டலும்.

# சொல்லிலக்கண சூசி

## 1. பெயர்ச்சொல்

### 1. பொருட்பெயர்

1. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப்பெயர்.
2. உயர்திணைப்பெண்பாலொருமைப் படர்க்கைப் பெயர்.
3. உயர்திணைப் பலர்பாற் படர்க்கைப் பெயர்.
4. உயர்திணை யிருகூற்றொருமைப் படர்க்கைப் பொதுப் பெயர். [ஒருவர்.]
5. அஃறிணை யொன்றன்பாற் படர்க்கைப்பெயர்.
6. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைப்பெயர்.
7. அஃறிணையிருபாற் படர்க்கைப்பொதுப்பெயர். [=பால்பகாவஃறிணைப்பெயர் = அஃறிணையியற் பெயர் ]
8. இருதிணையாண்பாலொருமைப் படர்க்கைப் பொதுப் பெயர்.
9. இருதிணைப்பெண்பாலொருமைப் படர்க்கைப்பொதுப் பெயர்.
10. இருதிணை முக்கூற்றொருமைப் படர்க்கைப் பொதுப் பெயர்.
11. இருதிணையிருகூற்றுப் பன்மைப் படர்க்கை[illegible] பெயர்.
12. தன்மையொருமைப் பெயர்.
13. தன்மைப் பன்மைப்பெயர்.
14. முன்னிலையொருமைப் பெயர்.
15. முன்னிலைப் பன்மைப்பெயர்.
16. இருதிணைப்பன்மை மூவிடப்பொதுப்பெயர். [எல்லாம்]

---

## 2. பண்புப்பெயர்

பண்புப்பெயர்.

## 3. தொழிற்பெயர்

தொழிற்பெயர்.

## 4. வினையாலணையும்பெயர்

தெரிநிலைவினையாலணையும்பெயர்.

1. உயிர்திணையாண்பாலொருமைப்படர்க்கையிறந்தகாலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.
2. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.
3. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கை யெதிர் காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.
4. உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கை யிறந்த காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.
5. உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கை நிகழ் காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.
6. உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கை யெதிர் காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர்.
7. உயர்திணைப் பலர்பாற் படர்க்கை யிறந்தகாலத் தெரி நிலை வினையாலணையும் பெயர்.
8. உயர்திணைப் பலர்பாற் படர்க்கை நிகழ்காலத் தெரி நிலை வினையாலணையும் பெயர்.
9. உயர்திணைப் பலர்பாற் படர்க்கை யெதிர்காலத் தெரி நிலை வினையாலணையும் பெயர்.
10. அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும் பெயர்.

11. அஃறிணையொன்றன்பாற் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

12. அஃறிணையொன்றன்பாற்படர்க்கையெதிர்காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

13. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

14. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலைவினையாலணையும்பெயர்.

15. அஃறிணைபபலவின்பாற் படர்க்கையெதிர்காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

16. தன்மையொருமை யிறந்தகாலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

17. தன்மையொருமை நிகழ்காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

18. தன்மையொருமையெதிர்காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

19. தன்மைப்பன்மை யிறந்தகாலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

20. தன்மைப்பன்மை நிகழ்காலத் தெரிநிலைவினையாலணையும்பெயர்.

21. தன்மைப்பன்மை யெதிர்காலத் தெரிநிலைவினையாலணையும் பெயர்.

22. முன்னிலையொருமை யிறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும்பெயர்.

23. முன்னிலையொருமை நிகழ்காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர்.

24. முன்னிலையொருமை யெதிர்காலத் தெரிநிலை வினையாலணையும் பெயர்.

25. முன்னிலைப்பன்மை யிறந்தகாலத் தெரிநிலை வினையா லணையும் பெயர்.
26. முன்னிலைப்பன்மை நிகழ்காலத் தெரிநிலை வினையா லணையும் பெயர்.
27. முன்னிலைப்பன்மை யெதிர்காலத் தெரிநிலை வினையா லணையும் பெயர்.

## குறிப்புவினையாலணையும்பெயர்

1. உயர்திணை யாண்பாலொருமைப் படர்க்கைக்குறிப்பு வினையாலணையும் பெயர்.
2. உயர்திணைப்பெண்பாலொருமைப் படர்க்கைக் குறிப்பு வினையாலணையும் பெயர்.
3. உயர்திணைப் பலர்பாற் படர்க்கைக் குறிப்புவினையா லணையும் பெயர்.
4. அஃறிணையொன்றன்பாற் படர்க்கைக் குறிப்புவினையா லணையும் பெயர்.
5. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைக் குறிப்புவினையா லணையும் பெயர்.
6. தன்மையொருமைக் குறிப்புவினையாலணையும்பெயர்.
7. தன்மைப் பன்மைக் குறிப்புவினையாலணையும்பெயர்.
8. முன்னிலையொருமைக்குறிப்புவினையாலணையும்பெயர்.
9. முன்னிலைப்பன்மைக்குறிப்புவினையாலணையும்பெயர்.

பெயர்ச்சொன்னிலை நான்கு வகைப்படும்:—

(1) வேற்றுமையுருபேற்று வினைப்பயனில்லையாயினும் பெயர்ப்பயனிலையாயினுங் கொள்வது.

(2) வேற்றுமையுருபேலாது எழுவாய்க்குப் பயனிலை யாய் வருவது.

(3) வினைமுற்றுக்குப் பயனிலையாய் வருவது.

(4) பெயரை விசேடித்து நிற்பது.

---

## 2. வினைச்சொல்

### 1. முற்றுவினை

#### தெரிநிலை வினைமுற்று

1. உயர்திணை யாண்பாலொருமைப் படர்க்கை யிறந்த காலத் தெரிநிலைவினைமுற்று.
2. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலைவினைமுற்று.
3. உயர்திணை யாண்பாலொருமைப் படர்க்கை யெதிர் காலத் தெரிநிலைவினைமுற்று.
4. உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கை யிறந்த காலத் தெரிநிலைவினைமுற்று.
5. உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கை நிகழ் காலத் தெரிநிலைவினைமுற்று.
6. உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கை யெதிர் காலத் தெரிநிலைவினைமுற்று.
7. உயர்திணைப் பலர்பாற் படர்க்கை யிறந்தகாலத் தெரி நிலைவினைமுற்று.
8. உயர்திணைப் பலர்பாற் படர்க்கை நிகழ்காலத் தெரி நிலை வினைமுற்று.
9. உயர்திணைப் பலர்பாற் படர்க்கை யெதிர்காலத் தெரி நிலை வினைமுற்று.
10. அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று.
11. அஃறிணையொன்றன்பாற் படர்க்கை நிகழ்காலத் தெரி நிலைவினைமுற்று.
12. அஃறிணையொன்றன்பாற் படர்க்கையெதிர்காலத் தெரி நிலைவினைமுற்று.

13. அஃறிணைப்பலவின்பாற் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று.

14. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை நிகழ்காலத் தெரிநிலைவினைமுற்று.

15. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை யெதிர்காலத் தெரிநிலைவினைமுற்று.

16. தன்மையொருமை யிறந்தகாலத் தெரிநிலைவினை முற்று.

17. தன்மையொருமை நிகழ்காலத் தெரிநிலைவினைமுற்று.

18. தன்மையொருமையெதிர்காலத் தெரிநிலைவினைமுற்று.

19. தன்மைப்பன்மை யிறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று.

20. தன்மைப்பன்மை நிகழ்காலத் தெரிநிலைவினைமுற்று.

21. தன்மைப்பன்மை யெதிர்காலத் தெரிநிலைவினைமுற்று.

22. முன்னிலையொருமை யிறந்தகாலத் தெரிநிலைவினை முற்று.

23. முன்னிலையொருமை நிகழ்காலத் தெரிநிலைவினை முற்று.

24. முன்னிலையொருமை யெதிர்காலத் தெரிநிலைவினை முற்று.

25. முன்னிலைப்பன்மையிறந்தகாலத்தெரிநிலைவினைமுற்று.

26. முன்னிலைப்பன்மை நிகழ்காலத் தெரிநிலைவினைமுற்று.

27. முன்னிலைப்பன்மையெதிர்காலத் தெரிநிலைவினைமுற்று.

28. முன்னிலையேவலொருமை யெதிர்காலத் தெரிநிலைவினை முற்று.

29. முன்னிலையேவற் பன்மை யெதிர்காலத் தெரிநிலைவினை முற்று.

30. இருதிணையைம்பால் மூவிடத்தெதிர்கால வியங்கோள் வினைமுற்று.

31. பலர்பாலொழிந்த நாற்பாற்படர்க்கை நிகழ்காலவெதிர் காலத் தெரிநிலைவினைமுற்று. [செய்யும்.]

## குறிப்புவினைமுற்று

1. உயர்திணை யாண்பாலொருமைப் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று.
2. உயர்திணைப் பெண்பாலொருமைப் படர்க்கைக்குறிப்பு வினைமுற்று.
3. உயர்திணைப் பலர்பாற் படர்க்கைக் குறிப்புவினைமுற்று.
4. அஃறிணை யொன்றன்பாற் படர்க்கைக் குறிப்புவினை முற்று.
5. அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைக் குறிப்புவினை முற்று.
6. உயர்திணை முப்பாற் படர்க்கைக் குறிப்புவினைமுற்று.
7. அஃறிணையிருபாற் படர்க்கைக் குறிப்புவினைமுற்று.
8. தன்மையொருமைக் குறிப்புவினைமுற்று.
9. தன்மைப் பன்மைக் குறிப்புவினைமுற்று.
10. முன்னிலையொருமைக் குறிப்புவினைமுற்று.
11. முன்னிலைப் பன்மைக் குறிப்புவினைமுற்று.

தெரிநிலைவினைமுற்றுச் சொன்னிலை மூன்று வகைப்படும்:—

(1) எழுவாய்க்குப் பயனிலையாய் வருவது.
(2) பெயர்ப்பயனிலை கொள்வது.
(3) வினையெச்சப்பொருள் தந்து வினைகொள்வது.

குறிப்புவினைமுற்றுச் சொன்னிலை நான்கு வகைப்படும்:—

(1) எழுவாய்க்குப் பயனிலையாய் வருவது.
(2) பெயர்ப்பயனிலை கொள்வது.
(3) வினையெச்சப்பொருள் தந்து வினைகொள்வது.
(4) பெயரெச்சப்பொருள் தந்து பெயர்கொள்வது.

## 2. பெயரெச்சம்

### தெரிநிலைவினைப் பெயரெச்சம்

1. இறந்தகாலத் தெரிநிலைவினைப் பெயரெச்சம்.
2. நிகழ்காலத் தெரிநிலைவினைப் பெயரெச்சம்.
3. எதிர்காலத் தெரிநிலைவினைப் பெயரெச்சம்.
4. எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம்.

### குறிப்புவினைப் பெயரெச்சம்

1. குறிப்புவினைப் பெயரெச்சம்.
2. எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம்.

பெயரெச்சச் சொன்னிலை: வினைமுதற்பெயர், கருவிப் பெயர், இடப்பெயர், தொழிற்பெயர், காலப்பெயர், செயப்படுபொருட்பெயர் என்னும் அறுவகைப் பெயர்களுள் ஒன்று கொள்வது.

---

## 3. வினையெச்சம்

### தெரிநிலைவினை வினையெச்சம்

1. இறந்தகாலத் தெரிநிலைவினை வினையெச்சம்.
2. முக்காலத் தெரிநிலைவினை வினையெச்சம்.
3. எதிர்காலத் தெரிநிலைவினை வினையெச்சம்.
4. எதிர்மறைத் தெரிநிலைவினை வினையெச்சம்.

### குறிப்புவினை வினையெச்சம்

1. குறிப்புவினை வினையெச்சம். [= வினையெச்சக்குறிப்பு.]
2. எதிர்மறைக் குறிப்புவினை வினையெச்சம்.

வினையெச்சச் சொன்னிலை தன்கருத்தாவின் வினையாயினும் பிறகருத்தாவின் வினையாயினுங் கொள்வது.

---

## 3. இடைச்சொல்

1. வேற்றுமையுருபிடைச்சொல்.
2. இடைநிலையுருபிடைச்சொல்.
3. விகுதியுருபிடைச்சொல்.
4. சாரியையுருபிடைச்சொல்.
5. உவமவுருபிடைச்சொல்.
6. தத்தம்பொருளுணர்த்துமிடைச்சொல்.
7. இசைநிறையிடைச்சொல்.
8. அசைநிலையிடைச்சொல்.
9. ஒலிக்குறிப்பிடைச்சொல்.
10. அச்சக்குறிப்பிடைச்சொல்.
11. விரைவுக்குறிப்பிடைச்சொல்.

---

## 4. உரிச்சொல்

1. இசையுரிச்சொல்.
2. குறிப்புரிச்சொல்.
3. பண்புரிச்சொல்.

அல்லது

1. குணப்பண்புரிச்சொல்.
2. தொழிற்பண்புரிச்சொல்.

உரிச்சொன்னிலை பெயரோடும் வினையோடுங் கொள்வது.

---

## இலக்கணங் கூறிய உதாரணங்கள்

### அரசன் வந்தான்

அரசன் என்பது உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப்பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது வந்தான் என்னும் வினைப்பயனிலைகொண்டது. வந்தான். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று; அது அரசன் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

### இந்திரன் அசுரரைக் கொன்று தேவரைக் காத்தான்

இந்திரன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப்பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது காத்தான் என்னும் வினைப்பயனிலை கொண்டது. அசுரர். எ - து. உயர்திணைப் பலர்பாற் படர்க்கைப்பெயர்; செயப்படுபொருளில் வந்த ஐ என்னும் இரண்டனுருபேற்றது; அது கொன்று என்னும் வினைப்பயனிலை கொண்டது. கொன்று. எ - து. இறந்தகாலத் தெரிநிலைவினை வினையெச்சம்; அது காத்தான் என்னுந் தன் கருத்தாவின் வினைகொண்டது. தேவர். எ - து. உயர்திணைப் பலர்பாற் படர்க்கைப் பெயர்; செயப்படுபொருளில் வந்த ஐ யென்னும் இரண்டனுருபேற்றது; அது காத்தான் என்னும் வினைப்பயனிலைகொண்டது காத்தான் எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கையிறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று; அது இந்திரன் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

### என்று வந்தாய்

என்று. எ - து. ஏழாம்வேற்றுமை காலப்பொருளுணர நின்ற இடைச்சொல். வந்தாய். எ - து. முன்னிலை யொருமை யிறந்த காலத் தெரிநிலை வினைமுற்று; அது நீ என்னுந் தோன்றா எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது

### யான் பிறந்தவூர் சிதம்பரம்

யான். எ - து. தன்மையொருமைப்பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது பிறந்த என்னும் வினைப்பய

னிலை கொண்டது. பிறந்த. எ - து. இறந்தகாலத் தெரிநிலை வினைப்பெயரெச்சம்; அது ஊர் என்னும் இடப்பெயர் கொண்டது. ஊர். எ - து. பால்பகாவஃறிணைப் படர்க்கைப்பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது சிதம்பரம் என்னும் பெயர்ப் பயனிலை கொண்டது. சிதம்பரம். எ - து. பால்பகாவஃறிணைப் படர்க்கைப் பெயர்; அது ஊர் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

## இங்கு வந்துபோயினன் கொற்றன்

இங்கு. எ - து. ஏழாம்வேற்றுமையிடப்பொருளுணர நின்ற இடைச்சொல். வந்து. எ - து. இறந்தகாலத் தெரிநிலைவினை வினையெச்சம்; அது போயினன் என்னுந் தன்கருத்தாவின் வினைகொண்டது. போயினன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கை யிறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று; அது கொற்றன் என்னும் பெயர்ப்பயனிலை கொண்டது. கொற்றன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப் பெயர்; அது போயினன். என்னுந் தெரிநிலைவினைமுற்றுக்குப் பயனிலையாய் வந்தது.

## இந்நூல் செய்தான் ஆசிரியனகத்தியன்

இ. எ - து. சுட்டிடைச்சொல். நூல். எ - து. பால்பகாவஃறிணைப் படர்க்கைப்பெயர்; செயப்படுபொருளில் வந்த ஐ என்னும் இரண்டனுருபு தொகப்பெற்றது; அது செய்தான் என்னும் வினைப்பயனிலை கொண்டது. செய்தான். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கையிறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று; அது அகத்தியன் என்னும் பெயர்ப்பயனிலை கொண்டது. ஆசிரியன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப் பெயர்; அது அகத்தியன் என்னும் பெயரை விசேடித்து நின்றது. அகத்தியன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப் பெயர்; அது செய்தான் என்னுந் தெரிநிலைவினை முற்றுக்குப் பயனிலையாய் வந்தது.

## மழை பெய்யக் குளநிறைந்தது

மழை. எ - து. பால்பகாவஃறிணைப் படர்க்கைப்பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது பெய்ய என்னும் வினைப்

பயனிலை கொண்டது. பெய்ய. எ - து. முக்காலத்தெரி நிலைவினை வினையெச்சம்; அது, இங்கே காரணப்பொருளில் வருதலால், இறந்தகாலத்தது, அது நிறைந்தது என்னும் பிற கருத்தாவின் வினைகொண்டது குளம். எ - து. பால்பகாவஃறி ணைப் படர்க்கைப் பெயர், திரிபின்மையாகிய எழுவாயுருபேற் றது; அது நிறைந்தது என்னும் வினைப்பயனிலை கொண்டது. நிறைந்தது. எ - து. அஃறிணையொன்றன்பாற் படர்க்கை இறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று; அது குளம் என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

## சூரியனுதிக்க வந்தான்

சூரியன். எ - து. அஃறிணையொன்றன்பாற் படர்க்கைப் பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது உதிக்க என்னும் வினைப்பயனிலை கொண்டது உதிக்க. எ - து. முக் காலத் தெரிநிலைவினை வினையெச்சம்; அது, இங்கே இது நிகழா நிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருள்பட வருதலால், நிகழ் காலத்தது, அது வந்தான் என்னும் பிறகருத்தாவின் வினை கொண்டது. வந்தான். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கையிறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று; அது அவன் என் னுந் தோன்ருஎழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

## கற்க வந்தேன்

கற்க. எ - து. முக்காலத்தெரிநிலைவினை வினையெச்சம்; அது; இங்கே காரியப்பொருளில் வருதலால், எதிர்காலத்தது; அது வந்தேன் என்னுந் தன்கருத்தாவின் வினைகொண்டது. வந்தேன். எ - து. தன்மையொருமை இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று; அது யான் என்னுந் தோன்ருஎழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

## படிக்குந்தோறும் அறிவு வளரும்

படிக்கும். எ - து. எதிர்காலத் தெரிநிலைவினைப் பெயரெச் சம்; அது பெயர்த்தன்மை எய்திநின்ற தோறும் என்னும் இடைச் சொற்கொண்டது. தோறும். எ - து. தொழிற்பயில்வுப்பொரு

ளில் வந்த இடைச்சொல். அறிவு. எ - து. பண்புப்பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது வளரும் என்னும் வினைப்பயனிலைகொண்டது. வளரும். எ - து. பலர்பாலொழிந்த நாற்பாற்படர்க்கை; நிகழ்காலவெதிர்காலத் தெரிநிலைவினை முற்று; அது அறிவு என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

## நம்பி காலொடிந்து வீழ்ந்தான்

நம்பி. எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப் பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுருபேற்றது; அது வீழ்ந்தான் என்னும் வினைப்பயனிலை கொண்டது. கால். எ - து. பால்பகா வஃறிணைப் படர்க்கைப்பெயர்; திரிபின்மையாகிய எழுவாயுரு பேற்றது; அது ஒடிந்து என்னும் வினைப்பயனிலை கொண்டது. ஒடிந்து. எ - து. இறந்தகாலத் தெரிநிலைவினை வினையெச்சம்; அச்சினைவினையெச்சம் வீழ்ந்தான் என்னும் முதல்வினை கொண்டது. வீழ்ந்தான். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கையிறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று; அது நம்பி என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

## ஆசிரியனைக் கண்டனன் வணங்கினன்

ஆசிரியன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கைப்பெயர்; செயப்படுபொருளில் வந்த ஐ என்னும் இரண்டனுருபேற்றது; அது கண்டனன் என்னும் வினைப்பயனிலை கொண்டது. கண்டனன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கை இறந்தகாலத் தெரிநிலைவினைமுற்று; அது இங்கே கண்டு அல்லது கண்டனனாகி என வினையெச்சப்பொருளைத் தருதலால், வினையெச்சம்; அது வணங்கினன் என்னுந் தன்கருத்தாவின் வினைகொண்டது. வணங்கினன். எ - து. உயர்திணையாண்பாலொருமைப் படர்க்கை இறந்தகாலத் தெரிநிலை வினைமுற்று; அது அவன் என்னுந் தோன்றாஎழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது.

---

தழைவிரிகடுக்கைமாலைத்தனிமுதல்சடையிற்சூடுங்
குழவிவெண்டிங்களிற்றகோட்டதுகுறையென்றெண்ணிப்
புழைநெடுங்கரத்தாற்பற்றிப்பொற்புறவிணைத்துநோக்கு
மழைமதக்களிற்றின்செய்யமலரடிசென்னிவைப்பாம்.

—நைடதம்.

இச்செய்யுளில்: "எண்மூவெழுத்து" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "இயல்பினும் விதியினும்" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "இ ஈ ஐ வழி" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "உடன்மே லுயிர்" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "உயிர்வரி னுக்குறள்" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "அல்வழி இ ஐ" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர் எது? "பொதுப்பெய ருயர்திணைப் பெயர்கள்" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த தொடர் எது? "செய்திய வென்னும் வினையெச்சம்" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த தொடர் எது? "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "மூன்று மாறுபெண்" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த தொடர் எது? "நெடிலோடுயிர்த்தொடர்" என்னுஞ் சூத்திரவிதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "மவ்வீறொற்றழிந்து" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர்கள் எவை? "ல ள வேற்றுமையிற் றடவும்" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர் எது? "ன ல முன் றனவும்"; என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர் எது? "இடையுரி வடசொலின்" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர் எது? "அத்திணகரம்" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர் எது? "இயல்பின் விகார மும்" என்னுஞ் சூத்திர விதிப்படி புணர்ந்த தொடர் எது?

இச்செய்யுளில்: வினைத்தொகையுண்டாயின், அஃதெது? அஃதெப்படி விரியும்? வேற்றுமைத்தொகைகள் எவை? அவை எப்படிவிரியும்? பண்புத்தொகைகள் எவை? அவை எப்படி விரியும்? உவமைத்தொகைகள் எவை? அவை எப்படி விரியும்? வேற்றுமை விரித்தொடர்கள் எவை? எழுவாய்த்தொடர்கள்

எவை? எவ்வெவ்வேற்றுமையுருபுகள் எவ்வெட் பயனிலை கொண்டன? பெயரெச்சங்கள் எவை? எவ்வெப்பெயரெச்சம் எவ்வெப் பெயர் கொண்டது? வினையெச்சங்கள் எவை? எவ்வெவ்வினையெச்சம் எவ்வெவ்வினைகொண்டது? ஆகுபெயருண்டாயின், அஃதெது? அஃது என்ன ஆகுபெயர்?

இச்செய்யுளில் எழுவாய் எது? பயனிலை எது? செயப்படுபொருள் எது? பயனிலைக்கு விசேடணம் யாது? செயப்படுபொருட்கு விசேடணம் யாது?

---

## உபாத்தியாயருக்கு அறிவித்தல்

உபாத்தியாயர், நாடோறும் தாம் மாணாக்கர்களுக்குச் சொல்லும் பாடத்தை முன்னரே வீட்டிலே அவதானத்தோடு வாசித்துச், செவ்வையாக ஆராய்ந்து, உள்ளத்தில் அமைத்துக்கொள்ளல் வேண்டும்.

---

## மாணாக்கர்களுக்கு அறிவித்தல்

1. மாணாக்கர்கள் நாடோறும், தங்களுக்குக் குறிக்கப்பட்ட பாடத்தை, உபாத்தியாயரிடத்தே கேட்கு முன்னரே வீட்டிலே அவதானத்தோடு பலமுறை வாசித்துச், சூத்திரத்தை நெட்டுருப்பண்ணிக் கொள்ளல்வேண்டும்.

2. அவ்வவ் விதிகளுக்கு உரையிலே காட்டப்பட்ட உதாரணங்களில் அவ்வவ்விதிகளை நன்முக விளக்கப் பயிலல் வேண்டும்.

3. பரீக்ஷை வினாக்களை வாசித்து, ஒவ்வொரு வினாவுக்கும் விடை தங்களுக்குத் தோன்றுகின்றதோ தோன்றவில்லையோ என்று ஆராய்ந்துகொண்டு, பின்பு அவ்வவ் வினாவின் முதலிலே குறிக்கப்பட்ட எண்ணையுடைய சூத்திரத்தையும் அதனுரையையும், வாசித்து, விடை இது என்று நிச்சயித்து உள்ளத்தமைத்துக் கொள்ளல வேண்டும்.

4. வித்தியாசாலையிலே உபாத்தியாயரிடத்தே சூத்திர பாடத்தை ஒப்பித்து, அதைப் பதச்சேதம் பண்ணி, அதற்குப் பொருள் தங்கள் வசனத்தினலே சொல்லல் வேண்டும்.

5. உபாத்தியாயர் வினவும் வினாவுக்கு விடை தங்கள் வசனத்தினலே சொல்லிக்கொண்டு, பின்பு அதற்குச் சூத்திரத்தை அல்லது சூத்திரபாகத்தைப் பிரமாணமாகச் சொல்லல்வேண்டும்.

6. அப்பியாச வினுக்களுக்கு விடை காகிதத்திலாயினும் கற்பலகையிலாயினும் எழுதி, உபாத்தியாயருக்குக் காட்டித் திருத்துவித்து, அப்படித் திருத்தப்பட்டதைத் தாங்கள் பார்த்து உள்ளத்தமைத்துக் கொள்ளல் வேண்டும்.

7. தாங்கள் வாசிக்கும் வசன வடிவாகிய இலக்கியத்திலுஞ் செய்யுள்வடிவாகிய இலக்கியத்திலும் இலக்கண முடிபும் அதற்குச் சூத்திரப் பிரமாணமுஞ் சொல்லப் பழகல் வேண்டும்.

8. தப்பாது இடையிடையே பழம் பாடங்களைச் சிந்தித்தல் வேண்டும்.

9. மாணுக்கர்கள், ஒருவரை ஒருவர் வினுவியும், வினுவிய வினுவுக்கு விடை சொல்லியும், பயிலல்வேண்டும்.

10. பேசும்பொழுதும் எழுதும் பொழுதும் இலக்கணப் பிழையறப் பேசவும், எழுதவும் பழகல் வேண்டும். பிழை படப் பேசினும் எழுதினும், இலக்கணக் கல்வியாற் பயன் ஒரு சிறிதும் இல்லை. பேசும்பொழுதும் எழுதும்பொழுதும், எல்லாருக்கும் பொருள் விளங்கத்தக்க இயற்சொற்களை வழங்கல் வேண்டும்?

11. இலக்கணப் பிழையுடைய வசனங்களையுஞ் செய்யுள்களையுந் திருத்தப் பழகல் வேண்டும்.

---

# நன்னூற்சூத்திர அகராதி

சூத்திரவகராதி முற்றிற்று.

# விசேஷ விஷய அகராதி

| விஷயம். | பக்கம். |
|---|---|

| விஷயம். | பக்கம். |
|---|---|

| விஷயம். | பக்கம். | விஷயம். | பக்கம். |
|---|---|---|---|

**விசேஷ விஷய அகராதி முற்றிற்று.**

| | ரூ. | அ. |
|---|---|---|
| திருமுருகாற்றுப்படையுரை | 0 | 5 |
| தருக்கசங்கிரகம், அன்னம்பட்டியம் | 0 | 8 |
| திருவள்ளுவர் பரிமேலழகருரை | 5 | 0 |
| நன்னூல் விருத்தியுரை | 3 | 8 |
| நன்னூற்காண்டிகையுரை | 3 | 12 |
| சூடாமணி நிகண்டு 12-தொகுதியும் உரையுடன் (முதலிரண்டுதொகுதிகள் சொற்பொருளுடன்) | 2 | 0 |
| ஷை 10-தொகுதியுரை | 1 | 4 |
| ஷை 11, 12 தொகுதியுரை | 0 | 12 |
| இலக்கணக்கொத்துரை, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கணவிளக்கச் சூறாவளி | 1 | 8 |
| இலக்கணச்சுருக்கம் | 1 | 0 |
| தொல்காப்பியம் (சேனாவரையம்) | 3 | 0 |
| ஆறுமுகநாவலர் சரித்திரம் (வசனம்) | 1 | 4 |
| நாவலர் பிரபந்தத்திரட்டு | 2 | 0 |
| நீதிநூற்றிரட்டு | 1 | 8 |
| சன்மார்க்க போதினி 9-பாகங்களும் சேர்ந்தது | 1 | 0 |
| திருவிசைப்பா உரையுடன் | 2 | 0 |
| நீதிநெறிவிளக்கம் உரை | 0 | 8 |
| பெரியநாயகியம்மை விருத்தம், பிக்ஷாடன நவமணி மாலை உரை | 0 | 4 |
| முதற்சைவவினாவிடை | 0 | 3 |
| இரண்டாஞ்சைவவினாவிடை | 0 | 10 |
| முதற்பாலபாடம் | 0 | 3 |
| இரண்டாம்பாலபாடம் | 0 | 5 |
| மூன்றாம்பாலபாடம் | 0 | 10 |
| நான்காம்பாலபாடம் குறிப்புரையும் அப்பியாச வினாக்களும் | 1 | 12 |

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள்
வித்தியாநுபாலன அச்சகம்,
நெ. 300, தங்கசாலைவீதி, சென்னை.